விஷகாசசலின குணம்

ஒருபுறங குளிரும், ஒருபுறங காயும, தேகததில விஷம ஏறு வதுபோற் றோனறும.

நெலவி, தானறி, வேபபீாககு, சீநதிறறண்டு, மலலி, முததக் காசு, இவைகள் வேளை ஒனறுககு ¼-பல வீதம சிதைதது-2-நாழி தண்ணியிறபோட்டு கியாழஞ்செயது கொடுககத தீரும

சிறுவழுதலை, சீநதில, தாமரை இவைகளின வோ முததககாசு, உலாநதஇஞசி இவையெலலாம வகைககுபபலம-1, சிதைதது 2-நாழி ஜலததிற போட்டு கியாழஞ் செய்து கொடுககத தீரும.

கோழியவரை வோ, சிததிரமூலம, வேபபீாககு, சிறுபுள்ளடி, பறபாடகம, உலாநத இஞசி, செவியம வகைககுப பலம-½, இவை கள் முன்போற் கியாழஞ்செய்து கொடுக்கத் தீரும.

உலர்ந்த இஞ்சி, கடுககாய, நிலவேமபு, படைசீநதி, பேய்பபுடல் வகைக்குப்பலம-¼, முனபோற கியாழஞ் செய்து கொடுககவும.

ஆடாதோடையீாககு, நிலவேமபு, சீநதிற்றணடு. பேய்ப்புடல், பேய்பபீர்ககு, வோபபடடை, பாலையரிசி வகைக்குபபலம-¼, முன போற கியாழஞ்செய்து கொடுகக தீரும.

கொப்பகாலத்திற் காணுங காசசலுககு

சீரா, செஙகழுநீா, வேபபீாக்கு, சிறுவழுதலை வோ, கோஙகலை வின் வோ, உலாநத இஞ்சி, மலலி வகைகது-¼ பல வீதங கியாழஞ் செயது சககரை கலநது கொடுக்க தீருமு

குளிர் காசசலுக்கு

கோஷ்டம, திப்பிலி, கணடஙகததிரி, சிறுதேககு, நிலகருமிழ், உலாநத இஞசி, நிலவேமபு, முததக்காசு, சிறுகாஞ்சொரி, சீநதில், பறபாடக வகைககுப பலம-1, இடிதது இரண்டு * நாழி ஜலததிற் போட்டு அரைககாறபடியாய வறறவைததுக கொடுககவும. இநதப் படி 6-வேளை கொடுககத தீரும.

பெருநதும்பையை யிடிதது பிட்டவிதது மாகாணி படிசசாறு பிழிநது அதறகு நிகா தேனவிட்டு இநதபபடி மூன்றுபொழுது கொடுக்கத தீரும.

ஆடாதோடை, தூதுளை, முத்தக்காசு, சுறுவழுதலை, பற்பாட கம, பங்கம்பாளை, சுக்கு, சநதனம், நன்னாரிவோ் வகைக்குப் பலம-1

* நாழியெனபது படியென வறியவும்.

இடித்து 2-படி தண்ணியிற்போட்டு ¼-படியாய வற்றவைத்து இந்தப் படி ஆறுபோது கொடுத்தாலதீரும. இவைகளை யெல்லாம இச்சா பத்தியம.

சீநதில, நிலவேமபு, சிறுகாஞ்சோரி, மலலி, வட்டததிப்பிலி, விளாமிச்சம, வேலிபபருததி, வெட்டிவேர, பறபாடகம, சுககு வகைககு 1-பலம இடிததுபபோட்டு முனபோற கியாழஞ செயது கொடுகக நீஙகும.

பேய்பபுடல, முததககாசு, பறபாடகம, சீநதிறறணடு வகைககு ¾-பலம இடிததுப போட்டு முனபோற கியாழஞ் செய்து கொடுக்க நீஙகும

தூதுளை, சமூலம, நனஞாரிவேர, முததககாசு, திரிபலை, விழிப் பட்டை, வெட்டிவேர, விலாமிசசுவேர, தாமரைககிழஙகு இவைகளை வேளை ஒனறுககு ¼-விராகனிடை 3-வீத மிடிததது இரணடுபடி தணணீரிறபோட்டு ¾-படியாய வறறவைதது ஆறுபோது கொடுகக நீஙகும.

சுககு, செவியம, மலலி, கறகணடு, பறஙகிபபட்டை, பேயப புடல, திபபிலி, மூலம, லவஙகம, அதிமதுரம, முததககாசு, வெட்டி வேர, விலாமிசசுவேர், கணடஙகததிரி, சீநதில பறபாடகம, நன ஞரி, தூதுளை, ஆடாதோடையிலை வகைககு விராகனிடை 3-வீதம இடிததுப போட்டு முனபோற கியாழஞ செய்து கொடுககத தீரும.

சணபகபபூ, சாலதிரபேதி, வெட்டிவேர, விலாமிசசுவேர, தக் கோலம, நெறபொறி, சுககு இவைகளை வகைககு விராகனிடை-1, வீதம ½-படி மாதுளமபழசசாறறி லரைதது கலககி கொடுககத தீரும.

சீரகமும, குருநதொட்டிவேரும வகைககுப பலம-1, கியாழஞ செய்து ஆறுபோது கொடுககத தீரும.

மிளகாயிலை-9, மிளகு-7, வெளளைபபூணடு-1, இவைகளை யரை தது ஆறுபோது கொடுககத தீரும.

நாரரகரநதைவேர், துளசிவேர, சுககு வகைக்குபபலம-1, இடி தது இரணடுபடி தணணீரிற போட்டு ½-படியாய் வறறவைததுக கொடுககவும. இநதப்படி ஆறுபோது கொடுககத தீரும.

விடாகுளிரநத சுரததிறகு

கரிபபான ஒருபிடி, வேபபிரககு ஒருபிடி, மூனறுய் நறுக்கிகாய் ந்த சட்டியிற போட்டு பொனனிறமாக வெதுபபி அதில ஒருபிடி

பிளகைப்போட்டு வறுத்து வெளுனொளி ஒருபூண்டு கிளளிப்போட்டு கரிபபானிலே நொசசியிலே வகைககொரு கொட்டைப பாககளவு அரைத்துபபோட்டு ஒருபடி நீரவிட்டுக காய்ச்சிக் காறபடியாய வறற வைத்துககொடுககவும இநதபபடி மூனறுநாள் இருபோது கொடுககத தீரும.

## திரிதோஷசுரத்திற்கு

சநதனம, அதிமதுரம, லவஙகம, வெட்டிவேர், விலாமிச்சம வேர, மலலி, சுககு, நிலவேமபு, பறபாடகம, சீநதிறறணடு, செவியம இவைகளை ஓர நிறையாயிடித்து வேளை ஒனறுககு ஒருபலததூள இரண்டுபடி தண்ணியிறபோட்டுக காறபடியாய வறறவைதது ஆறு போது கொடுககத தீரும.

வட்டததிருப்பி, தூதுளம, நனனாரி, சிறுவழுதலை, சிறுநாகனு சோரியிடிதது 6-போது ஒருவேளைககு அரை பலத்தூள ஒருபடி ஜலததிலபோட்டுக காறபடியாய் வறறவைதது வடிகட்டி அதில திப பிலி விராகனிடை-1, வெதுபபிப பொடிததுபபோட்டுக கொஞசந தேனவிட்டு இநதபபடி கொடுககத தீரும.

தூதுளம, கணடஙகததிரி, நிலவேமபு சீநதில, சிறுகாஞசோரி, நனனாரிமுளளி, ஆடாதோடை, விஷ்ணுகாநதி இவைகளினவேர முத தககாசு, கொததமல்லி, சிததிரததை, செவியம, திரிகடுகு, திரிபலை பேயபுடல், கோஷடம, சனனலவஙகம வகைககு கழஞசு-6, இடிதது ஆறுபஙகு செயது ஒரு பஙகை இரணடுபடி சலததிற்போட்டு காற படியாய வறறவைதது கொடுககவும இநதபபடி ஆறுபோது கொடுக கத தீரும்

கழற்சி, நனனாரி, பேராமுட்டி, விலவம இவைகளினவேர முத தககாசு, பேய்ப்புடல், செவவலலிககொடி, செஙகழுநீர்க கிழஙகு, இவைகள் நாழி ஒனறுககு அரைபபலவீதமிடிதது இரண்டுபடி சலத திறபோட்டு அரைக்காறபடியாய் வறறவைதது அதற்குநிகா இஞசிச சாறு கூட்டிககொடுக்க இநதபபடி மூனறுபோது கொடுககத தீரும்.

சீநதில், தூதுளை, காஞசோரி, நன்னாரி, ஆடாதோடை, விஷ்ணு காநதி இவைகளினவேர் கண்டஙகததிரி, நிலவேம்பு, முததககாசு, மலலி, அரததை, செவியம, திரிகடுகு, திரிபலை, பேயபபுடல், கோஷ் டம், சனனலவங்கம் வகைககு விராகனிடை-3, இவைகளை யிடிதது இரண்டுபடி தண்ணிறபோட்டு காற்படியாய் வற்றவைததுக்கொடுகக வும் இநதப்படி ஆறுபோது கொடுக்கத தீரும.

சநதனம, பறபாடகம, வெட்டிவோ, விலாமிசசுவேர். சுககு, சிறுகாஞ
சோரி, இமபூரலவோ, லவஙகம, நனனாரிவோ இவைகளை வேளை ஒன
றுககு வகைககுக கழஞசுவீத மிடிதது 2-படி தண்ணியிற போடடு
அாறபடியாய வறறவைததுக கொடுககத தீரும இவைகளெலலாம
இசசா ப்ததியம புளியை சுடடு கொஞசமாய சோககவும.

சனனி சுரததிற்கு

தைவேளைசசாறு, இஞசிசசாறு வகைககுப படி கால, தனித
தனி முறிதது ஒனறுயக கலநது அதில திரிகடுககுபபொடி திரிகடி
ஒருதுடடெடை தேனகூடடி கொடுககத தீரும.

சனனிதோஷ சுரததிற்கு

வாலுளுவையரிசி, சிவனவேமபு, கணடஙகததிரி, அரததை,
ஆவுரிவோ, திரிகடுகு, வசமபு, வெளளுளளி, கொடிவேலி, கஞசாங
கோரை, போஸ்தககாய, வாசறகாய, மஞசிடடி, ஏலம, லவஙகம,
பாஙகிபபடடை, மிளகு, சஙகமவேர்பபடடை, நாயுருவிவோ புளியம
படடை, தூதுளைததாரி, பேய்பபுடல, கூவிலிதது, ஒமம, கருஞசீர
கம, மாதுளங்கமவோ வகைககுப பலம கால வீதமிடிதது இரணடு
படி நீரிறபோடடு எடடொனறுய் வறறவைதது வடிதது அதில துட்
டெடை கழுதைப்பால கலநது கொடுககவும இநதபபடி மூன்றுபோது
கொடுகக நீஙகும.

சகல வாதத்திறகும் பொதுபபிரயோகம

முதகெருககஞசெடி, திரிபலை, கோரைககிழஙகு, சுககு, கடுகு,
ரோகணி, நிலவேமபு, சிததிரமூலம, செவியம, முககுரணடி, சீந
தில, விஷ்ணுகாநதை வகைககுப பலம-1, இவைகளையிடிதது 4-படி
தண்ணியிறபோட்டு காறபடியாய் வறறவைதது கொடுககவும இந
தபபடி ஆறுவேளை கொடுகக நீஙகும.

சிறறுமுடடி, பேராமுடடி, நனனாரி, விஷ்ணுகாநதி, குமிழ் மீட்
டான சிவதை இவைகளின வோ பறபாடகம, கறறுழஞசருகு, ஆடா
தோடையிாகநு, கண்டஙகததிரி, சிறுசெருபபடை, வல்லாரை,
வகைககுப பலம மல்லி, நறசீரகம, கடுகுரோகணி, திரிகடுகு, சிறு
தேககு, திபபிலிமூலம, செவியம, கடுககாய, தாளிசப்பததிரி, நெல்
லிபபருபபு வகைககு விராகனிடை-3, இவைகளை சிதைததுப் பத்து
படி தண்ணியிற் போட்டு 2-படியாய் வறறவைததுககொண்டு வேளை
ஒனறுக்கு உழக்கு கியாழமாக 5-நாள் கொடுதது 6-நாள் பிரமி கடுக்

காய், மிளகு இவைகளைக கியாழஞ்செய்து கொடுத்து ஆறுநாள ஸ்நா ஊஞ செய்வித்துப புளி சோககவும.

சித்திரமூலம, மூதததககாசு, அககிராகாரம், அதிமதுரம, கோஷடம், லவஙகம, ஏலம, திரிகடுகு, திரிபலை, வெட்பாலையரிசி, பொரித்த சீரகம, மிளகு, பறபம வகைககு விராகனெடை-3, இவைகளைச சிதைதது ஒருபடி தணணியிறபோடடு அரைககாறபடியாய வற்ற வைததுக கொடுககவும. இநதபபடி ஆறுபோது கொடுககத தீரும.

சிறுமூடடி, கொஞசிவிளா, நாயுருவி, மூககிரணடி, தூதுளை, கணடஙகததிரி, விலவம, முளளி, கததிரிசஙகு இவைகளின வேர் வகைககு 2-பலம, கொசசி, ஆடாதோடை, பிரமிநிலவாகை இவை களினிலை வகைககொருபிடி இவைகளெலலா மிடிதது 9-படி தணணி யிறபோடடு மூனறுபடியாய வறறவைததுககொணடு திபபிலி, திப பிலிமூலம, தேசாவாரம, அரததை, சுககு விராகனெடை-3, இவை களை இடிததுச சூரணமபோட்டு எடடுவேளை கொடுககத தீரும.

சகல பழஞசுரததிறகும நெய

வெளவேள்வேர், கழறசிவேர், நாயுருவிவேர், சிறுபூளைவேர், விஷ்ணுகாநதிவேர், வசமபு, பூண்டு வகைககுக கழஞ்சு-1, இவைகளை அரைதது ஒருபடி ஆவின நெயயிறபோடடு காய்சசி வடிதது வேளை ஒனறுககு கழஞசு விகிதமகொள்ளத் தீரும.

விடாசசுரம் வயிறறெரிவு இருமல சொரிசிரஙகு நெய

ஆவினநெய் சுத்தஜலம வகைககுப படி-1, ஒனறுய்ககலநததில் மூநதிரிபபழம, வெடபாலையரிசி, அநத திப்பிலி கொநதகம, அதிவிடயம, நெலலி, கிலவேமபு, விலாமிசசமவேர், விலவவேர் வகைககுக கழஞசு-1, இவைகளை தணணியிலரைததுபபோட்டு காயசசி வடிதது வேளை ஒனறுககு முககழஞசு விகிதம உணடுவரத தீரும.

சுரம் விக்கல தாகம அரோசியம் தலைநோய்
பிரமேகததிறகு

ஆவின நெய் சுதத ஜலம் வகைககுப் படி-1, ஒன்றுய்ககலந ததில திபபிலி, கடுகுரோகணி, வெட்பாலையரிசி, கீழ்ககாய்நெலலி, வில்வவேர், வேப்பமபட்டை, தானறி, நெல்லி, முளளி, சநதனம, ஆடாதோடை, விலாமிச்சமவேர், மூநதிரிபபழம், சிறு சணபகபபூ, அதிவிடயம் வகைககு விராகனெடை-1, இவைகள் தண்ணீரிலரைதத

துப்போட்டுக் காய்ச்சி வடித்துக்கொண்டு நாள் ஒன்றுக்கு இரு கழஞ்சுவீதந் தேனுடன் மத்தித்துச் சாப்பிட்டுவரத் தீரும்.

சகல சுரத்திற்கும் கண்குளிர்ச்சிக்கும் நெய்

சீரூர் செங்கழுநீர்ச் சாறு படி-4, நெய் படி-1, ஒன்றாய்க் கலந்ததில் மஞ்சிட்டி, தாமரைக்கிழங்கு, ஏலம், லவங்கம், கடுகுரோகணி, கோஷ்டம், நன்னாரிவேர், அதிமதுரம், சந்தனம் வகைக்கு விராகனெடை-1, இவைகளை அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து நாளொன்றுக்கு ஒரு கழஞ்சுவீதம் உள்ளுக்கு சாப்பிட்டு மேலிலும் பூசச் சகல சுரமும் நீங்கும் கண்ணுங் குளிரும்

மாந்தசுரம் முறைக்காய்ச்சல் கடுக்காய்ச்சல் அதிசாரசுரம் விஷசுரம் ஆசீரணசுரம் பூசசுரம் முதலான சுரத்திற்கு எண்ணெ

வெறிகிழங்கு, சிறுமுட்டி, சிறுகாஞ்சோரி, அரிசிறு செங்கழுநீர் துளசி, கொச்சி, பெருங்காந்தை வகைக்குப் பலம்-10, தூள்செய்து ஆறுமரக்கால் தண்ணீர்விட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்ததில் கொம்பரக்கு பலம்-1, ஒருபடி நீர்விட்டு அரைபடியாய் வற்றவைத்து வடித்துவிட்டு நல்லெண்ணெ படி-2, மோர் பதக்கு கூட்டிவிட்டு அரத்தை, அதிமதுரம், முத்தக்காசு, வெட்பாலையரிசி, கோஷ்டம், வாய்விளங்கம், மஞ்சிட்டி, திரிகடுகு, கொடிவேலி, ஓமம், மரமஞ்சள், கருவேப்பிலக்கு, ரோகணி, சந்தனம், வாலமிளகு, மஞ்சள், லவங்கப்பட்டை, சதகுப்பை, செவ்வியம், தக்கோலம், வெள்ளுள்ளி, திப்பிலிமூலம், புகைவீரம், தேக்கு வகைக்குப் பலம்-¼, இவைகளை பதமாய்க்காய்ச்சி வடித்து ஒருகழஞ்சு விகிதம் உள்ளுக்கு பானம்பண்ணி உடம்பிற்பூசி நசியமிட்டத் தீரும்.

சீதசுரம் குளிர்காய்ச்சலுக்கு உட்கொள்ளும் எண்ணெ

நெருஞ்சில், தண்டின் கிழங்கு, வில்வவேர், சாரணைவேர், சிறுமுட்டி, பேராமுட்டி, அழுகண்ணி, விஷ்ணுகாந்தி வகைக்குப்பலம்-1, இடித்துப் பதக்குநீர்விட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்ததில் எண்ணெ படி-1, சேர்த்து ஆவின்பால் மோர் வகைக்குப்படி-2, மரமஞ்சள், அதிமதுரம், மஞ்சிட்டி, விலாமிச்சம்வேர், நன்னாரிவேர் அரைத்த சந்தனம், வில்வப்பழத்தை கோஷ்டம், திரிகடுகு, திரிபலை, தேவதாரம், அகிற்சந்தனம், வகைக்குக் கழஞ்சு-1, இவைகளை அரைத்துக்கொண்டு காய்ச்சி வடித்து உள்ளுக்குச் சாப்பிட மேலுக்குப்பூசி நசியமிட்டத் தீரும்.

## சுரத்திற்குத் தைலம்

வெருகங்கிழங்கு, சமூலம் வகைக்குப் பலம்-10, குறுந்தொட்டி, அமுக்கரா, சீந்தில், சதகிசாரணை இவைகளின் வேர் வகைக்குப் பலம்-3, இவைகளை இடித்து 4 மரக்கால் தண்ணீர்விட்டுப் போட்டு 2¼-படி வற்றவைத்து வடித்து அதில் ஆவின்பால், வெள்ளாட்டுப்பால், நல்லெண்ணெய் வகைக்குப் படி-2, கூட்டவிட்டு நன்னாரி, சீந்தில், சிறுகீரை, சிற்றாமுட்டி, வில்வவேர், அமுக்கரா இவைகளின் வேர், சுக்கு, லவங்கம், இந்துப்பு, குக்கில், சாரணைவேர், அதிமதுரம், கோஷ்டம், வசம்பு, முத்தக்காசு, சிற்றரத்தை, தேவதாரம், மஞ்சள், திப்பிலி, சந்தனம், விலாமிச்சம் வேர், மிளகு, லவங்கப்பத்திரி வகைக்குக் கழஞ்சு-1, வெள்ளாட்டுப்பாலில் அரைத்துப் போட்டு மெழுகு பதமாய்க் காய்ச்சி வடித்து ஒன்றுவிட்டொருநாள் ஸ்நானஞ் செய்துவர விடா சுரம், வாதசுரம், பித்தசுரம் மூன்று மாதம் இரண்டு முறைவிட்ட மற்ற காசசுரம் தீரும்.

வெருகங்கு பலம்-64, அமுக்கராவேர் பலம்-30, சீந்தில், சிற்றாமுட்டி வகைக்குப் பலம்-10, இவைகளை இடித்து 4-மரக்கால் கால்படி தண்ணீர்விட்டுப் போட்டு நாலிலொன்றாய் வற்றவைத்து வடித்து இதில் நல்லெண்ணெய், ஆவின்பால் வகைக்குப் படி-1, சாதிக்காய், திப்பிலி, சிறுதேக்கு, தேவதாரம், முத்தக்காசு, கோஷ்டம், அதிமதுரம், சிறுநாகப்பூ, சடாமாஞ்சில், சந்தனம், விலாமிச்சுவேர், சன்ன லவங்கப் பட்டை, தாளிசப்பத்திரி, சீரகம் வகைக்குப் பலம்-¼, இவைகளை ஆவின்பாலில் அரைத்துப் போட்டு காய்ச்சி வடித்து முழுகிவர அஸ்திக் காச்சல், பாண்டு காசசல் தீரும்

வெருகங்கிழங்கு விராகனெடை-20, அதின் தண்டு விராகனெடை-3, இவைகளை இடித்து 5-படி காடி தண்ணீர்விட்டுப் போட்டு ஒரு படியாய் வற்றவைத்திருத்து நல்லெண்ணெய் படி-½, கூட்டி கொம்பரக்கு, சதகுப்பை, சிற்றரத்தை வகைக்கு விராகனிடை-5, அரைத்துப்போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்து காச்சல் வருகிற தினத்தில் காச்சல் வருமுன் தயிலந் தேய்த்து காச்சல் வந்துவிட்டபின் அரைப்பிட்டு வெந்நீரில் முழுகத் தீரும். உப்பு, புளி, புகையிலை தள்ளவும்.

புளியிலைச்சாறு, நல்லெண்ணெயும் ஓரளவாகக் கலந்து காய்ச்சி வடித்து முழுகிவரத் தீரும்.

கொம்பரக்கு பலம்-20, அமுக்கிராவேர், தோன்றி, சிற்றாமுட்டி, நன்னாரி, வில்வம், வெருசங்கிழங்கு, விஷ்ணுகாந்தி, சீந்தில், செந்தொட்டி, தூதுளம் வகைக்குப் பலம்-4, இவைகளை நசுக்கி தண்ணீ

நீரிற்போட்டு நாலிலொன்றாய் வற்றவைத்து அதில் நல்லெண்ணெய் நாழி-$\frac{1}{2}$ கூடவிட்டு முத்தக்காசு, சதகுப்பை, அரத்தை, சந்தனம், கடுகுரோகணி, மஞ்சள், செருமகு-5, ஞை, தேவதாரம், சிறுநாகப்பூ மஞ்சிட்டி, மதூரம், கோஷ்டம், நன்னாரிவேர், விலாமிச்சம்வேர், சித்திரமூலம், கொன்றைப்பட்டை, முககாலவளமரோ வகைக்குக்கழஞ்சு-2 இவைகளை அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து முழுகிவரத் தீரும்.

நல்லெண்ணெய், சீரா, செங்கழுநீர்ச் சாறு வகைக்கு நாழி-3, ஒன்றாய்ச் கலந்து அதில் அதிமதூரம், கோஷ்டம், லவங்கப்பட்டை, ஏலம், மந்திஷ்டிவேர், கடுகுரோகணி, சண்பகப்பூ, சந்தனம், விலாமிச்சம் வேர், தண்ணீர்விட்டான்கிழங்கு, முத்தக்காசு, மரவளயம், கஸ்தூரி மஞ்சள், செங்கழுநீர் கிழங்கு, நன்னாரி வெட்டிவேர் வகைக்கு விராகனிடை-3, இவைகளை அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து முழுகிவர விடாச்சுரம், வெப்புகாசம், சண்டிகாய்ச்சல் முதலிய சகல சுரமுந் தீரும்.

வெருகங்கிழங்கு, சிற்றாமுட்டிவேர், அசுவகெந்திக் கிழங்கு, சுக்கு, விலவேர், செங்கழுநீர்க் கிழங்கு, தேவதாரம், சந்தனக் கட்டை, விஷ்ணுகாந்தை வேர், அதிமதூரம் வகைக்குப் பலம்-10, கொம்பரக்கு, பஞ்ச லவணம், கொடிவேலிவேர், சிறுதேக்கு, நாவிக் கிழங்கு, மருட்கிழங்கு, தாளிசபத்திரி, சடாமாஞ்சில், கடல்நுரை, ஓமம், குருசாணி, சாதிபத்திரி, புளியம்பொருக்கு, இலுப்பைப் பொருக்கு, சிறுநாகப்பூ, சாதிக்காய், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, சிற்றாமணக்கின்வேர், செவ்வள்ளிக்கொடி, புளியம்விட்டு, நல்லெண்ணெய் நாழி-5, அதை கூடவிட்டு பதமாகக் காய்ச்சி இறுத்து அதில் பச்சைக் கர்ப்பூரம், குங்குமப்பூ, கஸ்தூரி, புனுகு சட்டம் வகைக்கு விராகனிடை-1, பொடித்துப்போட்டு வைத்துக்கொண்டு உள்ளுக்கு காண்டிநிறை சாப்பிடும் தலை முழுகியும்வர ஆஸ்துமம், சீதகாய்ச்சல், ஐயக்காய்ச்சல், சகல காய்ச்சல்களுந் தீரும்.

பொற்சீந்திப் பலம்-20, நறுக்கி 20-நாழி சலத்திலிட்டு 2-நாழிகையாய் வற்றவைத்து அதில் நல்லெண்ணெய் வகைக்கு நாழி-3 ஒன்றாய்விட்டு வெருகங் கிழங்கு, அமுக்கிறாக்கிழங்கு வகைக்குப் பலம்-1, அரைத்துப்போட்டு பதமாய்க் காய்ச்சி இறுத்து முழுகிவர ஜந்நி, வாதம், மாற்றசுரம், விஷசுர முதலான சகல காய்ச்சல் தீரும்.

உட்காய்ச்சல் காலெறிவிறகுத் தைலம்

கற்றாழைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, முசுமுசுக்கைச்சாறு, ஆவின் பால் வகைக்கு நாழி-$\frac{1}{8}$, நல்லெண்ணெய் நாழி-3, இவைகள்

ஒன்றாய்க் கலந்து அதில் அதிமதுரம் பலம்-1, அரைத்துப்போட்டுக் காய்ச்சி யிருத்து முழுகிவரத் தீரும்.

### சுரத்திற்கு மேற்பூசத் தயிலம்

அமுக்கரா, சிறுமுட்டி, பேராமுட்டி இவைகளின் வேர்த்தூள் கொம்பரக்குத்தூள் வகைக்கு நாழி-1, இவைகளை பதக்குநீரிற் போட்டு நாலிலொன்றாய் வற்றவைத்திறுத்து அதில் நல்லெண்ணெய், நல்லமோர் வகைக்கு நாழி நன்னாரிக்கிழங்கு, அரத்தை, கோஷ்டம், அதிமதுரம், சந்தனம், சிறுநாகப்பூ வகைக்கு விராகனிடை-1, அரைத்துப்போட்டு 3-நாள் சிறுதீயா யெரித்து நாலாம்நாள் காய்ச்சி யிறுத்து உடம்பில் தேய்த்துப் பதமிட்டு காது மூக்கில் நசியஞ் செய்ய தீராத காய்ச்சல் தீரும் உடல்தோறும் இவைகளெல்லாம் பூசிக்கொள்ளவும் இச்சாபத்தியம் புளியைச் சுட்டு மட்டாய்ச் சேர்த்துக் கொள்ளவும்.

ஆடாதோடைச்சாறு நல்லெண்ணெய் வகைக்குநாழி-1, கலந்ததில் அதிமதுரம், வேப்பம்பட்டை, விராலித்தோல், வேப்பம்வித்து, பிராய் வேர், ஊமத்தம்வேர், குன்றிவேர், மேனிவேர், இந்துப்பு இவைகள் வகைக்கு விராகனிடை-1, இவைகள் ஆடாதோடை யிலைச்சாற்றி லரைத்துப்போட்டு காய்ச்சி யிறுத்து உள்ளுக்குக் கொடுத்து மேனி லும் பூச சன்னிகரம் தீரும்.

ஆவின்மோர் நாழி-4, நல்லெண்ணெய் நாழி-1, சிறுமுட்டிவேர்த் தோல், கோஷ்டம், சுக்கு, பொன்ன, மெழுகு, முசுக்கட்டைவேர், அதி மதுரம், இந்துப்பு, மஞ்சள், தேவதாரம், நன்னாரி, மாகாளக்கிழங்கு, பெருங்குரும்பை, தக்கோலம், சீந்திற்கொடி, விலாமிச்சம்வேர், சிறு கீரைவேர், தகரம், தக்கோலம், ஏலம், சாதிக்காய், லவங்கப்பத்திரி, சாரணைவேர், திப்பிலிமூலம் வகைக்கு விராகனிடை-1, மோரிலரைத் துப்போட்டு காய்ச்சி யிறுத்து கழுத்திற்குகீழ் உடம்பிற் றேய்க்க குளிர்க்காய்ச்சல் பித்தருட்சை விஷசுரம் முதலான பலசுரங்கள் தீரும்.

சீராசெங்கழுநீர்சாறு, சீந்திற்சாறு வகைக்குப் படி-1, நல் லெண்ணெய், ஆவின்நெய் வகைக்குப் படி-½, இவைகளைக் கலந்து அதில் அதிமதுரம், தேவதாரம், மதனகாமப்பூ, கோஷ்டம், சந்தனம், மரு திட்டி, சதகுப்பை, வெட்டிவேர், காட்டத்திப்பூ, சடாமாஞ்சில், அகில், கொம்பரக்கு, விலாமிச்சம்வேர், தாமரைக்கிழங்கு, அதின் அரும்பு, செஞ்சந்தனம், ஏலம், நன்னாரி-1, சோளம், லவங்கப்பட்டை, லவங் கப்பத்திரி, காக்கணம்வேர், நெய்தற்கிழங்கு, சிற்றாமுட்டி, கடுகு

ரோகணி, பெருங்குரும்பை, அரத்தை, திப்பிலி வகைக்கு விராக னிடை-1, இவைகளைப் பாலிலரைத்துப் போட்டு காய்ச்சி வடித்து உடம்பிற் றேய்க்கச் சகல சுரமும் மேலெரிவுந் தாகமுந் தீரும்.

— சிராசெங்கழுநீர்ச்சாறு படி-1, ஆவின்பால், நல்லெண்ணெய் வகைக் குப் படி-½, ஒன்றாய்க் கலந்ததில் வெட்டிவேர், கடுகுரோகணி, சந்த னம், அதிமதுரம் வகைக்கு விராகனிடை-3, இவைகளை யரைத்துப் போட்டு காய்ச்சி வடித்து உள்ளுக்குக் கரண்டிநிறை கொடுத்து மேனி லும் பூசிவரக் கொடிசுரம் விஷசுரம் காட்டட்டசுரம் வெட்டை தீரும்.

மோர் படி-4, பழங்காடி படி-1, நல்லெண்ணெய் படி-1, ஒன்றாய்க் கலந்ததில் சிறுமுட்டிவேர் பலம்-4, இடித்து 4-படி தண்ணீயிற் போட்டு நாலிலொன்றாய் காய்ச்சி வடித்துவிட்டு, சதிசாரணை, நன் னாரி, குருந்தொட்டி, பொன்முசுட்டை, முத்தக்காசு, சீந்தில், விலா மிச்சம்வேர், சிறுகீரைவேர், அமுக்கறாவேர், கோஷ்டம், மஞ்சள், இந்துப்பு, அதிமதுரம், சுக்கு, செவ்வள்ளிக்கொடி, பொன்மெழுகு, தக்கோலம், ஏலம், லவங்கப்பத்திரி, சாதிக்காய், சிற்றரத்தை, கிராம்பு, தேவதாரம், திப்பிலிமூலம், மூந்திரிப்பழம், கடலுரை வகைக்குக் கழஞ்சு-1, இவைகளை மோரிலரைத்துப்போட்டு 3-நாள் வரை சிறு கொதிப்பாய் வைத்து நாலாம்நாள் பதமாய்க் காய்ச்சி வடித்து உடம் பிற் றேய்த்து அரைகடிகை சென்றபின் சிரசிற் றேய்த்து சீக்காய் அரைப்பிட்டுத் தண்ணீயில் ஸ்நானஞ் செய்ய விஷகாசசல மாரமசுரம் வாதசுரம் வெட்டை பித்தம் காந்தல் அஸ்திசுரம் முதலான பல காசசனுந் தீரும்.

குருந்தொட்டிவேர் பலம்-1, இடித்து 5-படி ஜலத்திற் போட்டு வற்றவைத்து கியாழம் படி-12, ½-பலம் கொம்பரத்தை, இளிகட்டி 3-படி ஜலத்திற்போட்டு வற்றவைத்த கியாழம் படி-½, 5-பலம் அமுக்கறாவேரை யிடித்து 3-படி ஜலத்திற்போட்டு வற்றவைத்த கியாழம் படி-½, பழையமோர், நல்லெண்ணெய் வகைக்குப் படி-1, இவை களை எல்லாம் ஒன்றாய்க் கலந்து அதில் முள்ளிவேர், வெட்டிவேர், விலாமிச்சுவேர், சீந்திற்கொடி, பொன்முசுட்டைவேர், நன்னாரிவேர், புழுகைப்படி, சதிசாரணைவேர், சிறுகீரைவேர், கோஷ்டம், அதி மதுரம், சுக்கு, இந்துப்பு, மஞ்சள், கச்சோலம், ஏலம், லவங்கம், சிற் றரத்தை, திப்பிலிமூலம், சாதிக்காய், செவ்வள்ளிக்கொடி, தேவதா ரம், லவங்கப்பத்திரி வகைக்குக் கழஞ்சு-1, மோரிலரைத்துப்போட்டு 3-நாள் சிறுதீயா யெரித்து நாலாநாள் பதமாய்க்காய்ச்சி வடித்து நாலு நாளைக் கொருவிசை தலை முழுகிவரப் பலசுரம் வெட்டைக்கூடு தீரும்.

கடல்நுரை, மஞ்சள், கோஷ்டம, சநதனம, பொனமெழுகு, விலாமிச்சமவேர், சதகுப்பை, முததக்காசு, மஞசிட்டி, இலுப்பைப்பூ, கடுகுரோகணி, கபபிபபிசின, பெருஙகுருமபை, வெட்டிவேர், இந துப்பு; சுக்கு வகைக்கு கழஞசு-1, மோரிலரைததது ஒருபடி நலலெண் ணெயிற்போடடு நூறுபடி தணணிவிட்டு காசசி உடமபிறதேய்கக காநதல் வாய்நீரூறல வரட்சி தீருமம.

வெருகஙகிழஙகு, தணடு இலை சமூலம துலாம-1, சிற்றாமுட்டி, பேராமுடடி, சீநதில, வில்வவேர், அமுககறாவேர், விஷ்ணுகரநதை, சாரணைவேர் வகைககுப பலம-5, இவைகளையிடிதது 4-மரககால் தண்ணியிறபோடடு குறுணியாய வறறவைதது வடிதது அதில் குறுணி நலலெணணெ தழாததண்ணி படி-4, கூடவிட்டுவெடடிவேர், அதிமதுரம, சநதனம, தேவதாரம, முததககாசு, குஙகிலியம, கிராய வேர், குககில மநதிஷ்டி வேர், திரிகடுகு வகைக்குபபலம-1, அரைதது அபபோட்டுக காய்சசி உளளுககு கொடுதது மேலிலும பூச சீதசுரம் பூககாசசல ருடடைச தீரும இவைகளெலலாம இசசாபததியம புளி சுடடு படடாய கூட்டவும.

காசசலுககு நசியம்

குளிர்காசசல அடிககுமபோது சிறுதுமபையிலையையும் மிளகை யும ஒனறாய் சிதைதது நாசியில நசியமபண்ணததீரும்.

திபபிலியையும வேலிபபருததி யிலையையும ஒனறாய்சிதைதது நாசியில் நசியமிடடாலும அலலது இநதுபபு உளளி கொமபண பகாலிலை இவைகளை ஒனறாய் சிதைதது நாசியில நசியமிட்டாலும் காச்சல தோஷம நீஙகும

காசசல் முதலானதறகு யேலாதி மாத்திரை

ஏலம, கிராமபு, உலாநதஇஞசி, திப்பிலி முநதிரிபபழம பேரீசசம் பழம, தாளிசபததிரி, அதிமதுரம, கோஷ்டம, விலாமிசசுவேர், மிளகாய, சநதனம, லவஙகப்பததிரி, சாதிககாய், சாதிபததிரி, கோரோசனை, இலுபபைபபூ, சண்பகப்பூ, ஒரிலைததாமரைவேர் வகைககு விராகனிடை-1, இவைகட்கு நிகர் கடுகுரோகணி கூடடி செவ்விளநீரால இரண்டு சாமமரைத்துப் பருததிவிரைப்பிரமாணம் உணடைசெய்து உட்காசசல அதிசாரகாசசல ஆமக்காசசல வெதுப்பு காசசல இவைகட்கு முலைபபாலிலும் தோஷககாசசலுக்கு குதிரை வாலிக் கியாழததிலும் கொடுகக நீஙகும் காசம மூாசசிகாசம இரதத காசததிறகுத தேனிலுங கொடுக்க நீஙகும்.

### ஊஷ்ண காசசலுக்குச் சீரகமாத்திரை

நற்சீரகம், பேரீச்சம், ஏலம், முந்திரிப்பழம், செங்கழுநீர்க் கிழங்கு, திரிகடுகு, கோஷ்டம், அதிமதுரம், சந்தனம், கருஞ்சீரகம், கஸ்தூரி, மலலி, சூடன் வகைக்குக் கழஞ்சு-2, இளநீரிலரைத்துத் தூதுளங்காய்போ லுருட்டிக்கொண்டு முலைப்பாலி லுரைத்து 6-போது கொடுக்கத் தீரும்.

### காசசலுக்கு குங்குமக்குளிகை

குங்குமப்பூ பலம்-1, திரிகடுகு, திரிபலை, சாதிக்காய், கிராம்பு, ஏலம், சந்தனம், கடுகுரோகணி வகைக்கு பலம்-½, இவைகளை 6-சாமம் எலுமிச்சம் பழச்சாற்றிலும் 4-சாமம் இஞ்சிச்சாற்றிலும் 2-சாமம் கண்டங் கத்திரிப்பழச்சாற்றிலும் ஆட்டிச் சிறுபயறளவு உண்டை செய்துகொண்டு அனுபானங்களிலிட குளிர்காசசல முதலான சன்னிகாச்சல தீரும்.

### காசசலுக்கு கோரோசனைக் குளிகை

கோரோசனை, குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம், ரசசெந்தூரம், ரசகர்ப்பூரம், ஏலம், அப்பிரகசெந்தூரம், கிராம்பு, கோஷ்டம் சாதிக்காய், அகாரகாரம் வகைக்குக் கழஞ்சு-3, சந்தனக்கியாழத்தில் 4-சாமமும் சண்பகப்பூ கியாழத்தில் 2-சாமமும் குங்குமப்பூ கியாழத்தில் 2-சாமமுமரைத்து குன்றிபோலுண்டைசெய்து நிழலி லுலர்த்தி முலைப்பாலிலிட்டுத் தொண்டைகட்டு சிலேத்தும 9-சன்னி 13-மண்டைச்சூலை நேத்திரஷம் மயக்கம் சிலேத்மகாசசல வலிப்பு சிவ் நீங்கும்.

### காசசலுக்கு சஞ்சீவி மாத்திரை

இரசச்செந்தூரம், லிங்கம், தாரம், வீரம், கெந்திச பஸ்பம், நாவிக்கிழங்கு, கிராம்பு, பத்திரி, ஏலம், திரிகடுகு, திரிபலை, வாளம் வகைக்கு பலம்-½. நிம்பக்காய்ச்சாற்றில் ஒருசாமம் முலைப்பாலில் இரண்டுசாமம் குமரிச்சாற்றில் நாலுசாமம் கொன்றைப்பூச்சாற்றில் 4-சாமம் ஆட்டி குன்றிப்பிரமாணம் உண்டைசெய்து முலைப்பாலி லாவது தேனிலாவது கொடுக்க சன்னி தோஷக்காசசல நீங்கும்.

### காசசலுக்கு ரசகர்ப்பூர மாத்திரை

சுத்திசெய்த ரசகர்ப்பூரம் பலம்-1, வாளம் பலம்-1, அழிஞ்சி வேர்ப்பட்டை கொடிவேலிவேர்ப்பட்டை வகைக்குப்பலம்-¼, கையாந்

தக்கைச்சாற்றிலும் முலைப்பாலிலும் வகைக்கு-2, சாமமாட்டித் தூவ ரைப் பிரமாணம் மாத்திரை செய்துகொண்டு தேனிற் கொடுக்கச் சகல காசசலும் நீங்கும்.

### காசசலுக்கு இரசமாத்திரை

உலர்ந்த இஞ்சி, மிளகு, திப்பிலி, கடுக்காய், இந்துப்பு, கடுகு ரோகணி, இரசபஸ்பம் வகைக்கு கழஞ்சு-1, வாளம் கழஞ்சு-7, இவை களை எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து மிளகு பிரமாணம் உண்டை செய்து ஒருண்டையை அனுபானத்திலிட விரேசனமாகி குளிர் காசசல் நீங்கும். பேதி அதிகமானால் குளிர்ந்த வனலுக்கொள்ளவும் மீறினால் பாலில் அன்னமுண்ண கொள்ள நீங்கும்.

### வேறு

வெள்ளைக்காக்கணன் விரை, திரிபலை, மிளகு, திப்பிலிரசம், கெந்தகம், வாய்விளங்கம் இவைகள் சமமாய் கரிப்பான் சாற்றில் ஒருநா ளரைத்து கழற்காயப்பிரமாணம் உண்டைசெய்து இஞ்சி சாற்றிலிட காசசல் நீங்கும்.

கெந்தகம் பத்துகபாகலிலையும் ஓர் நிறையா யரைத்துப் பாசிப்பய றளவு உண்டை செய்து கற்பலமிளகை உடைத்துப்போட்டு கியா ழஞ்செய்து அதில் ஒரு மாத்திரையை உரைத்துக்கொடுக்க குளிர்ந்த காசசல் தீரும்.

### காசசலுக்கு லிங்கமாத்திரை

லிங்கக்கழஞ்சு-1, திப்பிலிக்கழஞ்சு-2, ஆவின்பாலி லரைத்துப் பயறளவு உண்டை செய்துகொண்டு உலர்ந்தயிஞ்சி கியாழத்திலிட சகல காச்சல் நீங்கும்.

சாதிலிங்கம், தாளகம், மனோசிலை வகைக்கு விராகனிடை-1, காட்டு கரணைக்கிழங்கிலாவது கருணைக்கிழங்கிலாவது பொதிந்து சீலை மண்செய்து, 2-படி வறட்டிக்குட்புடம்போட்டு வேலிப்பருத்தி சாற்றி லொருநாளரைத்து பாசிப்பயறுபோ லுண்டைசெய்து சுக்கு கியாழத் தில் ஒருண்டையீந்து மைந்தர்க்கேளே உப்பு புளி தள்ளி கொடுத்து 9-நாள் அல்லது 7-நாளில் தலைக்குத் தண்ணீர்விட்டு உப்பு வறுத்துக் கூட்டி 10-நாள் தயிலஸ்நானஞ் செய்வித்து புளிகூட்டிக் கொள்ளவும் மருந்தின் குணம் அதிகரித்து நின்றால் சிறுகீரைவேறு மிளகு ஓர் நிறையாய் கியாழஞ்செய்து 3-போது கொடுக்க மாறும்.

### அர்த்த நாரீஸ்வரம்

அப்பிரமநாகம், வெங்காரம், தாளகம், சாதிலிங்கம், கலநாரி, பேரீச்சம்பழம் இவைகளை ஓர் நிறையாய்க் கொம்புபாகலிலைச்சாற்றில்—ஒருநாளாட்டி வில்லைகட்டி உலர்த்திக் குகையிலிட்டு சிலனுப் போட்டுமூடிச் சீலைமண்செய்து மணல்மறைவிற புடமிடுக கள்ளிப் பாலிலும் எருக்கம்பாலிலு மரைத்துலர்த்திப் பொடித்துச் சிமிளி லடைத்துக்கொண்டு பணவிடைப் பம்பம் சுடுதண்ணீர்க்கொடுக்க வலது புரத்திற் சுரம்விடும் குளிர்ந்த தண்ணீர்க்கொடுக்க இடதுபுரத்து சுரம் விடும்.

தாளகத்தைச் சிறுதுண்டுகளாய் வெட்டிக் கணம்புகருட் பத்துத் தபா வைத்துத் தேசிநீரிலிட்டு நீறறியபின் துணியில் முடிந்து சுண்ணாம்புத் தண்ணீர்க்கொள்ள தூங்கவைத்து 2-சாமமெரித்துச் சுத்திசெய்த தாளகம் விராகனிடை-6, புகையூறல் நீற்றாத கற்சுண்ணம் வகைக்கு விராகனிடை-8, இவைகள் பூலைப்பாலில் இரண்டுசாமம் அரைத்து 2-வேளை வெல்லத்திற்கொடுத்து ஆறுநாள் உப்பு புளி தள்ளிப் பத்தியமாயிருந்து 8-நாள் ஓமம் தேய்த்து ஸ்நானஞ்செய்து உப்பு வறுத்து கூட்டவும் சுரம் 64-ம் தீரும்.

### வேறு

சுத்திசெய்தவாளம், நேர்வாளம், காசிக்கல் வகைக்குப் பலம்-1, இதை கவிழ்தும்பை, நல்லதும்பை, பெருங்குரும்பை இவைகளின் சாற்றால் வகைக்கு ஒரு சாமமாட்டி மிளகுபோ லுண்டைசெய்து கொண்டு குளிர்சுரத்திற்கு அரைப்படி மோரைமுறித்து அந்தத்தெளிவு சலத்திலும் அதிசாரசுரத்திற்கும் சுக்கு கியாழத்திலும் பழஞ்சுரத் திற்கு பேய்ப்புடலஞ் சுக்குஞ்சேர்ந்த கியாழத்திலும் சிலேத்துமசுர இருமலுக்கு தேனுந்திப்பிலிப்பொடியுஞ்சேர்த்து அதிலும் தாபசுரத் திற்கு வில்வவேரும் சுக்குஞ்சேர்ந்த கியாழத்திலும் அஸ்திசுரத்திற் குப்பசுவின்நெய்யிலும் வாதசுரத்திற்கு வாதவடக்கி கியாழத்திலும் ஒரு குளிகை கொடுக்கத் தீரும். 3-நாளைக்கு உப்பு புளி தள்ளவும் பேதி அதிகரித்தால் ஆமணக்கு இலுப்பை இவைகளின் கொழுந்தை வகைக் கொருபிடி யரிந்து 2-படி தண்ணீரிற்போட்டு உழக்காய் காய்ச்சி கொடுக்க நீங்கும்.

தானத்தம், கெந்திரசம், கருநாவிக்கிழங்கு, வெங்காரம்-1, திப்பிலி, வாளம், சுக்கு, கடுக்காய், நெல்லி, முள்ளி, வெள்ளைப்பூண்டு இவைகளை கையாந்தகரைச்சாற்றில் 2-சாமமரைத்து மிளகுப்பிரமாணம் உண்டைசெய்து ஒருநாளைக்கு 3-வேளை 3-உண்டை பசுவின் நெய்யிலிட சுரம் 64-ம் நீங்கும்.

ஷை தாளம், ரசம், கருநாவிக்கிழங்கு, காந்தம், கடுகுரோகணி இவைகளை ஓர் நிறையாய் எலுமிச்சம்பழச்சாற்றி லரைத்து உளுந்து பிரமாணம் உண்டை செய்து கற்றாழைமடற் சாற்றிலாவது முலைப் பாலிலாவது ஒருண்டை கொடுக்க 4-நாழிகையில் சுரம் நிற்கும்.

## சுரகோடாலி

வெள்ளைபாஷாணம், தொளிபாஷாணம், சூதம் வகைக்கு விராகனிடை-1, இவைகளைக் கிக்கிளிக்கடிக் கியாழத்தில் 2-சாமமெரித்து ஊமத்தஞ் சாற்றிலும், கொம்புபாகற் சாற்றிலும், வகைக்கு இரண்டு சாம மரைத்து உளுந்திடைக்கு குளிகை கட்ட சுரமார இளநீர், வெந்நீர், சாடியில் வேளைக்கு ஒருண்டைவீதம் 6-வேளை கொடுக்க சகல சுரமும் நீங்கும். 9-நாள் வரை புளி தள்ளி உப்பு வறுத்து கூட்டவும் 8-ம் நாளில் தலைக்கு தண்ணீர்விட்டுப் புளி கூட்டவும்.

## நாளாமுறை சுரத்திற்கு மஞ்சேரிலை மாத்திரை

மஞ்சேரிலை, சுக்கு மிளகு, திப்பிலி மூலம் இவைகள் வகைக்குப் பலம்-1, துளசிச்சாறு, வெள்ளாட்டுக் கோமியம் இவைகளில் வகைக் கொரு சாமமரைத்து மிளகுபோ லுண்டைசெய்து சுரத்திற்கு வெந் நீரிலும், சன்னிக்கு குப்பைமேனிச் சாற்றிலும், வாய்வுக்கும், கடுப் புக்கும் குளிர்ந்த தண்ணீரிலுமிடத் தீரும்.

## சுரத்திற்குப் பச்சைகாப்பூர உண்டை

ரசபஸ்பம், கெந்தகம், பச்சைக்கர்ப்பூரம், லவங்கம், சாதிக்காய் கோர்வாளம் இவைகளை ஓர்நிறையாய் கற்றாழம்பால் வார்த்தரைத்து உளுந்துப்பிரமாணம் உண்டைசெய்து ஒருண்டையைச் சர்க்கரை கலந்து சாப்பிடச் சகல சுரமும் உடனே நீங்கும்.

## இரண்டாமுறை, மூன்றுமுறை, குளிர்சுர முதலான சகல சுரத்திற்கு அஞ்சனம்

இரண்டு கழஞ்சு சீந்தில் பூவை எலுமிச்சம்பழச் சாற்றினால் மைபோலரைத்து மண்வெட்டி பின்புறத்தில் அப்பிவைத்து விளக் கில் நல்லெண்ணெய் விட்டுத் தீபமேற்றி மைப்பற்றவைத்து அதை வெங்கலத்தட்டின் புறத்திலிட்டு கொஞ்சம் நல்லெண்ணெய் விட்டுஇருப் புக் குழவியாற் கலியப்போ லரைத்து கொம்புச் சிமிழிலடைத்துக் கொண்டு பணவிடை கண்ணிற்றீட்டத் தீரும்.

சுரம், குளிர்சுரம், வயிற்றுவலி, பொருமல முதலான வியாதிகட்கு விரோசன மாத்திரை

திரிகடுகு, கடுக்காய், கடுகுரோகணி, இந்துப்பு, இரசபற்பம் இவைகளுக்கு கழஞ்சு-1, சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு கழஞ்சு-1, எலுமிச்சம்பழச் சாற்றால் மைபோலரைட்டு சிறு சுண்டைக்காய்ப் பிரமாணம் உண்டைசெய்து வெந்நீரிற் கொடுக்கவும் பேதி அதிகப்பட்டால் சுரக்காரர்களுக்குப் பாலும் அன்னமும் கொடுக்க நிற்கும்.

சுரநோயின் நட்சத்திரங்களின் பலனறிய

ஆதிரையுஞ் சோமவாரமும் கூடின தினத்திலாவது திருவோணமும் மிருச்சிகனும் கூடின தினத்திலாவது சனியும் கார்த்திகையும் கூடின தினத்திலாவது விசாகமும் வெள்ளியும் கூடின தினத்திலாவது அசுவதியும் புதனும் கூடின தினத்திலாவது சுரங்கண்டால் மரணமாம்.

காச்சல் ரோகப்படலம் முற்றிற்று.

---

# சன்னி ரோகப் படலம்

அதாவது சீதள ரோகத்தை வருவித்தலாம் சன்னி பதின்மூன்றின் நாமங்கள்

விருத்தம்

கூறுமேவன் தாந்திரிகான் அந்தகன் தான்
குணமான சீதாங்கள் உருத்திரர்ங்கள்
தேறுமேவன் சித்தவிப் பிரமைகண்டன்
தெளிவாகக் கண்டகுச்சன் கருணிசாசன்
மீறுமேவன் விக்நாதன் பொருக்கநேத்திரன்
மிதமான பிரதத்தடி முருக்கிசாபம்
ஆறுமேவன் பிரழாப சன்னிபதின்மூன்றும்
அப்பனே அகஸ்தியனா ரருளினாரே.

தாந்திரிகன், அந்தகன், சீதாங்கம், உருத்திரதாகம், சித்தவிப் பிரமைகண்டான், கண்டகு, சுசம், கருணியாசம், விக்கநாதம், பெக்கநேத்திரம், பிரதகட்டு, முருக்காசுபம், பிரலாபம் முதலான சன்னிகள் தேகத்திலுற்பத்தி யாகிறது.

### அசாத்திய சன்னிகள்

ஷை சன்னிகளில் அந்தகன் சீதாங்கம் கண்டகுப்ஜம் பொக்க நேத்திரம் அபின்யாசம் உருத்திரதாகம் பிரகதட்டி இவைகளை அசாத்தியமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

### அந்த சன்னிக குணம்

அதிகோரமாய சுரங்காயும் மெய்க்கரைக்கும் வாயநீரமிடியும் விக்கல் வாந்தி இருமல் தாகம் பிரமை பிரதாபம் வீக்கம் நடுக்கல் மாராட்டங்காணும் தலைநடுக்கும் சிமிட்டும் வயிறெரியும் பிதற்றும் பல சிந்தை யுண்டாகும் பத்து தினத்திற் கொல்லும்.

### நிவர்த்தி

கொடிவேலிவேர், பலமறை, வாய்விளங்கம், சுக்கு, திப்பிலி, மிளகு வகைக்கு பலம்-½, 2-படி தண்ணீரிற்போட்டு ¼-படியாய் கியாழஞ்செய்து மூன்றுபோது கொடுக்க அந்தகசன்னி முதலான 13-சன்னியும் நீங்கும்.

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கொத்தமல்லி, வாய்விளங்கம், குருந்தொட்டிவேர், முத்தக்காசு, துத்தி இவைகளை வகைக்குப் பலம்-½, வீதமிடித்து 4-படி தண்ணீரிற்போட்டு நாணிலொன்றாய் வற்றவைத்துக் கொண்டு அடிக்கடி கொடுத்துக் கொண்டிருந்தால் தாகம் வாந்தி விக்கல் நீங்கும்.

நெருஞ்சி, நொச்சி, சித்திரமூலம், சுக்கு, பேய்ப்புடல், மிளகு, திப்பிலிமூலம், செவியம் வகைக்குப் பலம்-¼, இடித்து 1-படி ஜலத்திற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து கொடுக்கநீங்கும்.

### சீதாங்கசன்னிக குணம்

உடலெங்கும் குளிரும் நடுக்கும் வியர்க்கும் வயிறு பொருமி யிரைந்து கழியும் தாகம் பிரதாபம் விக்கல் வாந்தி அயாவு சோபம் மூர்ச்சையுண்டாகும் எங்கும் நெஞ்சிற் கபமடைக்கும் எழுந்து விழுந்து தள்ளாடும் 15-நாளில் மரணம்.

### நிவர்த்தி

திப்பிலி, திப்பிலிமூலம், செவியம், சித்திரமூலம், மிளகு, சுக்கு, இலவமவேர், கடுகுரோகணி, ஆவரிவேர், பற்பாடகம், சிறுதேக்கு, பேய்ப்புடல் வகைக்கு பலம் ¼-வீதமிடித்து 1-படி ஜலத்திலேபோட்டு அரைக்காலபடியாய் வற்றவைத்துக்கொடுக்க நீங்கும்.

நன்னாரிவேர், வில்வவேர், முத்தக்காசு, கடலிராஞ்சிப்பட்டை, பேய்ப்புடல், செங்கழுநீர்க் கிழங்கு, பற்பாடகம், போரமுட்டி, சிறு

தேக்கு, செவ்வியம் வகைக்குப் பலம்-1, நாலுபடி தண்ணீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வேளை ஒன்றுக்கு அரைக்காற்படி வீதம் மாறுபோது கொடுக்க நீங்கும்.

ஏலம், லவங்கம், சந்தனம், பூசனித்தண்டு, சுரைத்தண்டு, துத்திவேர், சுக்கு வகைக்குப் பலம் $\frac{1}{4}$-வீதம் இடித்து 1-படி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்துக் கொடுக்க நீங்கும்.

கண்டகூச்ச சன்னிகுணம்

சுரம் கொடூரமாய்க் காயும் உடல் புண்போலுளையும் நடுங்கும் தினவெடுக்கும் தலைவலிக்கும் நித்திரைகொள்ளும் தொண்டை நாவுலர்ந்து முள்ளுண்டாகிப் புண்ணாகும் பல்லீறல் இரத்தம் வடியும் வயிறுகழிந்து பொருமும் பொய்பிதற்றும் தாபசோபம் பிரதாபம் வாந்தி விக்கல் சுரம் மூச்சு இளைப்புண்டாகும் கண்ணுங் காதுங் கம்மும் எழுந்து அழுது களைத்துவிழும் 19-நாளிற் கொல்லும்.

நிவர்த்தி

திரிகடுகு, திரிபலை, வெட்பாலையரிசி, கடுகுரோகணி ஆடாதோடைவேர், மஞ்சள், மரமஞ்சள் இவைகளை வகைக்கு $\frac{1}{4}$-பலம் வீதம் இடித்து 1-படி ஜலத்திற்போட்டு கியாழஞ்செய்து கொடுக்க நீங்கும்.

கடுக்காய்ப்பூ, நாயுருவிவேர், முத்தக்காசு, நிலவேம்பு, சிறுதேக்கு, மஞ்சள், கடுகுரோகணி, கோஷ்டம், கொடிவேலி, செவ்வியம், திரிகடுகு, பெருங்குமிழ், நெல்லி, முள்ளி, தான்றிக்காய், தேவதாரம், பிரமி, வசம்பு இவைகளை முன்போற் கியாழஞ்செய்து கொடுத்து திப்பிலியும் நாயுருவியிலையும் ஒன்றாய்ச் சிதைத்து நாசியில் நசியமிடத் தீரும்.

கொச்சியிலை, சந்தனம், பற்பாடகம், கடுகுரோகணி, வெட்டிவேர், விலாமிச்சுவேர், பச்சை, காராகரந்தை, பாவட்டை, நன்னாரி, கூவிளை, முன்னை இவைகளை வேளை ஒன்றுக்கு $\frac{1}{2}$-பல வீதம் இடித்து 2-படி தண்ணீரிற்போட்டு $\frac{1}{4}$-படியாய் வற்றவைத்துக் கொடுக்க நீங்கும்.

சித்திரமூலம், உமிர்வேர், இலவமவேர், திப்பிலி, சுக்கு, குங்கிலியம், செவ்வியம், திப்பிலிமூலம் வகைக்குப் பலம்-$\frac{1}{4}$ வீதம் இடித்து 1-படி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து கொடுக்க நீங்கும்.

### பொக்கநேத்திர சனனிக் குணம்

உடலமிக்க காயும், விழிபருத்துக் காணும், அதில் பனித்துளி போல் நீர்வடியும், பார்வை மங்கும், இருக்கத்தடைக்கும், பொய்பிதற்றும், பிரமைகொள்ளும், விக்கல், தாகம், களைப்புண்டாகும். ?-நாளிற் கொன்றுவிடும்.

### நிவர்த்தி

ஆடாதோடை, சந்தனம், தூதுவளை, சுக்கு, இலுப்பை, புஷ்பம், சிறுமுட்டி, சிறுவழுதலை, முத்தக்காசு, பற்பாடகம் இவைகளை வகைக்கு ஒருபலம் விகிதம் இடித்து 4-படி தண்ணீரிற்போட்டு எட்டொன்றாய் கியாழஞ்செய்து வேளை ஒன்றுக்கு ¼-படி விகிதம் 6-வேளை கொடுக்க நீங்கும்.

பாகிரிசுக்கு, எருக்கம்வேர், பற்பாடகம், பேய்புடல், சித்திரமூலம், திரிகடுகு வகைக்குப் பலம் ¼-விதம் இடித்து 1-படி தண்ணீரிற்போட்டு ⅛-படியாய் வற்றவைத்துக்கொடுக்க நீங்கும் இவைகளுக்கு இச்சாபத்தியம்.

### அபினியாச சன்னிக் குணம்

3-நாடியும் படபடத்து நிற்கும், அதிகோரமாய் சுரக்காயும், முகந்தெளிவாயும் மினுமினுப்பாயும் இருக்கும் சரீரம் நோகும், நித்திரை, தாகம், வியர்வை, புலம்பலுங் காணும், கன்னலை வீங்கும், காதடைக்கும், நாசி கறுக்கும், வாய் பேசாது, மேல்மூச்சுண்டாகும், தொண்டைகட்டும், ஒருநாளிற் கொல்லும்.

### பரிகாரம்

வாதமடக்கி, நிலவேம்பு, சுக்கு, வசம்பு, ஓமம், திப்பிலி, பேய்புடல், பற்பாடகம் இவைகளை வகைக்கு ¼-பலம் விகிதம் இடித்து ஒருபடி நீரிற்போட்டு அரைக்காற்படியாய் கியாழஞ்செய்து கொடுக்கத் தீரும்.

வாதமடக்கிவேர், கமட்டந்திராய்வேர், தேசாவரம், கோஷ்டம், சடாமாஞ்சில், சீந்திற்கொடி, சிறுதேக்கு, வெறறிவேர், விலாமிச்சுவேர் இவைகளை முன்போல கியாழஞ் செய்து கொடுக்க நிவர்த்தியாகும்.

### உருத்திர சன்னிக் குணம்

சுரங்காயும், உதடுலரும், நாக்கு விழியும் கறுக்கும், அதில் முள்ளுபோலுமிருக்கும், நெஞ்சிற் கபங்கட்டியிருக்கும், இளைக்கும், தொண்டை நோவும், ஆகம் நடுக்கும், கழுத்தும் நெற்றியும் வியர்க்

கும், தாகம் விக்கல் காணும், பிரமைகொள்ளும், அபயமிடும், சிரிப்புடன் போகம் செய்ய விரும்பும், 10-வது தினத்திற் கொல்லும்.

### பரிகாரம்

இலந்தையிலை, நன்னாரி, சீந்திற்றண்டு, வெட்டிவேர், விலாமிச்சம்வேர், பூநாகம், முசுறுமுட்டை, ஆடாதோடை, முத்தக்காசு, சுக்கு, பேய்ப்புடல் இவைகளை முன்போற் கியாழஞ்செய்துகொண்டு அக்கியாழத்தில் இஞ்சிச்சாறு ஓரளவாய் ஒன்றாய்க்கலந்து அதில் கொஞ்சம் திப்பிலிப் பாலிலும் திப்பிலிப் பொடியும் சேர்த்துக் கொடுக்கத் தீரும். இவைகளுக்கு இச்சாபத்தியம்.

### பீதத்தட்டிச் சன்னிக் குணம்

அகோரமாய்ச் சுரங்காயும், உடல் சிக்கும், தலை சுற்றும், மதுக் குடித்தாற்போற் பிதற்றும், வயிறு கழியும், உபயிசமாகும், உதடு நாக்கு உலரும், கருக்கும், விரியும், இரத்தம் வரும் முகத்தைப் பார்க்கும், பெருமூச்சு, இருமல், விக்கல், இளைப்பு, தாகம், வாந்தியும் காணும். 10-நாளில் கொல்லும்.

### பரிகாரம்

பூசணித்தண்டு, முத்தக்காசு, சுக்கு, கச்சந்திராய்வேர், தூதுளங்காய், கண்டங்கத்திரி, பற்பாடகம், மல்லி, சிறுவழுதலை இவைகளை வகையொன்றுக்கு ¼-பலம் விகிதம் இடித்து ஒருபடி தண்ணீரிற் போட்டுக் கியாழஞ்செய்து ஆறும்போது கொடுக்கத் தீரும்.

அழிஞ்சிவேர், சுக்கு, சித்திரமூலம், பேய்ப்புடல், மரமஞ்சள், சீந்திற்றண்டு, வகைக்குப் பலம்-¼ விகிதம் இடித்து ஒருபடி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்துக் கொடுக்க நீங்கும்.

### தாந்தரிச சன்னிக் குணம்

உடல்காயும், பிதற்றும், பாதிக்கும், வாந்தியாகும், உண்ணாவு வரண்டு கருத்திருக்கும், வயிறு கழியும், மட்டற்றுத் தினவாகும், காது கேளாது, கண்ணில் சலம்வடியும், புகைந்திருமும், விழுந்தழுது சோரும், இருபத்தஞ்சு நாளிற்றீரும்.

### பரிகாரம்

பிரமியிலை, முந்திரிப்பழம், முத்தக்காசு, வசம்பு, தண்ணீர்விட்டான் கிழங்கு, கொன்னைப்பட்டை, கடுக்காய், கடுகுரோகணி, நெல்லிதான்றி, சிறுமுட்டி வேப்பப்பட்டை, பேய்ப்புடல், நிலவேம்பு, திரிகடுகு, காடிவேலி, தேவதாரம் இவைகளை நாழி ஒன்றுக்கு ¼-பலம் விகிதம் இடித்து வீசம்படி தண்ணீரிற்போட்டுக் காற்படியாய் வைத்து ஆறும்போது கொடுக்க நிவர்த்தியாகும்.

முத்தக்காசு, சந்தனம், உலர்ந்த இஞ்சி, பற்பாடகம், விலாமிச்சு வேர் இவைகள் வகைக்கு ¼-பலவிகித மிடித்து நாலுபடி தண்ணீரிற் போட்டு ஒரு படியாய் வற்றவைத்திருத்தத்தில ¼-படி பொரித்த அரிசிபோட்டு கஞ்சிகொடுத்து அதிற சந்தனம் குங்கிலியம் சாம்பிராணி, தேற்றான்விரை, தகரைவிரை, தேவதாருகாப்பூரம், தேன இவைகளை ஓர் நிறையாய நெருப்பிறபோட்டு புகைபிடிக்கத் தீரும்.

நெல்லிப்பருப்பு, கடுக்காய், நிலவேம்பு, பற்பாடகம், கண்டங்கத்திரி, கடுகுரோகணி, கச்சோலம், உலர்ந்த இஞ்சி, திப்பிலி வகைக்கு பலம் ¼-விகிதமிடித்து ஒரு படி சலத்திறபோட்டு அரைக்காற் படியாய் வற்றவைத்து கொடுக்கத் தீரும்.

## சித்தவிப்பிரமசன்னி குணம்

உடம்பு மிகநொந்து சுரங்காயும் வாதபித்தங் கோபித்துப் பிதற்றி மதிமயங்கும் அழுது விம்மும் மிகச்சிரிப்புண்டாகும் ஆடுகணைகளிக்கும் அடிக்கடி எழுந்து விழும் அழுது புரளும் அலறும் அயரும் விழிக்கும் வந்தபேரை வாஞ்சைபோற் றடவி மகிழும் நெடுமூச்சு செய்து 11-நாட் சென்றால் தீரும்.

## நிவர்த்தி

கடுக்காய், பற்பாடகம், கடுகுரோகணி, நிலவேம்பு, முந்திரிப் பழம், தேவதாரம், தண்ணீர்விட்டான்கிழங்கு, முத்தக்காசு, கொன்றைப்பட்டை, பேய்ப்புடல், தேசாவாரம் இவைகள் நாழியொன்றிற்கு ¼-பலவிகிதம் நசுக்கி ஒருபடி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து கொடுக்கவும் இந்தப்படி ஆறுபோது கொடுக்கத் தீரும்.

முந்திரிப்பழம், பற்பாடகம், நன்னாரிவேர், முளைவேர், வில்வவேர், சந்தனம், விலாமிச்சம்வேர், வெட்டிவேர், பேரீச்சம் பழம், சுக்கு, திப்பிலி இவைகளை வேளை ஒன்றுக்கு காலபலவிகித மிடித்து 2-படி தண்ணீரிறபோட்டு அரைக்காறபடியாய் வற்ற வைத்து கொடுக்க நிவர்த்தியாகும்.

நொச்சியிலை, முள்ளியிலை, கஞ்சாங்கோரையிலை, வெள்ளுள்ளி, திரிகடுகு வகைக்கு பலம் ¼-வீதம் சிதைத்து ஒருபடி சலத்திற போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து கொடுக்கத் தீரும்.

## தாந்திரீகசன்னி குணம்

உடல்சந்து நொந்து உளையுங் குளிரும் காயும் வியர்க்கும் தாகமும் தலைவலிக்கும் வாய்ச்சலம்வடியும் இருமல் சத்திமயக்கம் ஆராடம

உழத்திகாணும நித்திரை சேறும வாரா து புத்தி கலஙகும பலஙகெடும ஏழு நாளில கொனறுவிடும.

## நிவாததி

பாதிரிவேர, உமுரிவேர, நொசசிவேர, சிததிரமூலம, கரிபபான செவதொடடிவேர, பேயபபுடல வகைககுப பலம ¼-வீத மிடிதது ஒரு படி தணணியிற போடடு காறபடியாய் வறறவைதது கொடுககத் தீரும.

திபபிலி, மூததககாசு, பேய்பபுடல, உலாநத இஞசி, சீரகம, கொததமலலி, கூவிளமவேர, கொடடககாநதை, சீநதில இவைகளை முனபோற கியாழஞசெயது கொடுககத் தீரும

பெருவகை, பெருஙகுமிழ, விலவம, முனனை, சிறுமுடடி, பேராமுட்டி, சிறுவழுதலை, கணடஙகததிரி, நெரிஞசி, பாதிரி இவைகளினவேர, திபபிலி, இநதுபபு, அரதை, சுககு, தூதுளை, சீநதில, மஞசள், கோஷடம, தேவதாரம, தணணிவிடடான கிழஙகு, குககில வகைககு வேளை ஒனறுககு ¼-பலவீதம மிடிதது ஒரு படி சலததிற போடடு அரைககாறபடியாய் வறறவைதது ஆறுபோது கொடுதது நொசசி, கருவேபபிலி குஙகிலிய மிவைகளைப பொடிசெய்து இரடடி நாசியிற் புகை பிடிகக நிவாததியாகும.

சிறுதேககு, கடுககாய், கோஷடம, சிறுவழுதலை, தேவதாரம சீநதில, திப்பிலி இவைகளை வேளை ஒனறுககு காலபலவீதமிடிதது ஒருபடி சலததிறபோடடு அரைககாறபடியாய் வறறவைதது கொடுதது திபபிலியை நொசசிசாறறி லரைதது கணணிவிடடுத திரிகடுகு, கோஷ்டம, சீரகம, மஞசள, மரமஞசள, வசமபு இவைகளை ஓர் நிறையாய வெள்ளாட்டு சலமவிடடு சிதைதது நாசியில நசியமிடத் தீரும.

சணபகபுஷ்பம, கடுகுரோகணி, சநதனம, செஙகழுநீர்ககிழஙகு கோஷ்டம், சுககு, விலாமிச்சமவேர், வெட்டிவேர, நனனாரிவேர, பறபாடகம மஞசிட்டி வகைககு பலம்-¼, ஒருபடி தணணியிற் போடடு அரைககாறபடியாய வறறவைதது கொடுககத் தீரும.

## இரபலசனனிக குணம்

உடலநோகும் சுரஙகாயும குளிரும நடுஙகும தாகிககும விககலெடுககும பிதறறும பேயபோலபேசும நெஞ்சில கபஙகடடி இருமும இளைககும தலைசுழறறும எழுநது ஓஙகி நிறகும தளளாடும மாதாமேலாசைகொளளும ஐயோ வெனறபயமிடும பதினலாமநாள் சென்றால சவுககியமாயவிடும.

பரிகாரம் நிலவேம்பு, வட்டத்திருப்பி, முத்தக்காசு, சிறுவழுதலை, சிறுகாஞ்சொறி, கண்டங்கத்திரிவேர், சிறுதேக்கு, திப்பிலி, இவைகளை வேளை ஒன்றுக்கு ¼-வீதம்பிடித்து ஒருபடி தண்ணியிற் போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து கொடுக்கத் தீரும்.

கோரங்கிழங்கு படடை, சங்கம்வேர், பேராமுட்டி, சிற்றாமுட்டி, கொடிவேலிவேர், வெற்றிக்கொம்பு, அதில திப்பிலிமூலம் வகைக்கு பலம் ¼-வீத பிடித்து ஒருபடி தண்ணியிறபோட்டு அரைக்காறபடியாய் வற்றவைத்து கொடுக்கதீரும்.

கருணியாசன்சன்னி குணம்

உடல்நோவும், வெதும்பும், தலைவலிக்கும், தாதிக்கும், பெய்பேசும், தலைசுற்றும், மூர்ச்சை, வாந்தி, விக்கல், இருமல்காணும் கெரிதுராழும் திடுக்கிட்டெழுந்திருக்கும் நித்திரை கொள்ளாது 60-நாளில மீளும்.

நிவாத்தி

அரத்தை, சிறுதேக்கு, திரிகடுகு, சிறுவழுதலை, முத்தக்காசு, கடுக்காய், கடுகுரோகணி, கோஷ்டம், வசம்பு, கடுக்காயபபூ, தான்றிக்காய், நெல்லிப்பருப்பு வகைக்குப பலம் ¼-வீத பிடித்து ஒருபடி தண்ணியிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து கொடுக்கத் தீரும். இவைகளெல்லாம் இச்சாபத்தியம்.

சங்கு சன்னிகுணம்

உடல வெதுப்பும், நாவரளும், தாதிக்கும், இருமும், வயிறுபொருமும், வாந்திபண்ணும், விக்கலெடுக்கும், இருகாதடைக்கும், என்ன சொன்னாலும் பேசாது, நித்திரைகொள்ளும், அசப்பட்டெழுந்திருக்கும், அழும், காதலபூரும், கோபமாகும் 14-நாளில் சுரணமாகும்.

நிவாத்தி

நிலவேம்பு, வெள்ளுள்ளி, சுக்கு, கடுகுரோகணி, பறபாடகம், கலைக்கொம்பு, கடுக்காய, நன்னாரிவேர், தேவதாரம இவைகளை வேளை ஒன்றுக்கு வகைக்கு ¼-பல வீத பிடித்து ஒருபடி தண்ணியிற் போட்டு அரைக்காறபடியாய் வற்றவைத்து இடித்து அதில் இஞ்சி சுரசம், முலைப்பால், திப்பிலிப்பொடி கூட்டி கொடுக்கத்தீரும்.

நிவாத்தி

நாக்கு வெடிக்கும், விக்கலெடுக்கும், இருமும், நடுங்கும், பிதற்றும், நாவு அடிக்கும், காதலினால அடிக்கடி எழுந்திருக்கும் 12-நாள் சென்றால தீரும்.

நிவாத்தி

நெருஞ்சிவேர், எருக்கம்வேர், பறபாடகம், முத்தக்காசு, திப்பிலிமூலம், சுக்கு வகைக்குப் பலம் ¼-வீத பிடித்து ஒருபடி தண்ணியிற போட்டு அரைக்காறபடியாய் வற்றவைத்து கொடுக்கத் தீரும், இச்சாபத்தியம்.

### வாதசன்னி குணம்

உடல காயும, வியர்ககும, புரளும, பயநதோனறி, வெளுககும், இருழும, இளைககும, வயிறு பொருமும, கண சிவககும, நாவு கறுக கும, இடுபபு களையும, குளிரசசி பிறககும.

### நிவர்த்தி

### வாதலெடுதத சகல சன்னி தோஷததிறகும் வாதம் எனபதறகுத தைலம

நததைச்சூரி, கிலுகிலுபபை, வட்டததுததி, வேலிபபருததி, கொடுவேலி, கைவேளை, குபபைமேனி; மாவிலஙகு, முருஙகை, உகாயவாகை இவைகளின வேர்பபட்டை பூநாகம, முசுறுமுடடை, முததின வேம்பட்டை, வசமபு, வலமபுரிககாய், நாட்டுசசீரகம, சிற றரத்தை, மிருதார்சிஙகி, பெருங்காயம, பூண்டு, வாலுளுவை, சவ் வீரம, வெளிச்சிபபிசின வகைககு விராகனிடை-4½, மூனறுவருடஞ சென்ற முத்தின கோழிககுடல, தாமரை, கால இரததம இவை யெல்லாங கூட்டி மைபோலரைதது வேபபெணணெயிற போட்டு காச்சி சிவநத பததததில வடிதது உளளுககு ஒரு துட்டெடை கொடு த்து மேலிலும் பூசததீரும.

நூறு வருஷஞ்சென்ற வேபபமபட்டை, சிவனவேமபு, பிரமி, துளசி, ஆடாதோடை, நொசசி, சஙகு, கிலுகிலுபபை, சிததிரமூலம, வேலிபபருததி, நததைசசூரி, மஞசள, சநதனம, நனனாரி, அதிமது ரம், கோஷ்டம, இநதுபபு, வசமபு, கடுகுரோகணி, முசுறுமுட்டை, மாமஞசள், சிறுதேககு, நலலபாமபு சட்டை, பூநாகம, கடுககாய்,திரி கடுகு வகைககு கழஞசு-1, இவைகளை யிடிதது ஒருபடி நலலெணணெ யிற போட்டு பதமாய காய்சசி உடமபிற றேய்தது மாலையிலவேபபம பட்டை வேதுவிட்டு ஸ்நானஞ் செய்யததீரும.

வேப்பமபட்டை, நொசசி, ஆடாதோடை, துளசி, வேலிப்பரு ததி, பிரமி வகைககுச சாறு படி-1, கோகலம படி-½, கோஷ்டம, அரத்தை, வசமபு, இந்துபபு, சிறுதேக்கு, மாமஞசள, திபபிலி, கற் கடசிஙகி, அதிமதுரம இவைகளை தகரையிலைச சாறறிலரைதது ஒரு படி நல்லெணணெயிற் கூட்டி காய்சசி வடிதது உள்ளுககுக கொடுதது உடமபிற நசியமிட வாதசனனி மாரமாகசசனனி தீரும.

### பிததசனனி குணம்

ஐம்புலன்களும நொநது புண்போல நோகும, அயரும், பதறி நடுங்கும், மெய்சுழிக்கும, புருவநெளிக்கும, கண்ணுவாய்மகோணும, கண் சுறறும்,மாதரை இசசிககும,பிதறறும,புலமபும,நகைககும,வயி றெரியும, வாயுமிடறும், புண்ணாகும, குறறகமமும இசசாபததியம.

### பயிததிய சன்னி குணம்

அடிககடி எழுநது ஓடும, உறுபபாகதும, தரையிற புரண்டு வாய் விட்டாலும கொட்டாவி விடும, சீலையை யுரிநது கிழிததெறியும ஆடிப்பாடிக் கைகொட்டும.

சுபசன்னி குணம்

தூயிலே துணிக்கு துணிக்காய கிழித்தெறியும் உறுத்திக்கேட்டால் வசைபேசும் எதிர்த்தார் முகத்தில் துப்பும் நீர்மலத்தை யுண்ணும்.

பித்தபயித்திய சுபசன்னிகுணம் எத்தம் எனபவதிற்கும்
சுரம வலிப்பு பிடிப்புகட்கு முசுமுசுக்கை நெய்

முசுமுசுக்கைச்சாறு குறுணி, ஆவினநெய் படி1, வேப்பெண்ணை படி-¼ முசுறுமுட்டை, குமரி, சீந்திற்றண்டு இவைகளின் சாறு முலைப்பால் வகைக்குப் படி-½, வாலுளுவையரிசி, அதிமதுரம், தேவதாரம், சிற்றரத்தை, வெட்பாலையரிசி, மரமஞ்சள், சிறுதேக்கு, கச்சோலம், மிளகு, பூநாகம், வெளிச்சிப்பிசின், கம்பிப்பிசின், சிறுமுட்டிச் விலாமிச்சு, வெட்டிவேர், சுக்கு, திப்பிலி, வகைக்குக் கழஞ்சி 62, இவைகளை வெள்ளாட்டுப்பாலி லரைத்துப்போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்து உள்ளுக்குக் கொடுத்து மேலிலும் பூசத் தீரும்.

சிலேத்தம சன்னிகுணம்

நெஞ்சிற்கபங்கட்டி இரையும் வியர்க்கும் தோன்று நெல்லாற் தோன்றும் துணைத்தேடும் சலத்தையும் வெறுக்கும் புறம்புறத்தும் சோரும் மயங்கிடும் நாவெழுக்கும் மலசலம் வெளிப்படுத்தும்

நிவர்த்தி: ஆழுஞ்சி வேர், செவியம், பேராமுட்டி, அரத்தை, சுக்கு, கொடிவேலிவேர், பூசனிவேர், இவைகளை வகைக்குப் பலம்-½, வீதமிடித்து 1-படி தண்ணீயிற்போட்டு அரைக்காற்படியாய் வற்ற வைத்துக் கொடுக்கத் தீரும்.

சகல சன்னிக்கும பொதுப்பிரயோகம்

கடுக்காய், சிறுகீரை, குப்பைமேனி, பிராய இவைகளின் வேர் முருங்கைப்பட்டை, வெள்ளைப்பூண்டு இவைகளை ஓர் நிறையாய முலைப்பாலிலரைத்துக் குழம்பிச் செய்யவில் வைத்துச்சீலையில் வூட்டிப் பிழிந்து உள்ளுக்கு கொடுத்து நாசியில நசியமிடத் தீரும்

சன்னி 10-க்கும தைலம்

வேப்பெண்ணை படி-1, விளக்கெண்ணை படி-½, நல்லெண்ணை படி-¼, ஒன்றாய்க்கலந்து அதில் வெட்பாலை, துளசி, சன்னிநாயகம், வேலிப்பருத்தி, அழுக்கறு, நாய் கடுகு, தைவேளை, எருக்கு, சிவனார், நாரத்தை, ஆதண்டை, குப்பைமேனி, ஈசுரமூலி, பிரண்டை, நொச்சி, கொடிவேலி இவைகளின் வேர்ப்பட்டையை அறைத்து வகைக்கு கொரு எலுமிச்சங்காய்ப் பிரமாணம் அரிதாரம், வெங்காரம், திப்பிலி, கருஞ்சீரகம், ஓமம், கொத்தமல்லி, கடுகு, மிளகு, வெள்ளுள்ளி, கிராம்பு, சாதிக்காய், வசம்பு, வெளிச்சிப்பிசின், பெருங்காயம், துருசு, நேர்வாளம், அக்கிராகாரம், நீர்வெட்டிமுத்து, பூநாகம் வகைக்குக் கழஞ்சு-1 இவைகளை யரைத்துப்போட்டு காய்ச்சிவடித்து உடம்பெங்கும் பூசத் தீரும்.

சந்தி சன்னிகுணம்

உடல்வெதும்பும் தலைவலிக்கும் மூச்சைகாணும் அடிக்கடி எழுந்திருக்கும் கண் சிவந்திருக்கும் அறிவு மயங்கும்.

நிவர்த்தி

ஆடாதோடையிலை, சிறுவழுதலை, தூதுளை, நன்னாரிவேர், சிற்று ரூட்டி, சுக்கு, பற்பாடகம், முத்தக்காசு, சந்தனம், இலுப்பைப் பூ, வகைக்குப் பலம்-½, இடித்து இருநாழி நீரிற்போட்டு உழக்காய்க் காய்ச்சிக் கொடுக்கத் தீரும்.

மாந்த சன்னிக்குணம்

உடல்காயும், கைகால் குளிராதிருக்கும் நாவு கறுத்திருக்கும் மலங்கட்டும் நீரிறங்கும் மயக்கங்காணும் தலைமுகம் வலிக்கும்.

நிவர்த்தி

வெட்டிவேர், விலாமிச்சு, சுக்கு, பற்பாடகம், சிறுதேக்கு வகைக்குப் பலம்-¼ வீதமிடித்து 1-படி தண்ணீரிற்போட்டு அரைக்கால் படியாய் வற்றவைத்து கொடுக்கத் தீரும்.

முகவாத சன்னிக்குணம்

கிண்ணிய புருவத்தில் செவியில் குத்தலுண்டாகி முகத்தையும் வாயையு மொருபக்கமாற்றித் திரிகிவிடும்

நிவாத்தி

நொச்சிச்சாறு படி-½, தழுதா மூ, கழற்கொடி, முடக்கொத்தான், விழுவெற்றிலை, வேப்பருத்தி, சங்கு, கரிசாலை, மேனிவளை, இவைகளின் சாறு வேப்பெண்ணை, விளக்கெண்ணை வகைக்குப்படி-1, நல்லெண்ணை படி-½, சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம் சிறுதேக்கு, கறகடகசிங்கி, அரத்தை, கோலம், தேவதாரம், மாஞசில, சிறுநாகப் பூ, சதகுப்பை, கடுகுரோகணி, மஞசள், மதுஷ்டி, வசம்பு, இந்துப்பு, கடுக்காய், வெடபாலையரிசி வகைக்குக்கழஞசு-1, இவைகளை ஆவின் பாலாலரைத்து கலக்கி காய்ச்சி வடித்து கழஞசு வீதம் உளளுக்கு கொடுத்து உடமபிலும் பூச முகவாத சன்னிக குடலவாதந் தீரும்.

சந்தனம், மரமஞசள், நற்சீரகம், சுக்கு, மிளகு, வெள்ளைப் பூண்டு, மஞசள், இலுப்பைப பிண்ணாக்கு, ஓர் நிறையாய்ப்பொடித்து வெள்ளைச் சீலையில் உருட்டித் திரித்து தீயிற்கொளுத்தி நாசியிற் புகை பிடிக்கத் தீரும்

முத்தின் தேங்காய்ப் பாலில் புளியவிரையின் மேற்றோலைப் பொடித்துப்போட்டு பிசைந்து ரவியில் வைத்துத் தயிலத்தைப்பிழிந் தும் உளளுக்குக்கொடுத்து மேலிலும் பூசத் தீரும்.

அல்லது மேற்படி நெய்யில் எருக்கம்பூவைப்போட்டு காய்ச்சி உள்ளுக்கு கொடுத்து மேலிலும் பூசத் தீரும்.

வெடி சன்னிக் குணம்

காதுளளே திரண்டெழுந்து கனத்துக்குத்தி வலியை யுண்டாகிச் சேதப்படும்படி முகத்தைத் திருப்பும்.

நிவர்த்தி

கடுக்காய், இந்துப்பு, திப்பிலி ஓர்நிறையாய் வெதுப்பிப் பொடித்து திரிகடித்தூளைச் சதாவேரிக் கிழங்குச் சாற்றிற்கொடுக்க மலங்

கழியும் அதின்பேரில் திப்பிலி, உள்ளி, அதிமதுரம், வெளிச்சிப் பிசின், செவ்வள்ளிக்கொடி, மலைதாங்கி, தூதுளைவேர், நிலக்குமிழ்வேர், நன்னாரி, நாயுருவி, பொன்னாங்காணி, நிலவேம்பு, மிளகு வகைக்குப் பலம்-1, அரைத்து 1-படி வேப்பெண்ணெயிற் போட்டுக் காய்ச்சி ஒரு காரண்டி விதிதம் கொடுக்கத் தீரும்.

### சுகசன்னிக குணம்

தயிலஞ் செய்துகொண்டு தயிருமன்னமும் புசித்திருக்கும் போதும், வயிறு மந்தமாயிருக்கும்போதும், தேகமலுத்திருக்கும் போதும், மாதரைப் புணர்ந்தாலும், கடும்புணர்ச்சியினாலும், சுகசன்னிப் பிறக்குப் பிறந்தால் உடம்புநோகும், காயும், கண் சிவக்கும், வியர்க்கும், சுருட்டி எழுந்திருக்கும், பிரமை யுண்டாகும்.

### பரிகாரம்

½-படி இஞ்சிச்சாற்றை முறித்து வடிகட்டி அதற்குச்சரி முலைப் பால் கூட்டி யதில் முசுமுசுக்கை, பூநாகம், திப்பிலி இவைகளைத் தனித்தனி வறுத்துப் பொடித்ததுள் வகைக்கு விராகனிடை-1, போட்டுக் கொடுக்கவும் இந்தப்படி 6-போது கொடுக்கத் தீரும்.

பூநாகம் 1-எலுமிச்சங்காய்ப் பிரமாணம் சீரகம் விராகனிடை-1, இவைகளை ஆவின்பாலிலரைத்து வெந்நீரில் கரைத்து கொடுக்கத் தீரும்.

பழம்புளி, மிளகு, சுக்கு, வெள்ளுள்ளி வகைக்குப் பலம்-1, இவைகளை மைபோலரைத்து 3-உண்டைசெய்து 3-வேளை கொடுக்கத் தீரும்.

### கபாலசன்னிக குணம்

பிடரியைத் திருப்பக்கூடாத வலிகாணும் தலையிலுங் காதிலும் ஈட்டியாற் குத்தினாற்போற் குத்தும் தினவெடுக்கும் புத்தியைக் கெடுக்கும் திமிரேறும் முகம், மூக்கு, கண் சிறுத்துக்காட்டும் வியர்வை, தெம்பு, அயர்வு, சோர்ந்து நடுக்கும் கைகளில் காந்தல்காணும்.

### பரிகாரம்

½-படி வேப்பெண்ணெயில் வெள்ளுள்ளி, வசம்பு, திப்பிலி இவைகளை யரைத்து வகைக்கொரு எலுமிச்சங்காய் பிரமாணம் கருநொச்சி, நாய்வேளை, ஊமத்தம்பிராய் சமூலம் வகைக்கொரு மாங்காய் பிரமாணமரைத்துப்போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்துக் காலையிற் சிரசிலும் உடம்பிலும் தேய்த்து மாலையில் அரப்பிட்டு வெந்நீரில் ஸ்நானஞ் செய்ய கபாலசன்னி தீரும் இவைகளெல்லா மிச்சா பத்தியம்.

### புறவீக்க குணம்

அடுத்தடுத்த தெடுத்துக்குத்தும், அதிகமாய் விரைக்கும், வியர்க்கும், நாவுதடுமாறும், பறகிட்டும், நெஞ்சடைக்கும், தேகத்தைப் பிறக்க வீளத்துத் தள்ளும்.

இரசம், கெந்தகம், வெள்ளுள்ளி, மிளகு, சேங்கொட்டை வகைக்குப் பலம்-½, ஆவின்வெண்ணெயி லரைத்துத் துணியில் கட்டித் திரித்தும் கதிரிற் கோர்த்துத் தீயிற்கொளுத்தத் தயிலம் வடியும் அதில் ஒரு காசெடை உள்ளுக்குக் கொடுத்து மேலினும் தடவத் தீரும்.

இஞசிச்சாறு, முலைபபால, தேன இவைகள் சமமாய் கலநது மேறபடி வியாதி கணடவுடன கொடுககத தீரும மிஞசினால கொஞசம வேபபெணணையாவது ஆலலது மேறபடி தயிலததைவிட்டுக் கொடுககத தீரும.

கிழககாய், நெலலிச்சாறு, இலுப்பைசசாறு, தேன, முலைப்பால இவைகள 4-ஆழாககு விகிதம கலநது அதில வெள்ளுளளி, காநதம், சுககு வகைககு விராகனிடை-1, அரைதது கலககி கொடுககத தீரும.

அழிஞசிபபூ நொசசிபபட்டை பலம்-10, இடிதது 4-படி நீரிற போட்டு ஒரு படியாய வறறவைதது அதில கையாநதகரைச சாறு படி-1, நலலெணணெய படி-1, கூடவிட்டுககாசசி உளளுககுக கொடுதது மேலிலும தடவ நீஙகும.

சன்னி 13-ககு வலிப்பு உட்புகுநது
புறவீசசுககுத தயிலம

சுக்கு, மிளகு, ஓமம வகைககுப பலம்-1, வசமபு பலம்-$\frac{1}{2}$, திப்பிலி, சேஙகொட்டை, வெளிசசிபபிசின வகைககுப பலம்-$\frac{1}{4}$, தெளளுள்ளி பலம்-4, மயிலிறகு பலம்-4, தேவதாரம கழஞசி-3, இவைகளை நன்றாய் பொடிதது 3-படி வேப்பெணணெயிறபோட்டு பதமாய் காசசி வடிதது ஒரு காணடியளவு புளிதளளி கொடுககத தீரும.

புஙகுபுனனை, எளவேமபு, ஆமணககு, இலுபபை இவைகளின எண்ணெயை ஒனறாயக கலநது ரசம, கெநதகம, மனோசிலை, லிஙகம, தாளகம வகைககுக கழஞசு-2, பழஙகாடி யரைததுச சீலையில ஊட்டி யுலர்ததித திரிதது கதிரிற கோதது மேறபடி எணணெயிற றுவைதது சுடாததயில பிறககி காசிடை யுளளுககுக கொடுதது மேலிலும பூசத தீரும.

அணபது கோழிமுட்டைத தயிலம, 10-பலம வெள்ளுள்ளியி லெடுதத தயிலம, வேபபெணணெ படி-1, பூநாகமும சனனியாசமுஞ சோததிறககின குழிததயிலம படி-$\frac{1}{8}$, முருஙகபபட்டை, சிவனவேமபு, எருககமவேர் இமமூனறுஞ சோததிறககின குழிததயிலம் படி-$\frac{1}{4}$, இவைகள ஒனறாயக கலநது அதில நலலபாமபுகணடம வசம்பு வகை பொடிததுபபோட்டு பதமாயக காசசி வடிதது காசிடை உளளுககுக கொடுதது பதைப்புகள தோனறும போடத் தீரும.*

உட்குதது புறவீசசு உடமபுகுதது உடம்புககடுப்புககும
சாவாஙக வாததிறகுத தயிலம்

நலலெணணெ, ஆவிநெய், விளககெணணெ, வேபபெணணெ இலுபபை வகைக்குப படி-1, பெருமாததுவேர், நனனாரி, வெளளெருககம்வேர், அழிஞசிலவேர் இவைகளின பட்டை வெளளுளளி, வசமபு, மிளகு, மஞசள வகைககு பலம்-2, அரைதது பததில வடிதது ஒரு காணடி கொடுதது கொடி கடுகைத துணியிற சுருட்டிப் புகைபிடிககத் தீரும.

### சன்னிதோஷம் வாதத்திற்குச் சூடிநீர்

குருஞ்சிவேர், முருங்கப்பட்டை, வுசாயப்பட்டை, கழற்காழை, கொசசி, பேய்புடல், குப்பைமேனி, பெருமரத்துப்பட்டை, தைவேளை கவுதும்பை, தகரைவேர், சிற்றரத்தை, சுக்கு, சதகுப்பை, அக்ராகாரம், வாய்விளங்கம், திப்பிலி, செவ்வியம், கருநாகுசேரி, வாலமிளகு, ஓமம் இவைகள் வகைக்கு காற்பலம் தட்டி தண்ணியிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்திருத்தி அதில் விங்கமாத்திரையை யுரைத்துக் கொடுக்கத் தீரும்.

### தனுவாதம் புறவீக்கம் இசிவுவாதம் பற்கிட்டல் சன்னிக்கு மேற்பூச்சு தயிலம்

இரசம், அரிதாரம், எலிப்பாற்பாஷாணம், சாதிலிங்கம், சிங்கிநாவிக்கிழங்கு, மஞ்ஞசிலை, கெந்தகம் இவைகளை ஓர் நிறையாய் காடியிலரைத்துத் துணியிலவூட்டி உலர்த்தி வேப்பெண்ணெயிற் சுட்டதயிலமிறக்கி உடம்பிற்பூசி உள்ளுக்கு சட்டாசாரகெந்தூரங்கொடுக்கத் தீரும்.

### பிடருவலி புறவீக்கக் குணம்

தலைகனக்கும் பிடரிவலிக்கும் உடலிறுகுத்துப்போம் திமிரங்கண்டம் உகிலை காணும்.

நல்லெண்ணெ, ஆவிநெய், வேப்பெண்ணெ, சிற்றாமணக்கெண்ணெ வகைக்குப்படி-$\frac{1}{2}$, இவைகளை ஒன்றாய்க்கலந்து அதில் நத்தைச்சூரி, நாயுருவி, சத்திசாரணை, கொடிவேலி, வீழி ஆத்தண்டை, வெள்வேல், எருக்கு, தூதுளை, முலலை, ஈசுரமூலி, வில்வம், சேவனாகிழங்கு, நணாரி, ஓரிலைத்தாமரை இவைகளின்வேர் புங்கங்கொட்டை, உள்ளி, முத்தக்காசு வகைக்குப்பலம்-[illegible], மஞ்சள், வசம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகுரோகணி, ஓமம், வெங்காரம், கெந்தகம், கோவாளம், கோஷ்டம், அதிமதுரம், பூசாக்கரை, நெல்லி, வெளிசசிப்பிசின வகைக்கு கழஞ்சு-1, இவைகளை அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து உடம்பிற்பூச மாலையில் வேப்பம்பட்டைக் கியாழம்வைத்து வேதுவிட்டு வாதம் தீரும்.

### உட்குணத்தின் குணம்

உடம்புகாயும் வியர்க்கும் பற்கிட்டும் கெக்கம்பிரைத்தும் உள்ளே குத்தும் நாவரட்சி காணும் தாகிக்கும் வாயுகீழ்நோக்கும் சத்தத்துடன் பரியும் அன்னபானதி செல்லாது.

அரைப்படி கடுகையிடித்து ஒருதுணியிற்கட்டி வேப்பெண்ணெயிற்றுவைத்து நெருப்பில் வெதுப்பித் தயிலத்தைப்பிழிந்து உச்சி பிடர் கழுத்துநாடி பொருத்து முதலான இடங்களிற்போட்டு காதிலும் நாசியிலும்விட்டு மேற்படி பொட்டணத்தை மேற்படி ஸ்தானங்களில் ஒத்தனஞ்செய்ய உட்குத்துப் புறவீச்சுந்தீரும் இவைகளெல்லாம் இசசாபத்தியம்.

### உட்குத்து புறவீச்சுக்கு

குப்பைமேனி பொன்னாவாரை சிறுபுள்ளடி இவைகளை ஓர் நிலையாய் வேப்பிலையில் உப்புப்போட்டு இடித்துப்பிழிந்த சாற்றுலரைத்து

உடல் சிவந்து திமிர்த்து பரிசமற்று மூக்கு இமையினடி நாவு தடித்து கைகால் குறுகி வெடித்து புண்ணாகி வெடி நாறும் முகம் வியர்க்கும் நாசியடைக்கும் காதவழி சீயோடும் சுவைகெடும் இதை பெரு வியாதியென்றும் சொல்லப்பட் டிருக்கின்றன.

நிவர்த்தி

சிவன்வேம்பு, வெள்ளெருக்கு, சங்கு, கூளாத்தி, தழுதாழை, புங்கு, குமிழ், மாவிலிங்கு, காட்டாமணக்கு, கழற்சி, விளா, கிளா, ஆவாரை, மிளகரணை, இவைகளின் வேர்ப்பட்டை வகைக்கு பலம்-4, புங்கு, இலுப்பை, புன்னை, வேம்பு, அழிஞ்சி, எட்டி, இவைகளின் விரை வகைக்குப் பலம்-5, இவைகளை குழித்தயிலமிறக்கிப்பத்துபலம் எட்டிவிரையை சிறு துண்டுகளாய் நறுக்கி அமுரியில் மூன்றுநாளூறவைத்து சிறு தீயாயெரித்து வறுத்துவைத்து உலர்த்தியிடித்த சூரணத்தையும் ஒரு பாண்டத்தில் குறுணிவெள்ளாட்டுப் பால்விட்டுச் சீலையால் வேடுகட்டி அதின்மேல் 5-பலம் ஆடுதீண்டாப் பாளைவேர், சூரணத்தைவைத்து பிட்டவித்துலர்த்தினதையும் வாலுளுவையரிசி, தான்றிக்காய், கடுக்காய், கரியசீரகம், சுக்கு, கார்கோலரிசி வகைக்கு விராகனிடை-4, நிலவாகை ஆவா அவுரிவேர் வகைக்குபலம்-5, இவைகளையிடித்து வடிகட்டின சூரணத்தையும் ஒன்றாய்க்கலந்து வேளை ஒன்றுக்கு ஒருகழஞ்செடுத்து அதில் ஒருபணவிடை தயிலம்வைத்து ஒரு மண்டலங்கொண்டு தயிலத்தை உடம்பிற் பூசிவரக் குஷ்டம் 18-ம் விஷநீர் வண்டுகடியுந் தீரும்.

நூறுபலம் சடைச்சிவேரை யிடித்து நாலுமரக்கால் தண்ணீரிற் போட்டு நாலிலொன்றாய் வற்றவைத்து வடித்து அதில் மூக்கக்காசு, வாலுளுவையரிசி, இந்துப்பு, திரிபலை, மஞ்சள், இஞ்சி, தேவதாரம், மாலதீவி, செங்கொட்டை, பரங்கிப்பட்டை, மிளகு, காந்தம், அசுவகெந்திக்கிழங்கு, மாவிலிங்கப்பட்டை, தில்லைப்பட்டை, கொடிவேலி வேர்ப்பட்டை, சீரகம், கெந்தி, மஞ்சிட்டி, அதிவிடையம், கரிசாலை, சேங்கொட்டை, கேகனகிழங்கு, வகைக்குக்கழஞ்சு-4, அரைத்துப்போட்டு நெய்படி-4 பால் வகைக்குப்படி-2, கூடவிட்டுக் காய்ச்சி வடித்து வேளைக்குக் கரண்டிவீதம் மண்டலஞ் சாப்பிட்டுவரக் குஷ்டம் 18-வாதசூலை சூலைப்புண் தீரும்.

முற்றின பிராய்மரத்துப் பட்டைத்தூள், அழிஞ்சிப்பருப்பு, கோரைக்கிழங்கு இவைகளின்மாவு வகைக்குபடி-1, நீர்முள்ளிவிரை, கடுக்காய், தான்றிக்காய் இவைகளின் சூரணம் வகைக்கு பலம்-1, இவைகளை மூன்றுபடி செவ்விளநீரி லூறவைத்துலர்த்தி இடித்து வேளை ஒன்றுக்குத் திரிகடிப்பிரமாணம்சாப்பிட்டு வேம்பு, அழிஞ்சி, மாவிலிங்கு, முருங்கை, பேச்சிமுட்டி, பேய்ச்சுரை, தகரைவிலை, சிற்றாமணக்கு, புரசுமுருக்கு, ஊமத்து, இவைகளின் வித்து திரிபலை, வசம்பு, கொடிவேலி, தேற்றாம்பட்டை, பரங்கிப்பட்டை, சேங்கொ

ட்டை, கார்கோலரிசி, வாலுளுவையரிசி, சிவனவேம்பு, கருஞ்சீரகம், வெள்ளருகு, வெந்தாமறைக்கிழங்கு வகைக்கு பலம்-1, வீதம் குழித் தயிலமிறக்கி அதிலுடன் வேப்பெண்ணெ ஆவின்நெய் வகைக்குப் பலம்-1, விட்டு நீர்வற்றக்காய்ச்சி உடம்பிற்பூசி வாரத்திற் கிரண்டு முறை ஸ்நானஞ் செய்துவர மண்டலத்தில் சட்டைதள்ளிக் குஷ்டம் 18-ம் தீரும்.

நிலவாகை, சிவனவேம்பு, வெள்ளருகு, நொச்சி, கொடிவேலி வேர், பூவரசம்பட்டை வகைக்குப்பலம்-10வீதம்இடித்துக்குழித்தயில மிறக்கி யதில் காரம், ரசம், லிங்கம், கெந்தி, பொரிகாரம் வகைக்கிர ண்டு கழஞ்சு பொடித்துப்போட்டு வேளை ஒன்றுக்கு காசிடை வீதம் தேனில் மத்தித்து ஒரு மண்டலங்கொள்ள குஷ்டம் சொறி சிரங்கு தீரும்.

எட்டிவிரை புங்கம்விரை வகைக்குபடி-4;வில்வபழம்-100, இவை களைச்சிதைத்து குழித்தயிலமிறக்கி ஒருகாசிடைவீதம் உட்கொள்ள குஷ்டந்தீரும் சிரசிற்பூச பித்த சூட்டினால் தலைமயிர் உதிர்தல்மாறும் உடம்பிற்பூச சொறி ரணந் தீரும்.

புங்கம்வித்து படி-8, அழுஞ்சிவித்து படி-1, முல்லைவேர் வீசை 2, குமரிக்கிழங்கு வீசை-8, இவைகளை குழித்தயிலமிறக்கி ஒருகாசி எடைவீதம் சாப்பிட்டு உடம்பிற்பூசிவர ஷை வியாதிகள் தீரும்.

அழிஞ்சிற்கு தானற புன்னை இவைகளின் வித்து, கடுக்காய், கார்கோலரிசி, மிளகு, இவைகளை, ஓர்நிறையாய் வமுரியில் இருபதுநா ளூறவைத்துலர்த்தி குழித்தயிலமிறக்கி ஒருகாசிடைவீதம்வெற்றிலை யில்வைத்து ஒரு மண்டலஞ் சாப்பிட்டு உடம்பிலும் பூசிவர மேகச் சொறி, பிளவை, புற்று, ரணம், கண்டமாலை, வெடிசூலை, சூலைநோய், குட்டம், தலைப்புழுவெட்டு, விஷக்கடிகள் தீரும் நரைமயிரிற் றடவக் கறுக்கும்.

சுத்திசெய்தரசம்பலம்-1, கெந்திபலம்-1, தாரமபலம்-2, பரங்கிப் பட்டை பலம்-4 கொடிவேலி வேர்ப்பட்டை பலம்-1½, எட்டிவிரை பலம்-1, சுத்திசெய்து வறுத்த சேங்கொட்டை பலம்-5, இடித்து வேளை ஒன்றுக்கு ஒரு கழஞ்சில் மேற்படி தயிலம் பணவிடை வைத் துண்ண கருங்குஷ்டம், வெண்குஷ்டம், சூலைகிரந்தி, தண்டுபிளவை, புண்கள் அரையாப்பு மூலந் தீரும்.

பரங்கிப்பட்டை சூரணம் பலம்-6, கொடிவேலி, சிறுகுறுஞ்சா, கருஞ்சீரகம், சுத்திசெய்த கெந்தகம், நீர்வெட்டி, முத்து இவைகளின் சூரணம் வகைக்குபலம்-1, சுத்திசெய்த சேங்கொட்டை-100, காட்டு எள்ளுபடி-1, இவையெல்லாம் மயினமாயிடித்து வேளை ஒன்றுக்குத் திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டு வெந்நீர்குடிக்கொள்ள மண்டலத்தில்குஷ் டம் கிரந்திதீரும் பத்தியம் காப்பான் பதார்த்தம் நீக்கவும்.

கருஞ்சூரைவீழி இவைகளின் வேர்ப்பட்டை சீந்திற் சாகரணை பிரமிச மூலம், சிவனார் மூலம், கார்கோலரிசி இவையெல்லாம் ஓர் நிறையா யிடித்துச் சூரணஞ்செய்து திரிகடிப்பிரமாணம் தேனில் மத்தித்து ஒரு மண்டலங்கொள்ளக் கருங்குஷ்டம் தேமல் சொறி தீரும்.

கெந்தகவடகம் பலம்-3, சணம்புவிரை, திரிகடுகு, வாய்விளங்கம், சேங்கொட்டை, லவங்கப்பத்திரி, சித்திரமூலம் வகைக்கு பலம்-½, இடித்துச் சூரணித்துத் திரிகடிப்பிரமாணம் வாழைப்பழத்திலாவது தேனிலாவது கொள்ளக் குட்டம் குறைநோய் குன்மம் மூலம் தீரும்.

அழிஞ்சில்குன்றி, வெள்ளெருக்கு, சித்திரமூலம், வெண்புரசு, காஞ்சிரை, பூவரசு, வெண்ணொச்சி, வில்வம், கருஞ்சூரை, புங்கு, மருந்தோன்றி, சங்கு, வேம்பு, சதுர்க்கள்ளி, தேற்று இவைகளின் வேர், சிவனார்வேம்பு, சமூலம், அகில், தேவதாரம், சந்தனம், வசம்பு இவைகளைத் தனித்தனியே குழித்தயிலமிறக்கி படி ½-வீதம் ஒன்றாய்க் கலந்து அதில் ரசகர்ப்பூரம் பலம்-1, பொடித்துப்போட்டு நீர் வற்றக் காய்ச்சி உடம்பிற் பூசக் குஷ்டவாதம் வலிப்புந் தீரும்.

சேங்கொட்டை-100, எட்டிக்கொட்டை-100, நேர்வாளக்கொட்டை-200, நீர்வெட்டி முத்து படி-2, வாலுளுவையரிசி, கருஞ்சீரகம், நற்சீரகம், மஞ்சள், மிளகு, கொடிவேலி வேர்ப்பட்டை வகைக்கு படி-1 கெந்தகம், அரிதாரம் வகைக்கு பலம்-½, இவைகளைக் குன்றுமணி சாறுவிட்டு இடித்து பில்லைதட்டி யுலர்த்திக் குழித்தயிலமிறக்கி அதில் சூதம், அரிதாரம், லிங்கம், சவுக்காரம், பொரிகாரம் வகைக்கு கழஞ்சு-1, பொடித்துப்போட்டு வேளைக்கு ஒரு காசிடைவீதம் தேனில் மத்தித்து உள்ளுக்குக்கொடுத்து தயிலத்தை உடம்பிற் பூசிவரக் குஷ்டம் கிரந்தி சூலை அரையாப்பு சொறிவண்டு சில விஷக்கடி தீரும்.

இரண்டுபடி எட்டிக்கொட்டையை ஊறவைத்திடித்து வடிகட்டின சூரணத்தை வெள்ளுள்ளி சோத்திடித்து திருகுகள்ளி சாற்றாலாட்டிக் குழித்தயிலமிறக்கி அதில் ரசகர்ப்பூரம் பலம்-¼, பூநீறு சுண்ணம் விராகனிடை-1, பொடித்துப்போட்டு சிவனார்வேம்பு, வெள்ளறுகு சமூலம், சங்கம்வேர் இவைகளை ஓர் நிறையா யிடித்துச் சூரணஞ் செய்து திரிகடிப் பிரமாணத்தில் காசிடை தயிலம் வைத்துண்ணக் குட்டம் வாதம் கிரந்தி மேகம் சூலை மெய்க்கடுப்பிளைவு தீரும்.

செவ்வலரிவேரை யுலர்த்திக் குழித்தயிலமிறக்கி வேளை ஒன்றுக்கு ஒரு துளிவீதம் தண்ணீரிற் கலந்து 3-நாள் கொடுக்க ரணங்கள்தோறும் குருதி வடிந்து தீரும். உப்பு புளி நீக்கி பத்தியமாயிருந்து 7-ம் நாள் தலைக்குத் தண்ணீர் வார்க்கவும்.

வேப்பம்பட்டையை மேற்பாணை தள்ளிப்பிடித்த தூள் பலம்-20 பாண்டத்திற் போட்டு 16-படி காடியில் 20-நாள் ஊறவைத்து சீலை யால் வேடுகட்டி கருங்கோழி வயிற்றில் 2-பலம் அமுக்குருக்கிழங் குச் சூரணத்தை வைத்துத் தைத்து ஓட்டின்மேற் கோழியை வைத்து மூடி வேப்பம் விறகினுலெரித்து நீர் வற்றினபின்பு கோழி யை யுலர்த்தி இடித்த சூரணத்தையும் 10-பலம் பறங்கிப்பட்டைச் சூரணத்தையும் கடுகு, சுக்கு, கருஞ்சீரகம், திப்பிலி, ஓமம், கார்கோ லரிசி, மிளகு வகைக்கு பலம் ½-வீதம் வறுத்து இடித்து வடிகட்டின சூரணத்தையும் ஒன்றாய்க் கலந்து திரிகடிப்பிரமாணத்தை மேற்படி தயிலம் ஒரு விராகனிடை வைத்து மண்டலங்கொள்ள குட்டம் சூலை கிரந்தி வாதம் வாயு அண்டவாதம் கிருச்சவாயு தீரும். புளி காப்பன பதார்த்தம் நீக்கி பத்தியங் கொள்ளவும்.

குட்டரோகப் படலம் முற்றிற்று.

---

# உதரரோகப் படலம்

அதாவது உதரமானது பல உருவாய் நரம்புகளிலிருந்த ரணங் கெட்டு மாறுதலாகி சரகேட்டி மோதுகளில தங்கி பலவாரான ரோகங் களை விளைவிக்கிறதாம்.

## டிை வியாதியின் குணம்

தேகம் வெளுத்துவற்றி கருவிகள் மந்தித்து வயிறு பெருக்கும் அன்னஞ் செல்லாது மலந் தீயும் இவ்வகைப் பெருவயி றென்றும்,

அக்கினி அதிகரித்து நீருண்டாகித் தேகங் கனத்து வயிற்றில் வாயுவுஞ் சலமுங் கோத்து பெருக்கும் இராக்காலத்தில் வாயுக்கலந்து வாதை மிகச்செய்யும் நெஞ்சு வரண்டு தாகமிகும் ஆயாசங்களைப் புண்டாகும் இதை மகோதரனென்றும்,

தேகம் வெளுத்து வற்றி மார்பின்கீழ் வயிறும் காலும் வீங்கிக தாகித்துப் புளியிலும் பல தின்பண்டங்களிலும் இச்சை யுண்டானுல் நீராமயமென்றும்,

தேகத்தில அக்கினி அதிகப்பட்டு நீர் கோத்துக் கண்டவர்கள் யாவரும் பயப்படும்படி வீக்கங்கண்டால் பிறநீர்கோதை யென்றும்,

சுரம் வாயு அதிகரிதலுக் பாயம் வறறிக் கனல்போல வெதுமபி வயிற்றிற் கட்டி யுண்டாகி இடது புறத்திற் புரண்டு ஈரலைமுட்டி உத ரம் பொருமி சோர்வு மயக்கம் நித்திரைபங்கம் அன்னத்துவேஷங்கள் கண்டு கைப்பு புளிப்பு மிக விரும்பினுல் வெப்புப் பாவையென்றுந்

நடுவயிற்றிலாவது வலது பக்கத்திலாவது கட்டிப்போற் றிரண்டு நலிந்து வயிறூதி வலித்தால் கவுசி யென்றும்,

இடதுபக்கத்தில் அதுபோற் கண்டால் கெண்டை என்றும், வயிற்றில் ஆமைபோல கட்டியுண்டாகி உடல் முருகி அக்கினி சுவாலையா யிருந்து அன்னஞ் செல்லாதிருந்தால் நீராமை யென்றும்,

வயிற்றில் ஈரலைப்பற்றிக் குழவிபோற்றிரண்டு குறுக்கேகிடந்து புரளும் மேனோக்கி ஏறும் ஒக்காளிக்கும் அன்னத்தை தள்ளும் உடல் பற்றி பலங்கெடும் பாந்தமுறும் புளித்த தேப்பமிடும் இதை பீலிகை என்றுஞ் சொல்லப்பட் டிருக்கின்றன.

### நிவர்த்தி

குமட்டிக்காய், எலுமிச்சம்பழம், இஞ்சி, கொசுசி, வெள்ளுள்ளி, இவைகளின் சாறு வகைக்குப்படி-¼, ஒன்றாய்க்கலந்து அதில் சுத்தி செய்த கெந்தகம், லவங்கப்பட்டை, இரத்தம், மனோசிலை, காந்தம், சுக்கு, திப்பிலி, திப்பிலிமூலம், செவியம், சித்திரமூலம், ஏலம், சன்ன லவங்கப்பட்டை, கிராம்பு, சாதிலிங்கம், சண்பகப்பூவிரை, வெங்காரம், நவாச்சாரம், மஞ்சள், மரமஞ்சள், கோரைக்கிழங்கு, நன்னாரி, திரிபலை, நேர்வாளம், ஓமம், சீரகம், காட்டுச்சீரகம், தைவேளைவேர், அதிமதுரம், அமுக்குறா, பிரப்பங்கிழங்கு, வகைக்கு விராகனிடை-1½ வீதம் பொடித்துப்போட்டுக் கிண்டி நீர்வற்றின பக்குவத்திலிறக்கிக் கல்வத்திலிட்டு மெழுகுபோல அரைத்து சுண்டக்காய்போ லுண்டை செய்து வேளை ஒன்றுக்கு ஒரு உண்டைவீதம் உப்பு புளிநீக்கிச்சாப்பிட மேற்காட்டிய ரோகங்களும் வாயுத்திரட்சியுங் குணமாந் தீரும். பத்தியம் பாலும் அன்னமுங் கொள்ளவும்.

குமட்டிக்காய், எலுமிச்சம்பழம், வெள்ளுள்ளி, கொசுசி இவைகளின் சாறு வகைக்கு படி-1, ஒன்றாய்க்கலந்து காய்ச்சி ஒருபடியாய் வற்றவைத்துக் கல்வத்திலிட்டு சூதம், லிங்கம், பெருங்காயம், இந்துப்பு, ஓமம், வெங்காரம், கடுகு, மஞ்சள், வெந்தயம், மிளகு, காந்தம், நேர்வாளம் வகைக்குக் கழஞ்சு-3, வீதம் பொடித்துப்போட்டு மெழுகுபோ லரைத்து சிமிழிலவைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு துதுளங்காய்ப் பிரமாணத்தை வெல்லத்திற் பொதிந்து 10-நாள் கொள்ள உதர நோய்கள் குணமம் வாயுவு தீரும்.

வெள்ளாட்டுநீர் காராவின்நீர் வகைக்குபடி-8, ஒன்றாய்க்கலந்து அதில் நவாச்சாரம், கல்லுப்பு வகைக்குப்பலம்-4, பூநீர், நவாச்சாரம், சூடன்குமரிப்பு, புங்கலியுப்பு, பணிகாங்கி, மூலியுப்பு வகைக்கு பலம்-1, வெடியுப்பு பலம்-2, போட்டுக் கரைத்து தெளிவிருத்து தீபம் போல் எரித்துக் காய்ச்சி உப்பானதின்பேரில் விளக்கெண்ணை படி-2

பேய்க்குமட்டிச்சாறு படி, நெல்லிக்காய், கரிப்பான், நிலவாகை, எலுமிச்சம்பழம் இவைகளின் சாறு வகைக்குப்படி-1, கொடிக்கள்ளி, திருகுக்கள்ளி, சதுரக்கள்ளி, இலைக்கள்ளி, எருக்கு இவைகளின் சாறு வகைக்குப்படி-½, முட்கொத்தான், முசுமுசுக்கை, புரசுக்கொன்றை வகைக்குச் சாறு படி-2, விட்டுச் சிவதை, கடுக்காய், தான்றிக்காய் வகைக்குப் பலம்-[illegible], வெள்ளுள்ளி பலம்-1, போட்டு பதமாய்க் காய்ச்சி தேன்விட்டு பிசைந்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவரத் தீரும்

நிலப்பனைக்கிழங்கு, நீர்வள்ளிக்கிழங்கு, நெருஞ்சி, சமூலம், தூதுளை சமூலம், நாணல்வேர், முருக்கம்பூ, வெள்ளரிக்காய், சிறுமுட்டி சமூலம், கீழ்க்காய்நெல்லி சமூலம், பூனைக்காலிப்பிலை, சிறுகீரை சமூலம், விளாவிலை, வில்வயிலை இவைகளைப் பாலில்விட்டு இடித்துப்பிழிந்த சாறு வகைக்குப் பக்கா, வாழைக்கிழங்குச் சாறுபடி-2 அவிவெட்டிவேர், தாமரைவளையம், முல்லைவேர், முத்தக்காசு, நன்னாரிவேர், சிறுசெங்கழுநீர்வம்பு, இலவங்கம், ஏலம், மதுரம், கோஷ்டம் கற்கடகசிங்கி இந்துப்பு, ஓமம், கசகசா, திப்பிலி, சீரகம், திரிபலை, கிராம்பு சாதிக்காய், சாதிப்பத்திரி, மஞ்சிட்டி, பச்சிலைச்சி வடித்து அயச்செந்தூரம், மண்டூரச்செந்தூரம் வகைக்கு 1-பலம் வீதம்போட்டு வேளை ஒன்றுக்கு ஒருகரண்டி வீதம் 20-நாள் சாப்பிடப் பாண்டு காமாலை தீரும். சிலேத்தும பண்டங்களை நீக்கி இச்சாபத்தியம்.

## அதிசாரத்தின்மேற் காணும் சோகைக்கு

சுக்கு, ஆயிலியப்பட்டை வகைக்குப் பலம்-20, இடித்து முக்குறுணி தண்ணீர்விட்டு நாலிலொன்றாய் வற்றவைத்து வடித்த கஷாயத்துடன் தயிர்த்தண்ணீர் படி-2, நெய்படி-2½, கூட்டி அதில் பெருங்காயம், திரிகடுகு, செவியம், ஓமம், திப்பிலிமூலம், கொடிவேலிவேர், ஆனைத்திப்பிலி, நவாச்சாரம் வகைக்கு கழஞ்சு-[illegible], வீதம் அரைத்துப்போட்டு காய்ச்சி நெய்யை வடித்து வேளை ஒன்றுக்கு முக்கழஞ்சு வீதம் சாப்பிட்டுவரத் தீரும்.

## உதரரோகப் படலம் முற்றிற்று.

---

# காமாலே ரோகப் படலம்

அதாவது தேகத்தில் இரத்தம் கெட்டு தசை வெளுத்து ஈரல் கருகி பலவாரான ரோகங்களை விலக்குதலாம்.

## விருத்தம்

சொன்னார் முனிவர் காமாலே சூட்சா சூட்சந் தானறிந்து
புண்ணும் வியாதி சாதகியமும் போரக்குறிப்புந் தனையறிதல்
குன்றும் நேத்திரப் பரீட்சைகளும் கூறுபாகந் தனைப் புகழ்ந்து
அன்னை தாமும் தானறிய அரைந்தார் வயித்திய சாரமிதே.

## மேற்படி வியாதியின் குணம்

தேகம அசைத்துப் புண்போல் நொந்து கண்வெளுத்து, நாவு உலர்ந்து, வயிறு பெருமிக் கழிந்து, நீர் மஞ்சள் நிறமாயிறங்கி, தாகம் மூர்ச்சை அசதிகண்டால், காமாலே யென்றும், தேகம வரண்டு முக மரைத்து விழிகள் வெளுத்து தாதுகெட்டு பலங்குறைந்து நடக்கிற திகைப்பு, இளைப்பு, கைகாலோய்வு, அசதி, நித்திரை, அன்னத்து வேஷம் கண்டால வாட்காமாலே யென்றும், தேகமூலர்ந்து, கடுத்து, வலித்துக் கண் வெளுத்து பசக்கும், மூலத்தில அக்கினி மந்தித்து, அன்னத்தை ஒழித்து, கைகாலோய்ந்து, பலங்கெட்டு, அயர்ந்து புறங்கால் தைத்து, மலங்கட்டி, வயிறுபொருமி, ஆயாசங் களைப்புண்டானல் வாதகாமாலே யென்றும், தேகம் வரண்டு வெளுத்து, முகங்கனத்து, கைகால் தீப்போற்காந்தி செருமலெடுத்து, விருநீர மஞ்சணித்து, அன்னரு சமையால் வயிறு பொருமிக கழிந்து, வாந்தி கிறுகிறுப்பு அசதிகண்டால பித்தகாமாலேயென்றும, தலேமுழுகரு முகமவியாத்து உடல் நடுங்கி நாக்கு கண்ணீர் வெளுத்து வெளிவீங்கி இருமல விக்க லெடுத்து நித்திரை கெட்டு நடக்கில மேல்மூச்சு இளைப்பு கண்டால் சிலேத்ம காமாலேயென்றும், அக்கினி மந்தித்து அன்னம ஒழித்துக் கண்மலம் நீர் மஞ்சளா யிருந்தால் மஞ்சட் காமாலே யென்றுஞ் சொல லப்பட் டிருக்கின்றன.

## திவர்த்தி

காந்தம், அரப்பொடி, மிளகு, கரிப்பான் சமூலம் வகைக்குப் பலம்-3, இந்த மூன்று வகையையும மேற்படி சாற்றுல் விரண்டு நாள் விடாமலாட்டி கழற்சிக்காய் பிரமாணம உண்டைசெய்து வேளை ஒன்றுக்கு ஒருண்டைவீதம் 12-நாள் இஞ்சிச சாற்றில் கொடுத்து மோரும் அன்னமும் பத்தியம் கொடுத்து அப்பால 6-முறை ஒன்றை விட் டொருநாள் மூக்கூட்டெண்ணெ தேய்த்து ஸ்நானஞ் செய்துவர சகல காமாலே தீரும். இச்சா பத்தியம்.

காட்டுக் கோவைச்சாறு, பருத்திக் கொட்டைபால், பசுவின்பால் வகைக்குப்படி-½, பாசிப்பருப்பு, பச்சரிசி, சுக்கு, குறுணி வகைக்கு படி-⅛, சாக்கரை பலம்-3, இவைகளெல்லாம ஒன்றாயக கலந்து இரவில வேகவைகது நாலிலொன்றாய வற்றினதினபேரில காலையிற் கொடுக்கவும இந்தப்படி மூன்றுபொழுது கொடுக்க மஞ்சட் காமாலை தீரும இச்சா பததியம.

திரிகடுகு, கருஞ்சீரகம், நற்சீரகம், ஓமம், வாலுளுவையரிசி, வசம்பு, காயம, வெள்ளுள்ளி இவைகளின சூரணம வகைக்கு கழஞ்சு 6, அயசெந்தூரம கழஞ்சு-12, கெந்தக செந்தூரம கழஞ்சு-9, கிட்டசெந்தூரம கழஞ்சு-18, மூததககாசு சிவனவேம்பு இவைகளின் சூரணம் வகைக்கு உழக்கு ஒன்றாய்க கலந்து வேளை ஒன்றிறகுத் திரிகடிப் பிரமாணம் வெந்நீரில 18-நாள் கொள்ள காமாலை பாண்டு தீரும். வாய்வு பண்டங்களை நீக்கவும்.

ஆவினநெய், மோர், கோசலம, கொடிக்கள்ளிபால் வகைக்குட் படி-¼, திரிகடுகு, ஓமம, திரிபலை, இந்துப்பு, சீரகம, சவுககாரம, கோஷ்டம வகைக்கு விராகனிடை-1, சுததிசெய்த நேர்வாளபபருப்பு பெருங்காயம வகைக்கு விராகனிடை-4, இவைகளை அரைததுப் போட்டுக காய்ச்சி நெய்யை வடிதது வேளை ஒன்றுக்கு ஒரு காசிடை வீதம 10-நாள் சாப்பிட காமாலை, பாண்டு, வீக்கம, நீர்க்கோவை, உதரரோகந் தீரும. கரப்பான் பதார்ததம நீக்கவும்.

கையாந்தகரை, துமபை, அம்மான்பச்சரிசி வகைக்கொருபிடி வீதம் இடிததுச் சாறு பிழிந்து அதில 12-மிளகை அரைததுக் கலக்கி அதில வெள்ளாட்டுப்பாலாவது ஆவினபாலாவது ¼-படி விட்டுக் கலந்து சீனி பலம்-10, கூடபோட்டுக கொடுககவும இந்தபபடி 6-நாட் கொடுகக காமாலை தீரும. கடும பததியம.

அரைப்பொடி சிட்டம், காந்தம், திரிபலை, திரிகடு கு, கருஞசீரகம் நற்சீரகம, இந்துபபு, காயம இவைகளை ஓர்நிறையா யிடிதது சூரணித்துக் கரிப்பான சாறறால மயனமாயாட்டிக கொட்டைப்பாகதுப பிரமாணம் உண்டைசெய்து வேளை ஒன்றுகக ஒருண்டைவீதம இஞ்சிச் சாறறிலாவது எலுமிச்சம்பழச சாறறிலாவது 10-நாட் கொளள பாண்டு, சோகை, காமாலை தீரும. பிதத பதார்ததம தள்ளவும்.

ஒன்றுமுதல் மூன்றுவரை முட்டையிட்ட கருங்கோழி ஈரலைக் கொழுப்புட னெடுதது ஆவரையிலையை ஒரு சட்டிநிறை அமுக்கி அதினமேல ஈரலைவைகது மேலும மேறபட்டியிலுமாக இலையை அமுக்கி மூடிச் சக்துவாய் சீலைசெய்து மூன்று நாழிகை யெறித்தெடுதது மூன்று துண்டுசெய்து வேளை ஒன்றுக்கு ஒரு துண்டாக மூன்று வேளை சாப்பிடத் தீரும. இச்சா பததியம.

நெல்லியிலையைப் புன்னைக்காய் பிரமாணம் அரைத்து ¼-படி புளித்த மோரிற் கலக்கி 3-நாட் காலையில் கொடுக்கத் தீரும்.

வெள்ளைக்காக்கணன் வேர்ப்பட்டையை ஒரு பாக்களவரைத்து எருமைத் தயிரிற் கலக்கி 3-நாள் கொள்ளத் தீரும்.

சீரகத்தையும் சங்கம்வேர்ப்பட்டையும் வகைக்கு ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் அரைத்து ஆவின்பாலிற் கலக்கிக் கொடுக்கத் தீரும்.

அரப்பொடி, சுக்கு, மிளகு, திப்பிலி, வெள்ளுள்ளி, ஓமம் வகைக்கு பலம்-1, பெருங்காயம் பலம்-4, கடுக்காய் பலம்-5, இந்துப்பு, சீரகம், காந்தம் வகைக்கு பலம்-2, உப்பு உழக்கு இவைகளை யெல்லாம் கரிப்பான் சாற்றால் 3-நாள் வரை யெழுகுபோலாட்டிக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் உண்டைசெய்து மேலே ஒன்றுக்கு ஒரு உண்டைவீதம் எலுமிச்சம்பழச்சாற்றில் 10-நாள் கொள்ள பாண்டுகள் தீரும். பத்தியம் மோருமன்னமுமே கொள்ளத் தீரும்.

## காமாலைரோகப் படலம் முற்றிற்று.

---

# கண்டமாலைரோகப் படலம்

அதாவது மேகநீரால் நரம்புவழியாய் இரத்தம் கெட்டு கட்டிபோல் திரண்டுருண்டுதலாம்.

### விருத்தம்

செப்பிடுமேகந்தானும் திரண்டுமேபலவாறாக
கப்பியோரமபைப்பற்றிக் கசிந்துநீர்திகமாகி
ஒப்புடன்சிரசைத்தாங்கி யோங்கித்தண்டகத்தின்கீழ
மெய்ப்புடன்கண்டமாலை யாகவேவிளைந்திதன்னே.

### மேற்படி வியாதியின் குணம்.

கண்டத்தைச்சுற்றி யெரித்துத் தடித்து வெடித்து புண்ணாக்கிச் சீய்கட்டிப் புரையோடும்.

சங்கங்குப்பி, செங்கத்தாரி, அவிரி, சின்னி, தூருத்தி, நிலவாகை, கொடிவேலி, காட்டாமணக்கு இவைகளின் வேர்ப்பட்டை சிவன் வேம்பு, சமூலம், வெள்ளறுகு, மூலம் இவைகளை நிழலிலுலர்த்தி இடித்து வடிகட்டி சூரணம் வகைக்கு பலம்-5, பறங்கிப்பட்டை பலம்-3, குத்தில, அசமதாகம், கருஞ்சீரகம் வகைக்குபலம்-1, வெள்ளுள்ளி பலம்-2, திப்பிலி, மிளகுதிப்பிலி, மூலம், செவியம், தேசா

வாம், கடுக்ரோகணி வகைக்கு பலம்-3, இவைகளை இடித்துச் சூரணஞ்செய்து இருவகை சூரணத்தையும் ஒன்றாய்க் கலந்து வேளை ஒன்றுக்கு திரிகடிப்பிரமாணம் ஒரு மண்டலம் கரப்பன் பதார்த்தம் நீக்கிச் சாப்பிட்டுவரக் கண்டமாலை கிரந்தி கரப்பன் தீரும்.

கெந்தகத்தைக் கோழி முட்டை வெள்ளைக்கருவிலும் வில்வயிலைச் சாற்றிலும் வகைக்கு 2-நாள் தனித்தனியே அரைத்து காயவைத்து இரண்டு தபா மணல் மறைவில் புடம்போட்ட கெந்தகம் பலம்-1, நொச்சி, குப்பைமேனி, கழற்சி, இரண்டு முருங்கை இவைகளின் கொழுந்து வகைக்கு ஒருபிடி வெள்ளறுகு பலம்-2, பொரியரிசி அரைச்சிறங்கை, கருப்புக்கட்டி விராகனிடை-3, புளி விராகனிடை-1½, இவைகளின் சேங்கொட்டைப் பையிலம்போக வறுத்துப்போட்டு ஒன்றாயிடித்து 3-நாட் கொடுத்து மறுபத்தியம் 3-நாளிருந்து 8-நாள் தலைக்குத் தண்ணீர்வார்த்து உப்பு வறுத்துக் கூட்டவும் வாய் வெந்தால் மருதம்பட்டை கஷாயங் கொப்பளிக்கவும், கண்டமாலை கன்னப்புற்று வெடிசூலை கரப்பன் தீரும்.

காரெள்ளு எண்ணெய் படி கால் சித்திரமூலப்பட்டை பலம் அரைத்துப்போட்டு எண்ணெய் காய்ந்துவரும்போது 3-விராகனிடை கருப்பு கட்டியை தட்டிப்போட்டு மெழுகுபதத்தில் இறக்கி வைத்துக் கொண்டு 3-நாள் வரை வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டிவீதம் உப்பு புளி பத்தியமாயிருக்கக் கண்டமாலை அரையாப்பு தீரும்.

நல்லெண்ணெய், ஆவின்பால் வகைக்கு படி-1, கொடிவேலிவேர் பட்டை, பூண்டு வகைக்கு பலம்-1, சங்கு, நாயுருவி, சிறுபூளை, இவைகளின் வேர்ப்பட்டை வகைக்கு பலம்-½, வசம்பு விராகனிடை-2, இவைகளை யரைத்துப்போட்டு ஒருநாள் வெய்யலில் வைத்து மறுநாட் காச்சி வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டிவீதம் 7-நாள் உப்பு புளி நீக்கிச் சாப்பிட்டுவர தீரும்.

### கண்டமாலை முதலான ரணங்களுக்குக் களிம்பு.

துத்தம், கெந்தகம், சூலை, காசுக்கட்டி, துருசு, குங்கிலியம், குக்கில், மிருதாரசிங்கி, காரம், வேப்பம்பட்டை, வெந்தோன்றிக்கிழங்கு, இவைகளை ஓர் நிறையாய் எருக்கிலைச்சாற்றால் ஒருநாளாட்டி உலர்த்திப் பின்பு வேப்பெண்ணெய் விட்டு களிப்பாக்கு அரைத்து புண்ணிற் றடவிவரத் தீரும்.

வெள்ளைப்பாஷாணம், மனோசிலை, காரீயம், வெந்தோன்றிக்கிழங்கு, சூதகம், கெந்தகம், அரிதாரம், மிருதாரசிங்கி, துத்தம், துருசி, இவைகளை ஓர் நிறையாய் வெற்றிலைச்சாற்றாலாட்டி உலர்த்திப் பின்பு வேப்பெண்ணெய் படி கால் நரிவிரட்டி, பெருந்தும்பை, எட்டி இவைகளின் வேர்ப்பட்டை வகைக்கு பலம் 1-வீதம் அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து கலவத்திலிட்டு களிம்புபோலரைத்துப் புண்ணிற்போட ஆறும்.

மேற்படி ரணங்களுக்குத் துவர்ச்சீலை

உதியபெருமரம், வேம்பு, செங்கத்தாரி, பூந்தாப்பன, இவைக ளின் பட்டை தேவதாரம் வகைக்கு பலம்-2, கருஞ்சீரகம், கஸ்தூரி மஞ்சள், மிளகு, பூண்டு, வெள்ளைக்குங்கிலியம், காசுக்கட்டி வகைக்கு பலம்-1, துருசு வகைக்கு பலம்-$\frac{1}{4}$ இவைகளை யரைத்து $\frac{1}{4}$-படி நல லெண்ணெயிலாவது வேப்பெண்ணெயிலாவது போட்டுக் காய்ச்சி வடித்து சீலையிலூட்டி ரணங்களிற் போட்டுவரத் தீரும்.

கண்டமாலை, விருப்பருதி, அரையாப்பு, மூலக்குத்து கட்டுகளுக்கு மேற்பூச்சு

ஆவின்நெய்யில் பால் வகைக்கு படி-$\frac{1}{2}$, சதுரக்கள்ளிப்பால் படி அரைக்கால், விஷ்ணுகாந்தி, வட்டத்திருப்பி, கொடிவேலி இவை களின் சாறு வகைக்கு படி $\frac{1}{4}$-வீதம் அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து ஒரு காசு எடை உள்ளுக்குக் கொடுத்து மேலிலும் பூசத் தீரும். உப்பு புளி நீக்க பத்தியங் கொள்ளவும்.

காற்படி வேப்பெண்ணெயில் வலம்புரிக்காய், கஸ்தூரி மஞ்சள், ஏலம், கருஞ்சீரகம், துருசு, துத்தம், வகைக்கு கழஞ்சு-2, மாவி லிங்கம் கொழுந்து கொடுவேலி வேர்ப்பட்டை வகைக்கு பலம்-1, அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்துப் பூசமாறும் அதுகளெல்லாம் இச்சாபத்தியம்.

கண்டமாலைரோகப் படலம் முற்றிற்று.

---

# சோகைரோகப் படலம்

அதாவது பாண்டுரோகத்திலிருந்து நீர்கெட்டு சோகை வருதலாம்

விருத்தம்

கூறுஞ்சோகை குறிப்பஞ்சயறிந்துமே
தூறுமவியாதிகள் துப்புறவாகிட
ஆறும்பண்டிதா அனபாகப்போற்றிட
கோறுமாமுனி குறிப்பாயுரைத்ததே.

வாதசோகை குணம்

தேகம் அதைத்து நாவரண்டு விருமஞ்சணித்து நீர் வெதுப்பிப் பொன்னிறமாயிறங்கி கைகால்லோயும்.

### பித்தசோகைக் குணம்

மெய் வெளுத்துக் கடுத்து தலை மிநிர்ந்து முகம் வைத்து கண் வெளுத்தலர்ந்து நெஞ்சம் பதைத்து அடி வயறு கனத்து விம்மும் நாவில் ருசியும் அற்று நாக்கு உதடு மஞ்சணித்து இருக்காதடைந்து கைகால் மிக ஓய்ந்து நீர் வெளுக்கிறந்தும்.

கிழக்காய் நல்லி மூன்றுபங்கும், ஈருள்ளி ஒருபங்குஞ் சேர்த்து மோர் தெளித்து யிடித்து சாறு பிழிந்து ¼-படி வீதம் 3-நாட் காலையில் கொடுக்க நன்றாய் பேதியாகி வீக்கம் வற்றும்.

ஆவிநீர், வெள்ளாட்டுநீர், கரிப்பானசாறு வகைக்கு படி-½, ஒன்றாய்க் கலந்து அதில் நாட்சென்ற இருப்புச்சிட்டத்தை ஒரு மண்டலம் ஊறவைத்துலர்த்தி பொடித்த தூளும் சுக்கும் வெதுப்பி ஓர் நிறையாய் கலந்து வேளை ஒன்றுக்குத் திரிகடிப்பிரமாணம் 10-நாட் கொள்ளத் தீரும்.

அரப்பொடி, காந்தம் வகைக்கு விராகனிடை-9, விங்கம் விராகனிடை-½, இவைகளை நாவற்பட்டைச் சாற்றாலும் எலுமிச்சம்பழச் சாற்றாலும் வகைக்கு ஒருநாளாட்டி வில்லை தட்டிக் காயவைத்து ஒரு சலத்திற்போட்டு வேடுகட்டி நெற்குழியில் ஒருமண்டலம் வேளை ஒன்றுக்கு 2-விராகனிடை வீதம் நல்லெண்ணெயில் மத்தித்து 10-நாள் காரப்பண பதார்த்தம் நீக்கி சாப்பிட்டுவர சோகை காமாலை தீரும்.

இரசம், கெந்தகம், வெங்காரம், இந்துப்பு, அரப்பொடி, திப்பிலி, ரசம், தகரம், கருஞ்சீரகம், பெருங்காயம், மிளகு, கடுகு இவைகளை ஓர் நிறையாய்க் கையாந்தகரைச் சாற்றாலாட்டித் தோருவிரைப் பிரமாணம் உண்டைசெய்து வேளை ஒன்றுக்கு ஒருண்டை வீதம் இஞ்சி சாற்றில் 10-நாட் கொள்ளத் தீரும்.

அரப்பொடி, காந்தம், இருப்புச்சிட்டம் வகைக்குப்பலம்-1, இவைகளைக் கையாந்தகரைச்சாற்றால் 3-நாளாட்டி புன்னைக்காய்ப் பிரமாணம் உண்டைசெய்து வேளை ஒன்றுக்கு ஒருண்டைவீதம் காலையில் எருமைமோரிலும் மாலையில் நீர்முள்ளிக் கியாழத்திலுங் கொடுக்கத் தீரும். இதுகளெல்லாம் இச்சாபத்தியம்.

### சோகைரோகப் படலம் முற்றிற்று.

# பிளவை ரோகப் படலம்

அதாவது தசைகளில் பூசயியுண்டாகி மாமிசத்தைத் தின்று மஞ்சள்நீர் கொள்ளுதலாம்.

விருத்தம்

அறைந்தார்ஆயுள்வேதமிது அனபாய்மாந்தர்தானறிய
நிறைந்தார்பிளவைசேரு *விதமநிலையாமூரணமவந்தவகை
திறந்தார்விஷநீர்தானபாவி தெரிகருமராசகட்டிகுணம
முறைந்தார்முனிவரானவரும்மொழிந்தாமொழிந்தார்மொழிந்தாரே.

மேற்படி வியாதியின் குணம்

நடுமுதுகின முள்ளந்தண்டினபேரில மாஙகாய் அல்லது தாமரைக்காய்போல் வீஙகி முக்கண்ணுண்டாகி புரையோடி வேதனை யதிகரிதது மூச்சுவிடாக்குதது, குளிர்சுரம், நாவரடசி, ரோபதாபங்கண்டால ராஜபிளவையெனறும மருநதினாலும் கருவியினாலும் தீராதெனறும் முளளந்தண்டோரததில் உரைபோற்றிரணடும பலகண்ணும் புரையுமுண்டாகித தலனங்கழிச்சல் கண்டாற பக்கபிளவை யென்றும, மார்பில தொண்டுபோற் றிரண்டு கண்டால் மார்புப்பிளவை யென்றுஞ் சொலலபபட டிருககின்றன.

நிவாத்தி

செல்விவேர்ப்பட்டை, நிலபபனைககிழங்கு, நெற்பொறி, ஆவாரை வேர்ப்பட்டை இவைகளை ஓர்நிறையாய் முலைபபாலி லரைதது ஆவின் வெண்ணெயால் மததிதது பூசிவநதாலும வீககததின விதனம வாங்கும் வாராகிககிழங்கை முலைப்பாலி லரைதது ஆவின வெண்ணெயில மத்தித்து வீக்கததிற பூசிவர விதனம் வாஙகும் காரம், துருசு, பாஷாணம இவைகளை ஓர் நிறையாய் வெண்ணெயா லரைதது களிமபுசெய்து வீககததிற் பூச உடையும பின்பு களிமபைத துணியிலூட்டிப் புண்ணிற்போட்டு 3-நாள தயிலஞ்சோறும வைததுககட்டி காகாரததின் வெப்பையாற்றிப் பினபு வேமபாடமபட்டை-2, ஆவாரைவேர்பட்டை பலம்-1, துடரிபூலா இவைகளின் வேர்பபட்டை வகைக்கு பலம்-½, இவைகளைப் பொடிதது நல்லெண்ணெயிற்போட்டு காய்சசி வடித்துப் பகலிற் புண்ணிறபூச இரவில ஆவாரங் கொழுந்தை வதக்கிவைத்து கட்டிவரத் தீரும.

ஆயாரை வேர்ப்பட்டையை அரைத்துப் புண்ணைச்சுற்றி சுவர் போல வளைத்து சேங்கொட்டையைச் சுட்ட கரியைப் பொடித்துத் தூவிக் கட்டிவைத்திருந்து மாலையில் ஆவாரங்கொழுந்தை ஆவின்நீரில் வதக்கிவைத்துக் கட்டிச் சூரிய உதயத்தில் சுடுதண்ணீரால் புண்ணைக் கழுவிவரப் புண்ணாறும்.

மலைதாங்கிவேர், ஆவாரம்பூ, குருவையரிசி, மா இவைகளை இடித்துப் பிட்டவித்துக் கொடுக்க ரணத்தில நீக்கசிதல வாங்கும்.

பொன்னுவரை யல்லியைக் கொட்டைப்பாக்குப் பிரமாண மரைத்து புளித்தமோரிற் கலக்கிக் கொடுக்க நாவரட்சி தாகந் தீரும்.

கோவைக்கிழங்கைத் தயிரவிட்டரைத்துக் கட்டினாலும் அல்லது பிளவைக் கொள்ளிக்கிழங்கை யரைத்துக் கட்டினாலும் ஆணி விழுந்து புண்ணாறும்.

பிளவைரோகப் படலம் முற்றிற்று.

---

## வயிற்றுவலி ரோகப் படலம்

அதாவது மலசிக்கலாகி மூலத்தில் கனலேறி சூடுகொண்டு குடல முறுக்குதலாகும் அதில் உற்பத்தி அனேகரோக மெனப்படும்.

விருத்தம்

சொன்னார்நந்தி தொடருங்குணமவகை
மின்னாராயுறு வேதமிதுவலலோ
அன்னேமேகமறையும வயிற்றுநோய்
பொன்னேமாதா புகலவரைந்ததே.

ஒருபிடி பிரண்டையைக் குறுக நறுக்கிச சிதைத்துச் சட்டியிற் போட்டு வறுத்து படித்தண்ணீரும் ½-படி மோரும விட்டு திப்பிலி வெள்ளுள்ளி வகைக்கு விராகனிடை-5, தட்டிப்போட்டு ஒரு சிராங்கையாக வற்றவைத்துக் கொடுக்கத் தீரும.

முருங்கை கழற்சி, சிவன்வேம்பு, மூக்கரைச்சாரணை, கொடிவேலி இவைகளின் வேர்ப்பட்டை, வெள்ளுள்ளி, பெருங்காயம் வகைக்கு விராகனிடை-2, இரண்டுபடி தண்ணீரிற்போட்டு காற்படியாய் வற்றவைத்து வேளை யொன்றுக்கு ⅛-படி வீதம 2-வேளைக் கொள்ளத் தீரும்,

ஓமம், கருப்புக்கட்டி, இந்துப்பு, பூண்டு, சுக்கு, திப்பிலிவகைக் குக் கழஞ்சு-1, புங்கு, வேம்பு இவைகளின் கொழுந்து வகைக்கு ஒரு பிடி நன்றாயரைத்து பாக்களவாயுருட்டி வேளையொன்றுக்கு ஒருண்டை வீதம் வெந்நீரி லரைத்துச் சாப்பிட்டுவரத் தீரும்.

திரிகடுகு, ஓமம், சதகுப்பை வகைக்குப் பலம்-¼, கடுகுரோ கணி வகைக்கு விராகனிடை ஒன்றாக கருக்கின இலுப்பைப் பிண்ணாக்கு, கருப்புக்கட்டி வகைக்குப்பலம்-1, இவைகளை குழம்புபோற் காசுசின ¼, படி பிரண்டைச்சாறு விட்டிக் கொட்டைப் பாக்குப் பிரமாணம் உண்டைசெய்து வேளையொன்றுக்கு ஒருண்டைவீதஞ்சாப் பிட்டுவரத் தீரும்.

அரைப்படி ஆவின்நெய்யில 6-பலச் சீனியைப்போட்டுக் காய்சி 9-பலம் சுக்குத்தூளைத் தூவிக்கிண்டி களிபோல வரும்போது மறு படி 6-பலச் சீனியைப்போட்டுக் கிண்டி வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு ஒரு எலுமிச்சங்காய்ப் பிரமாணம் சாப்பிட்டு வரத் தீரும்.

ஒருபடி கோவைக்காயை இரண்டாய் கீறி-¼-படி உப்புப்போட்டு ஊறவைத்துப் பத்துநாள் சென்றபின்பு அசனத்துடன் சேர்த்து பொசித்துவர நெடுநாளைய வயிற்றுவலி நீங்கும்.

முருங்கைப்பூ, முற்றின பிரண்டை வகைக்கு ஒரு பிடி கொப் பரைத்தேங்காய்-1, இவைகளை யிடித்துப் பிட்டவித்துப் பிழிந்து கொடுக்க வயிற்றுவலி தீரும்.

ஒருபடி பிரண்டைச்சாற்றை ¼-படியாய் வற்றவைத்து கல வத்திட்டு இலுப்பை யரைப்பைச்சுட்டகரி பலம்-2, கருப்புக்கட்டி பலமரை கூட்டிப்போட்டு மெழுகுபோ லரைத்து கழற்காய்போ லுண் டைசெய்து வேளை ஒன்றுக்கு ஒருண்டைவீதம் ஒருமண்டலங்கொள் ளத்தீரும் இதுகளெல்லாம் இச்சாபத்தியம்.

## வயிற்றுவலி முதலானதற்கு

கரியுப்பு, எருமைமோர், பேய்க்குமட்டிக்காய் சாறு வகைக்குப் படி-1, ஒன்றாய்க்கலந்து இந்துப்பு, சவுட்டுப்பு, வளையலுப்பு, வெடி யுப்பு வகைக்கு விராகனிடை-1, பொடித்துப்போட்டு காய்ச்சி வைத் துக்கொண்டு உதயத்தில் நீராகாரத்தில் ஒருகாசிடை உப்புபோட்டு ஒரு மண்டலங்கொள்ள சகலவிதமான கட்டிகள் கெண்டை சோகை பொருமல் வயிற்றுவலி தீரும்.

### வயிற்றுவலி அக்கினிமந்தத்திற்கு வச்சிரவல்லி லேகியம்

பிரண்டைச்சாறுபடி-4, இஞ்சிச்சாறு படி-¼, ஒன்றாய்க் கலந்து ஆறுபலக் கருப்புக்கட்டியைக் கரைத்து பாகுசெய்து, திப்பிலி, மிளகு, ஓமம் வகைக்குப் பலம்-1, வெள்ளுள்ளி பலம்-5, சுக்கு, இந்துப்பு, கல்லுப்பு, வளையலுப்பு, அட்டுப்பு வகைக்குப் பலம் அரை பெருங்காயம் விராகனிடை-4, இவைகளைப் பொடித்துத் தூவிக் கிண்டி நெய் தேன்விட்டு லேகியஞ்செய்து வேளை ஒன்றுக்கு கொட்டைப்பாக்கு பிரமாணம் சாப்பிட்டுவரத் தீரும்.

### வயிற்றுவலிக்கும் பேய்க்குமட்டி விரோசனம்

பேய்க்குமட்டிக்காய்ச் சாறு படி-4, நல்லெண்ணை படி-1, சீரகம் ஓமம், சுக்கு, கொத்தகம், கருஞ்சீரகம், மிளகு, வெள்ளைப்பூண்டு, இந்துப்பு, பெருங்காயம், திப்பிலி, மல்லி, சதகுப்பை, செஞ்சந்தனம், பூலாங்கிழங்கு வகைக்கு பலம்-1 சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு பலம்-6, இவைகளை யரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து ஒரு காசிடை கொடுக்கச் சகல வயிற்றுநோயுந் தீரும்.

### இரத்த சுத்திக்கு

கார்பலவெந்தயத்தை ஊறப்போட்டு அரைத்து 4-தேங்காய் பாலிற்கலக்கி அதில் கருப்புக்கட்டி விராகனிடை-1, ஆவின் நெய் படி மாகாணி கூடவிட்டுக்காய்ச்சி நெய்யைவடித்து சாதத்தில்விட்டு மூன்று நாள் சாப்பிடத் தீரும்.

ஆடாதோடை யிலையையும், தூதுளையிலையும் இடித்துப்பிட்டவித்து உழக்குச்சாறு பிழிந்து அதில் கோஷ்டம், திப்பிலி, சாமபிறுணி இவைகளை வெதுப்பி பொடித்துத்தூவி கொடுக்கத்தீரும்.

கருங்குங்கிலியத்தை கருப்புக்கட்டியுடன் ஓரளவாய்ப்பொடித்து அதில் கோழிமுட்டை வெள்ளைக்கருவும் நல்லெண்ணையும் ஓர் நிறையாய்விட்டுக் கம்பிப்பிசினபோல் மத்தித்து காலையில் ஆறுமணிக்கு முந்திப் போசனத்தினபேரில் மூன்றுநாள் கொள்ளத்தீரும்.

அத்திப்பட்டை, அதின்பிஞ்சு, தென்னம்பிஞ்சு, பருத்திப்பிஞ்சு அரசு, ஆவாரை, முடக்கொத்தான், ஆல்வரப்பூலாவிருசி இவைகளின் கொழுந்து வெளவேளாம்பட்டை, சுக்கு, மிளகு, திப்பிலிமூலம், சன்னலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, நன்னாரிவேர், தண்ணீர் விட்டான் கிழங்கு, நிலப்பனைக்கிழங்கு, அதிமதுரம் வகைக்கு விராகனிடை-5, வீதம்மைத்து அரைப்படி ஆவின்நெய்யிற் போட்டுக் காய்ச்சிவடித்து வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டிவீதஞ் சாப்பிட்டுவரத் தீரும்.

### வாயாலும் மூக்காலும் இரத்தம் விழுதலுக்கு

ஆடாதோடையிலைச் சாறும் தேனும் வகைக்குபடி காணிவீதம் கலந்து 3-நாள் சாப்பிடத் தீரும்.

வில்வவேரை யிளைத்தசீவனை ஒரு எலுமிச்சங்காய்ப் பிரமாணம் அரைத்து ஆவினமோரில் கலக்கி 3-நாள் கொடுக்கத் தீரும்.

கடுக்காயை விரைநீக்கி ஆடாதோடையிலைச சாற்றில் பதினாறு தடவை ரவியிலுலர்த்திப் பொடித்துத் தேனில மததித்து தான்றிக்காய் பிரமாணஞ் சாப்பிடுவரத் தீரும்.

### விக்கலுக்கு

ஒரு விளாம்பழச்சதையில் வறுத்த திப்பிலிப்பொடி அருகங்கரு வேர்ச சுட்டகரி வகைக்குகழஞ்சு-1, இந்துப்பு கழிஞ்சி காசு இவை களை பால் விட்டரைத்துத் தேனில மத்தித்துச் சாபபிடத் தீரும.

திப்பிலி, வெநதியம், நெற்பொரி, நெலலிப்பருப்பு சிற்றரத்தை இவைகளை ஓர் நிறையாய் பொடித்துச் சீனிகலந்து மததித்து தான றிக்காய்ப பிரமாணஞ் சாப்பிட்டுவரத் தீரும்.

அரைப்படி பருத்தி விரையை பாலிற் காற்பல வெல்லத்தைப போட்டுப் பாகுசெய்து திப்பிலி, ஏலம், அதிமதுரம், நெற்பொரி வகைக்குக் கழஞ்சு-1, பொடித்து தூவிக்கிண்டிச் சாப்பிட்டுவரத் தீரும தேஙகாய்பபால படி தேன்படி அரைக்கால ஒன்றாய்கலந்து அதில் ¼-விராகனிடை அபின் கலந்து கொடுக்கத் தீரும்.

தாமரை விரைப்பருப்பை வெந்நீரிலரைத்துக் கலக்கிக் கொடுக கத் தீரும்.

செருப்பைச் சுட்டசாம்பலும் மிளகைச் சுட்டசாமபலும் திபபி லிச சாமபலும ஓர நிறையாய்த் தேனில மத்திதது நாவில் தடவ நாவில சுரசுரப்பு விக்கல தீரும.

இந்துப்பும் திபபிலியும பொடித்து தேனில மத்திததுக கொடுக் கத் தீரும்.

சீந்திற் கொடியும நிலவேம்பு கியாழஞ்செய்து கொடுக்கத்தீரும.

கலங்கொம்பு, சடாமாஞ்சி, திரிகடுகு, சிறுதேக்கு, பூசணவிதது இவைகளைச சூரணிதது சாக்கரைக்கலந்து திரிகடிப்பிரமாணஞ சாப் பிடத் தீரும.

கொடிவேலிவேர், சண்பகப்பூ, சிறுநாகப்பூ, சுக்கு வளையலுப்பு இவைகளை ஓர் நிறையாய்க கியாழஞ் செய்துண்ணத் தீரும்.

கொடிவேலிவேர் பூண்டு, சேவகனபூண்டு ஓர் நிறையாய்க கியாழஞ்செய்து கொடுக்கத்தீரும திப்பிலியும நெற்பொரியும பொடித்துத தேனிலமத்தித்து கொடுக்கத்தீரும பெருங் காயபிராணி ஆவின்நெய மஞ்ஞசிலை மயிலிறகு இவைகளை ஒன்றாயக்கூட்டித் தீயிறபோட்டுப் புகைபோட சுரத்தினபேரிறகாணும விக்கலமாறும அறுகம்புலவோ இவைகளைப் பொடித்துத துணியிலூட்டித்திரித்து தீயிற கொளுத்தி ஆறறி நாசியிற புகைபிடிக்கத் தீரும ஆவினநெய முலைப்பால விளக்கெண்ணை இவைகளை ஓர்நிறையாய மத்தித்துப பஞ்சிலூட்டி நெருசிற்போட்டதீரும கேழ்வரகு முட்டை வெள்ளைக்கருவில துணியைநனைத்துத தொண்டைக குழிமேற்போட மாறும்.

சுத்திவிக்கலுக்கு

பாலைவேர்பபட்டை, ஏலம், விலாமிச்சமவேர், அதிமதுரம், லவங்கப்பட்டை, விலவவேர், சுக்கு, அரத்தை இவைகளை வகைக்குபலம் ¼ வீதம் சிதைத்து ஒருபடிநீரிறபோட்டுக காறபடியாய் வறறவைத்து மூன்றுவேளை கொடுக்கத்தீரும கிராமபு, சாதிக்காய், அதிமதுரம், மாதுளம்பழம், ஏலம், விலவவேர், விளாம்பழம், சீநதிறறணடு, கடுக்காய் இவைகளை ஓர் நிறையாயக் கியாழஞ்செய்து யதனவிட்டுவெங்காரம் பொரித்துப்போட்டு மூன்றுவேளை கொடுக்கத் தீரும செவியம், சுக்கு, விலாமிச்சி, ஏலம், அதிமதுரம, கொத்தமலலி, விலவவேர், மனுப்பாலைவேர் இவைகளை ஓர்நிறையாய்ச சிதைத்துப்போட்டுக்கியாழஞ்செய்து மூன்றுவேளை கொடுக்கததீரும.

வில்வவேர், நெற்பொரி, சருக்கரை திப்பிலி இவைகளை ஓர் நிறையாய் பொடித்து தேனில மத்தித்து நாள ஒன்றுக்கு மூன்று வேளை கொடுக்கததீரும நெலலிபபருப்பு, நெற்பொரி, சாக்கரை, திப்பிலி, மான்கொம்பு ஓர்நிறையாய் பொடித்துத தேனில மத்தித்து நாளொன்றுக்கு மூன்று வேளை கொடுக்கத் தீரும. ஏலம், லவங்கம், முத்தக்காசு, தாமரைவிரைபருப்பு, துளசி, சந்தனம், பசசைக்கர்ப்பூரம், இலநத விரை நெற்பொறி இவைகளை ஓர் நிறையாயபொடித்து அதறகு நிகா சருக்கரைகலநது திரிகடிபபிரமாணம தேனில மத்தித்துககொடுக்க தீரும ஏழுபுடம போட்ட சஞ்சாகல்நார சாதுதிரவேதி ஓர்நிறையாய் பொடித்து வாதம சிலேத்தும மீறினின்றால வெலலத்திலும பித்தம மீறிநின்றால ஆவின்நெய் அலலது இளநீரிற் கொடுக்கத் தீரும்.

வில்வவேர், சிறுமுட்டிவேர், சுக்கு இவைகளை வகைக்கு நாலுவிராகனிடை வீதம் தட்டி நாலுபடி தணணீரிற போட்டு அரைப்

படியாய் வறறவைததது கொஞசம் தேன்விட்டு நாள் ஒன்றுககு 3-வேளை கொளளத தீரும. திபபிலியும, அதிமதுரமும் ஓர நிறை யாய் பொடிததது தேனில் மததிதது தடவத தீரும. மாதுளம பழச சாறறில திப்பிலிபபொடி, சீனி, நெறபொரி, தேன இவை களைக கலநது உடகொளளத தீரும. மயிலிறகைச் சுட்ட கரி, அதி மதுரம, சீனி, திபபிலி ஓர நிறையாய்ப் பொடிதது தேனில் மததித் துக் கொடுககத தீரும. எலுமிச்சமபழசசாறறில மிளகைப பொடிக துபபோட்டுக கொடுககத தீரும. நெறபொரி, பாசிபபயிறு, விலவ வோ, முனனைவோ, ஏலம, நெலலிப்பருப்பு இவைகளை ஓர நிறை யாய் கியாழஞசெயது கொடுக்கத் தீரும்.

சததி நிறுதத

ஒரு எலுமிசசமபழச சாறறில் ½-விராகனிடை தேனையாவது கலநது 3-வேளை கொடுககத தீரும. ஒரு எலுமிசசம பழத்தை நாலாய்க கீறி அதில ஏலம, கிராமபு, அதிமதுரம, ஓமம, சீரகம, மல்லி, அரததை, அட்டுப்பு, தாளிசபபததிரி வகைககு விராகனிடை வீதம பொடிதத தூளைவைததது நூலாற கட்டி சுடுசோறறை யரை தது அதில அநதப பழததைப பொதிநது தீயிறசுட்டு ஆறறிக கவசம் நீககி ஒவவொனறுய்ச சாப்பிட்டுவரத தீரும். நாயுருவியிலை, பிரண் டைக கொழுநது வகைககு ஒரு கொட்டைபபாககுப் பிரமாணம் அரைதது இளவெநநீரிற் கரைதது 3-வேளை கொடுககத தீரும.

திரிகடுகு, விலவவேர், மல்லி இவைகளை ஓர் நிறையாய் சிதைதது படி தணணீரிற போட்டுக கியாழஞசெய்து 3-வேளை கொடுகக நிற் கும பருததிவிரைபபருப்பு, ஏலம், முன்னைவேர், நெற்பொறி, சாக கரை வகைககு விராகனிடை-5, பொடிததுத திரிகடித தேனிற கொள்ளத் தீரும்.

நாவரட்சிக்கு

கற்கடகசிஙகி, சிறுதேக்கு, திரிகடுகு, கடுக்காய், தானறிககாய், கோஷ்டம, சடாமாஞசில, இநதுப்பு இவைகளை வெதுபபிப பொடிக துத திரிகடிப பிரமாணந தேனிலாவது மூலைப்பாலிலாவது மூனறு வேளை கொடுக்கத் தீரும.

தாகத்திற்கு

வெட்டிவேர், அதிமதுரம், சீரகம, சுககு, மல்லி, விலாமிசசம வோ, சதகுபபை, கோஷ்டம இவைகளை ஓர் நிறையாயக கியாழம செய்துக கொளளத தீரும.

விலவககொழுநது, அதிமதுரம், வெட்டிவேர், கோஷ்டம், பாலை, கொத்தமலலி, பாசிப்பயறு இவைகளை ஓர் நிறையாயக் கியாழஞ செய்து கொடுககத தீரும.

கொத்தமல்லி, வெட்டிவேர், கோஷ்டம், அதிமதுரம், நெல்லிக்காய் சந்தனம், சீரகம், தாமரைக்கிழங்கு, முத்தக்காசு, அறுகு, விலாமிச்சம் வேர் இவைகளை ஓர் நிறையாய்க் கியாழஞ்செய்து கொள்ளத் தீரும்.

ஒன்றேகாற்படி ஆறறுமணலை தீயப்போல் வறுத்து ஒருபிடி அரசங்கொழுந்தைக் குறுக அரிந்து போட்டுக் கருகினதின் பேரில் ஓமம் 1-கழஞ்சு போட்டுப் பொரிந்ததின்பேரில் 4-படி ஜலம் விட்டுக் காய வைத்துக்கொண்டு கொடுத்துவர தாகருட்சை தீரும். இதற்கெல்லாம் பத்தியமில்லை. மேற்சொல்லிய தினுசுகளை பலமவிழுக்காடு போட்டுக்கொள்ளவும்.

அரோசியத்திற்கு.

பொரித்த சீரகம் பலம்-1, ஏலம் பலம்-½, இவைகளை கியாழஞ் செய்து சீனி கலந்து சாப்பிட அவசியந் தீரும்.

## வயிற்றுவலிரோகப் படலம் முற்றிற்று.

---

# சூ ர ண ப் ப ட ல ம்

அதாவது கற்பவகை வேர வகைகளால் சூரணஞ் செய்து சாக்கரை கலந்து சாப்பிடுவதால் சூரணப் படலமென பெயர் பெற்றது.

விருத்தம்

கூறுஞ் சூரணங் குறிக்கு முறைமைகேள
தேறு மாமுனி தெளிய வெடுத்துமே
ஆறும் பண்டிதர் கரிய வயித்தியம
கோறுஞ் சாரசங் கிரகமீ தாகுமே.

வேறு

சொல்லுவேன் சூரணத்தின் வயதுமார்க்கஞ்
சுருக்கமாய் மானிடர்க ளறியவேண்டி
புல்லுவேன வயதுதான் திங்களாறில்
பூட்டினா லோகத்து மாந்தர்க்காக
வெல்லுமே வினிதுவறிந்து பிணியாளர்க்கு
விரும்பியே வவிழ்தமது கொடுப்பாராகில்
அல்லவே நோயேது கோளாறேது
அப்பனே யிதுவறிந்து செய்துபாரே.

இந்தக் கிரந்தத்தில் கூறியபடி 6-தினங்களுக்குமேல் சூரணங்களைப் பிரயோகிக்கலாகாது அதனால் பிணி தீராது 6-மாதத்திற்குட்படவே பிரயோகிக்கவேண்டும். பெரும்பாலும் சித்தர்கள் கூறிய வண்ணம் பிசகின்றி நடக்கும் வயித்தியருக்கும் நோயாளிக்கும் இப்பாடலே நற்சாட்சியாகக் கூறப்பட்டது இவ்விதிகளை மீறுவதால் பிணியாளர்க்கு நோய்போகாமல் பண்டிதர் பேரில் குற்றம் சாற்றலாயிற்று ஆகையால் இச்செய்கையை பண்டிதன் பெரும்பாலும் அறியவேண்டும் இங்ஙனம் கிரந்தகர்த்தா தாத்பரியம் சொல்லலாயிற்று.

ஏலம், அதிமதுரம், தாமரைக்கிழங்கு, நிலவேம்பு, முத்தக்காசு, வில்வவேர், கோஷ்டம், சந்தனம், வாய்விளங்கம், சடாமாஞ்சில், தண்ணீர்விட்டான் கிழங்கு, அசுவகெந்திக் கிழங்கு, நிலப்பனைக் கிழங்கு, நன்னாரிவேர், முந்திரிப்பழம், லவங்கம், முடக்கொத்தான்வேர், நெருஞ்சிவேர், திரிகடுகு, தாளிசப்பத்திரி, நெய்ச்சிட்டிக்கிழங்கு, கருஞ்சீரகம், நற்சீரகம், சாதிக்காய், நெல்லிப்பருப்பு, கசகசாலம், காட்டுச் சீரகம், தக்கோலம் வகைக்குப் பலம்-½, குங்குமப்பூ, கோரோசனை, கற்பூரம் வகைக்குப் பலம்-½, இவைகளைப் பொடித்து அதற்கு நிகர் சீனி கலந்து வேளை யொன்றுக்குத் திரிகடிப் பிரமாணஞ் சாப்பிடுவரச் சத்தி, அரோசியம், நெஞ்செரிவு, கைகால் வயிறு எரிவு, தேகபடபடப்பு, அஸ்திவெட்டை, வாதபித்த பாண்டுந் தீரும்.

ஏலம், திரிகடுகு, அதிமதுரம், சந்தனம், தக்கோலம், சிறுநாகப்பூ, கொத்தமல்லி, கோஷ்டம், அதிவிடையம், முத்தக்காசு, சடாமாஞ்சில், சிறுதேக்கு, மஞ்சள், வெட்டிவேர், விலாமிச்சுவேர், தாமரை வளையம், கூகைநீர், செங்கழுநீர்க் கிழங்கு, நெல்லிவற்றல், பேரீச்சம்பழம், முந்திரிப்பழம், மரமஞ்சள், தாளிசபத்திரி, சீந்திற் சர்க்கரை, கருங்காலிப்பட்டை, வேப்பம்பட்டை, சீரகம், அசுவகெந்தி, கற்பூரம், சாரணைவேர், இந்துப்பு, நிலப்பனைக் கிழங்கு இவைகளை ஓர் நிறையாய்ச் சூரணித்து நெய் தேன் சர்க்கரையிற் கொள்ள பிரமேகம், மூத்திரக்கிருச்சனம், பாண்டு, சோகை, காமாலை, பழஞ்சுரம், பித்தம், இருமல், பீனிசந் தீரும்.

ஏலம், லவங்கம், மஞ்சள், அதிமதுரம், திரிகடுகு, திப்பிலிமூலம், செவ்வியம், சித்திரத்தை, சந்தனத்தூள், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, தகரம், வாலமிளகு, முந்திரிப்பழம், பேரீச்சம்பழம், தாமரைக்கிழங்கு, நெல்லிவற்றல், மல்லி, நெற்பொரி, பருத்திவிரைப் பருப்பு, மாதுளைவேர்ப்பட்டை, வில்வவேர், சந்தனம், நிலப்பனைக் கிழங்கு, நன்னாரிவேர், முத்தக்காசு, சீந்திச்சர்க்கரை இவைகளை ஓர்

நிறையா யிடித்துச் சூரணித்து அந்தறகுநிகா சீனிகூட்டி வேளை ஒன்றுகககு திரிகடிபபிரமாணம் மாதுளமபழசசாறறில கொளள நீரெரிவு, இரததமவிழுதல, தாபசோபம, சததிபித்தம, மலேரோய, அஸ்திசுரம, வாயு, விஷசுரம, ஈளை, இருமல, உபபிசம, நெஞசெறிவு தீரும.

லவஙகம பலம-1, கூகைநீர பலம-16, சுககு பலம-32, வெலலம பலம-94, இவைகளை யிடிதது சூரணஞசெய்து அந்தறகு நிகா சீனி கலநது வேளை ஒனறுககு திரிகடிபபிரமாணமகொளள பிததம, வாதம, வாயு, கிராநதிரணம, அகநிகிராநதி, மேகஊறல, சொறி, சிரஙகு, சில விஷகடிகள, பெருமபாடு, எலுமபுருக்கி தீரும. ஏலம, நறசீரகம, லவஙகம, மரமஞசள, விலாமிசசமவேர, கார்கோலரிசி, கடுககாய் முததக்காசு, நெறபொறி, சிறுநாகபபூ, பெருங்காயம, ஓர் நிறையாயச சூரணிதது திரிகடிபபிரமாணம தேன நெய்யிறகொளள அரோசியம வாநதி, பொருமல தீரும.

ஏலம, திப்பிலி, கிராமபு, சடாமாஞசில, முதசக்காசு, பேரீதது, வெட்டிவேர், கொததமலலி, சநதனம, லவங பபட்டை, அதிமதுரம, தாமரைகிழஙகு, முநதிரிபபழம, செஙகழுநீரககிழஙகு, தவாசசெரி, சாதிககாய, நெரிஞசிவேர், மூககுருணடை, கோஷ்டம, அமுககுரு கிழங்கு, நிலப்பனைககிழஙகு, இலவமபிசின, ஓர்நிறையாய் சூரணித்து சவன சீனிகலநது திரிகடிநெய் தேனிறகொளள, மேகம, வாநதி, அரோசியம, தாதுபுஷ்டி, வியர்வை, பிததம, சோகை, மலககட்டுத தீரும.

## தாளிசசப்பததிரிச சூரணம்

தாளிச்சபபத்திரிக கழஞசு-40, திரிகடுகு, திரிபலை, சீரகம கருஞசீரகம, ஏலம், சாதிககாய், சாதிபபததிரி, கிராமபு, சிறுதேககு, அதிமதுரம், சிறுநாகபபூ, லவஙகமபட்டை, லவஙகபபததிரி, செவியம, வாய்விளஙகம, சிததரத்தை, வால்மிளகு, ஓமம, குறுசாணி, கோஷ்டம, கோரோசனை, தேசாவரம, அககிராகாரம, கொததமலலி, முநதிரிபபழம, பேரீசசமபழம, கூகைநீர, நிலப்பனைககிழஙகு, அமுககுறுககிழஙகு, முததககாசு, விலாமிசசுவேர, வெடடிவேர, தூதுவேளை, கணடஙகததிரிவேர், நெய்தறகிழஙகு, நெறபொரி வகைககு கழஞசு-1, இவைகளை ரவியிலுலர்தது யிடிதது வடிகட்டி சீனி கழஞசு-40, கூட்டி வேளை ஒனறுக்குத திரிகடிபபிரமாணம தேன இஞசிசசாறு, மாதளமபழச்சாறறிற கொள்ள காமாலை,காசம, வாநதி, அரோசியம, நெஞசெரிவு, தேகயெரிவு, குனமம, பிததவெட்டை, தாதுநஷ்டம, புகைசசல், கண்மயக்கம, புண சிறஙகு, கரப்பான, கெநததநாலு, சூலைகுட்டம் வாயு தீரும.

தாளிசசப்பத்திரி பலம-10, திரிகடுகு, திரிபலாதி, கோஷ்டம, அகருகாரம, அததி, திபபிலி, சீரகம, கொததமலலி, வாயவிளஙகம, கிராமபு, ஏலம், சாதிக்காய், சாதிப்பததிரி, சடாமாஞசில், சோம்பு

வால்மிளகு, லவங்கப்பட்டை வகைக்குப்பலம்-1, இடித்துச் சூரணித்து அதற்கு சமமாக சர்க்கரை கூட்டிக்கொள்ள க்ஷயம், காசம், ஈளை முதலானது அஸ்திச்சுரம், அஸ்திவெட்டை, தாகம், நெஞ்சுப்புண், பித்தவெட்டை, பித்தபாண்டு கிறுணி, அரோசியம், பெருமல, விக்கல், கைகாலெரிவு, கந்தல் தீரும்.

தாளிசபத்திரி, திரிகடுகு, கிராம்பு, ஏலம், லவங்கப்பட்டை, அதிமதுரம், கோஷ்டம், சீரகம், முந்திரிப்பழம், பேரீச்சம்பழம், சிறுதேக்கு ஓர்நிறையாய் சூரணித்து அதற்கு நிகர் சீனிகலந்து திரிகடிப்பிரமாணஞ் சாப்பிட்டுவர பித்தம், தாகம், அரோசியந்தீரும்.

### மேகராசாங்கச் சூரணம்

வெட்டிவேர், சீரகம், லவங்கப்பட்டை, சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, கோஷ்டம் நெல்லிவற்றல், நிலப்பனைக்கிழங்கு, அரேணுகம், முந்திரிப்பழம், பேரீச்சம்பழம், குங்குமப்பூ, கோரோசனை, சிறுநாகப்பூ, தாமரைவளையம், அதிமதுரம், பச்சைக்கற்பூரம், சந்தனம், திரிகடுகு, அதிமதுரம், நெற்பொரி, அமுக்குறாக்கிழங்கு, கற்கடகசிங்கி, தக்கோலம், குங்குமப்பட்டை வகைக்குப்பலம்-½, இடித்து சூரணித்து அதற்கு நிகர் சீனிகலந்து வேளை ஒன்றுக்குத் திரிகடிப்பிரமாணம் ஆவின்வெண்ணெயில் மண்டலங்கொள்ள கைகாலெரிவு எலும்புருக்கம், நீர்த்தாரைவழி மோர்போலிறங்குகல் பிரமியம், நீர்ச்சிறுப்பு, கல்லடைப்பு, நீர்த்தாரை, எரிவு, தேகவாஞ்சி, உட்சுரம், க்ஷயம் தீரும்.

### கார்த்தைச் சூரணம்

திரிகடுகு, திரிபலை, வசம்பு, இந்துப்பு, வாலுளுவையரிசி, கோஷ்டம், கருஞ்சீரகம், ஓமம், ஏலம், மரமஞ்சள், திப்பிலிமூலம், சாதிக்காய், சண்பகப்பூ, தாளிசபத்திரி, லவங்கப்பட்டை, அதிமதுரம், சாதிபத்திரி, கார்கோலரிசி, செவியம், வாயவிளங்கம், ஆனைத்திப்பிலி ஓர் நிறையாய் வெதுப்பிச் சூரணித்து அதற்குநிகர் கார்த்தைச் சூரணஞ்செய்து வேளைக்குத் திரிகடிப்பிரமாணம், ஆவின்நெய்யிலுமத்தித்து ரசபற்பம்வைத்துண்ண கிராந்திசூலை, அரையாப்பு, பவுத்திரம் மேகவூறல், பற்று, வெள்ளைபடுதல், சொரிகரப்பான், வெடிகரப்பான், கணைப்புற்று, யோனிப்புற்று, தொடைவாழை பிளவை எலிகடி தீரும்.

### திராட்சி சூரணம்

முந்திரிப்பழம், திப்பிலிமூலம், திரிகடுகு, செங்கழுநீர்க்கிழங்கு வெட்டிவேர், சந்தனம், விலாமிச்சு, தக்கோலம், அதிமதுரம், முத்தக்காசு, வில்வப்பு, ஏலம், மலலி, திரிபலை, நெற்பொரி, பேரீச்சம்பழம், பச்சைக்கற்பூரம், கற்கண்டு, இலவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, கூகைநீர், இவைகளை ஓர்நிறையாயிடித்து சூரணஞ்செய்து வேளை ஒன்றுக்குத் திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டுவர பித்தம், கைகால் வயிறெரிவு, இரத்தபித்தம், சத்தி, கிறுகிறுப்பு, பித்தபாண்டு, சுரந்தீரும்.

### கூழ்பாண்டச் சூரணம்

ஒருபெரும பூசனிககாயைககீறி குடலைமேறறோல் நீககி அரிநது பிட்டவியலாயவிததுப பிழிநது சட்டியிலிட்டு ஆவினநெய் தெளிதது சிவக்க வறுததிடிதத சூரணததுடன கடுககாய், தானறிககாய, திரிகடுகு, அதிமதுரம, ஏலம, லவஙகம, சணபகபபூ, கலமதம, சீரகம, வகைககுக கழஞசு-1 வெதுப்பிப பொடிதத சூரணததையும ஒனறாயககலநது அதறகுநிகர் சீனிகலநது வேளை ஒனறுககுத திரிகடிப பிரமாணஙகொள்ள மேகம, பவுததிரம, மூலம, மூததிரபபாவை, கிருச்சணம, பெருமபாடு, வெளளைககடுபபு, எரிபபு, மேகககாஙகை, கிலலடைபபு, நீரடைபபுத் தீரும.

### இஙகிலாநதிச் சூரணம்

பெருஙகாயம, வசமபு, சுட்டககரி, மாதுளமவேர், ஓமம மலலி, கோஷ்டம, பொனமுசுட்டைவேர், செஙகழுநீர்ககிழஙகு, கொட்டாஙகாநதை, சமூலம, ஏலம, கொடிவேலிவேர், பஞசலவணம், செவியம, ஆனைததிப்பிலி திரிகடுகு, திபபிலிமூலம, சீரகம, வாய்விளஙகம, குறுசாணி, ஓமம, கருவேபபிலை ஓாநிறையாய்ச சூரணிதது திரிகடிப் பிரமாணம் வெநநீரிறகொளள அககினிமாநதம, வாய்நீரூறல, வாநதி, வெள்ளோககாளம, விககல தீரும.

### அக்கினிச் சூரணம்

கொடுவேலிவேர், திரிகடுகு, ஓமம, சிறுதேககு, ஆனைததிப்பிலி, கோஷ்டம், இநதுபபு வகைககு பலம-1, காயம, வசமபு, சுட்டக்கரி வகைசகுப் பலம-½, கடுகு பலம-½, ஓாநிறையாயச சூரணிதது அதறகுநிகா சீனிகலநது திரிகடிப்பிரமாணம வெநநீாகொள்ள அஜீரணம மநதம, பொருமல், கிராணி தீரும பத்தியமிலலை.

### மேடச் சூரணம

வெள்ளாட்டு உதவலை நீரைபபிசைநது வறுததிடிதது வடிகட்டின சூரணம பலம-2, குஙகுமப்பூ, கோரோசனை, திபபிலிமூலம, ஓமம, அரததை, சீரகம, கருஞ்சீரகம, கிராமபு, சுததிசெய்த மனோசிலை, நெறபொரி, கோஷ்டம வகைககு கழஞசு-1, வெதுபபிப் பொடிதது இருவகைச சூரணததையும ஒனறாயகலநது திரிகடிப்பிரமாணம ஆவினநெய்யில மண்டலஙகொள்ள சிலேததமநோய் 96-ம தீரும.

### சீரகச சூரணம்

நாலுபலம சீரகததை இஞ்சிசசாறறில ஒருநாள ஊறவைதது உலர்ததி அபபால மொசுமுசுககைசசாற்றில ஒருநாள ஊறவைதது உலர்ததிககொணடு ஏலம, திரிகடுகு, கோஷ்டம, நெலலிவறறல், நெறபொரி, வில்வபபழததோடு வகைககு விராகனிடை-2, இவையெல்லாம் பொடிதது அதறகுநிகர் சீனிகலநது வேளை ஒனறுககு திரி

கடிப் பிரமாணஞ் சாப்பிட்டுவர பித்தம, அரோசியம், பித்தவாயு, இருகிருப்பு, உஷ்ணம, வாய்நாற்றம, வஞுவஞுப்புத் தீரும்.

தாளிசப்பத்திரி பலம்-1, திரிகடுகு, திரிபலாதி, ஏலம், கிராம்பு, சாதிப்பத்திரி வகைக்குப்பலம-½, சூரணித்து சீனிபலம-3, கூட்டித் திரிகடிபிரமாணஞ் சாப்பிட்டுவர மூலக்கடுப்பு, இரத்தக்கடுப்பு, வெள்ளைவெட்டை, நீர்க்கட்டு, கல்லடைப்புத் தீரும.

நிலவாகச சூரணம்

நிலவாகை, சமூலம், சுக்கு, மிளகு, வாய்விளங்கம் ஓமம் வகைக்குப் பலம-1, ரவியுலர்த்தியிடித்து சாக்கரை சமன கலந்து திரிகடிபிரமாணம் சாப்பிட்டுவர வாயு, பித்தம, உஷ்ணம், பொருமல், கபம, விக்கல, வாந்தி தீரும.

நிலவாகை சமூலம்-10, மிளகு, கடுக்காய், தான்றிக்காய், சீரகம, வாலுளுவையரிசி, சிறுநாகப்பூ, ஏலம, லவுங்கப்பட்டை, கடுகுரோகணி, சிறுதேக்கு, தாளிசபத்திரி, சாதிக்காய், கிராம்பு, திப்பிலி, செவியம, இந்துப்பு, கூகைநீர், சுக்கு பலம-½, இடித்துச சூரணஞ்செய்து அதற்கு பாதி சீனிகலந்து திரிகடிநெய் தேனிற்கொள்ள மேகசசொரி, இருமல், பித்தம, வாய்நீரூறல, சில விஷம வாயு வாயுத்திரட்சித் தீரும்.

இராஜ அமிர்தாதிச் சூரணம்

ஏலம், லவுங்கம, அதிமதுரம, நற்சீரகம, கருஞ்சீரகம, மகரப்பூ, குருசாணி, ஓமம, வால்மிளகு, திப்பிலி, வாய்விளங்கம, குங்குமப்பூ, சடாமாஞ்சில, மஞ்சிட்டி, கடுகுரோகணி, திப்பிலிமூலம், சாதிக்காய, கிராம்பு, வசவச்சி, சித்திரத்தை, சித்திரைமூலம், நிலவாகை இவைகளை ஓர்நிறையாய சூரணஞ்செய்து அதற்குநிகர் சீனிகூட்டி திரிகடிபிரமாணஞ் சாப்பிட்டுவர கைகாலுளைச்சல், உள்ளுநுக்கி, எலும்புருக்கி, பிரமியம, காப்பானமூலம, வாதம, பித்தம, உஷ்ணவாயு முதலான சகல வாயுந் தீர்ந்து தீபன முண்டாகும தேகங் குளிரும.

பஞ்சலவணச சூரணம்

பஞ்சலவணம, எவாச்சாரம, சத்திசாரம, அசமதாகம், மரமஞ்சள், திப்பிலி, திப்பிலிமூலம, மஞ்சள், முள்ளிவேர், கண்டங்கத்திரிவேர், கோஷ்டம, முத்தக்காசு, சிறுதேக்கு, கருஞ்சீரகம, நற்சீரகம், கடுகு, திரிபலை, அதித்திப்பிலி, வாய்விளங்கம, பெருங்காயம கொடிவேலிவேர், அதிவிடயம, செவியம, புங்கம, பாலைவேர், பெருமரத்துப்பட்டை, வெட்பாலையரிசி இவைகளை நிர்நிறையா யிடித்துத் தூள்செய்து அதறகுப்பாதி சீனிகலந்து நெய்யிறகொள்ள அஜீரணம் பேதி, கிருணி, வாயூரல், வாந்திசூலை, சீதசுரம், பாண்டு, காமாலை, சுவாசகாசம், க்ஷயம், திமிர், வாயுமூலம தீரும.

### சாதகுவாத சூரணம்

சித்திரமூலம், திப்பிலி, ஓமம், மிளகு, மலலி, நற்சீரகம், பொன்மூசட்டைவேர், பெருஙகாயம, சடாமாஞ்சில, திபபிலிமூலம, இநதுப்பு ஓர நிறையாயிடிததது சூரணிததுத திரிகடிதநேதன சீனிற்கொளள அககினிமநதம அதிசாரகுணமம பிததந தீரும.

### அசுவகெநதிச சூரணம்

ஆவின்பாலிலவிததது சுததிசெய்த அமுககுறாவேர் பலம்-3, சுக்கு ஏலம் கூகைநீர் வகைககு பலம-1½, கிராமபு சிறுநாகபபூ பலம-2, திபபிலி பலம-8, மிளகு பலம-4, இவைகளை யிடிததது சூரணஞசெய்து சீனிபலம-4, கூட்டி தேன இஞ்சிச சாறறிமகொளள மநதவாயு, வயிறறுவலி, அரோசியம, வாதபிததம, உபபிசம, நெஞசெரிவு, வாநதி, க்ஷயம, ஈளை, இருமல தீரும.

லவுங்கம் பலம்-1, சிறுநாகப்பூ பலம-2, ஏலம் பலம்-4, மிளகு பலம்-8, திபபிலி பலம-19, சுககு பலம-32, சுததிசெய்த அசுவகெநதி பலம-64, இடிதது சூரணிதது அதற்கு நிகர் சர்க்கரை கலநது வேளை ஒன்றுககுத திரிகடிபிரமாணம ஆவினபால் நெய்யிறகொள்ள மேகம் அஸ்திசுரம் அஸ்திவெட்டை சுவாசம ஈளை பாணடு மேகஊரல் தீரும.

சுததிசெய்த அமுககுறாசூரணம விராகனிடை-64 ஓமததை பொடிதது உமிபோகக பொடிதது வடிகட்டின சூரணம விராகனிடை-32 கிராமபு விராகனிடை-1, சிறுநாகபபூ விராகனிடை 2, ஏலம் விராகனிடை-4, மிளகு விராகனிடை-8, இவைகளை பொடிதது வடிகட்டின சூரணததையும ஒனறாய்ககலநது வேளை ஒனறுககு திரிகடிபிரமாணஞ சாபபிட்டுவர பிரமேகம வெட்டை மூததிரககிருச்சனம தீரும இதுகளெலலாம இசசாபததியம்.

### கரிசாலை சூரணம

கடுக்காய், மிளகு, கோஷ்டம, ஓமம, மாஞசள, கடுக்காய்ப்பூ, கருஞ்சீரகம, சடாமாஞசில், திப்பிலிமூலம, கிராமபு, தாளிசபபததிரி, திப்பிலி, ஏலம, சுக்கு, நெலலிபபருப்பு, சீரகம, அதிமதுரம், மலலி, வாய்விளஙகம, மூருக்குருண்டிவேர் ஓர் நிறையாய் ரவியிலுலர்ததி சூரணிதது அதறகு நிகர் பொறறலைக்கரிப்பான சூரணஞ சேர்த்துத் திரிலோக செநதூரம் மண்டூர செநதூரமவைதது வேளை ஒன்றுக்குத் திரிகடிப் பிரமாணஞ சாப்பிட்டுவர பாணடு காமாலை சோகை தீரும்.

### வல்லாரைச சூரணம்

வலலாரையைப் பாலிததுலர்த்தி இடிதது வடிகொண்ட சூரணம பலம-10, கிராமபு, ஏலம, சாதிக்காய், சாதிபத்திரி, மாசக்காய், தாளிசப்பததிரி, திரிபலாதி வகைககு பலம்-1, வெதுப்பிப் பொடி

த்து ஒன்றாய்க்கலந்து சருக்கரை சமன் கலந்து திரிகடிபபிரமாணம் நெய்யிற்கொள்ள மேக காங்கை மூலைச்சூடு உடம்பெரிவு தீர்ந்து தேகங் குளிரும்.

### சந்தனச் சூரணம்

சந்தனம், கோஷ்டம், நன்னாரிவேர், கடுகுரோகணி, கர்ப்பூரம், சீந்திச்சர்க்கரை, முத்தக்காசு, மஞ்சள், இலுப்பைப்பூ, முந்திரிப்பழம், அதிமதுரம், பூலாங்கிழங்கு, ஏலம் தாமரைக்கிழங்கு, நெய்தற்கிழங்கு மரமஞ்சள், விலாமிச்சுவேர், நெல்விவறறல் இவைகளை ஓர் நிறையாய் சூரணித்து அதற்கு நிகர் சர்க்கரை கலந்து திரிகடிபபிரமாணம் வெண்ணெயிலாவது ஆவின்பாலிலாவது கொள்ள சீதம் ரத்தம் விழுதல் வாயிலிரத்தங் கக்கல் முதலான மேகம் இருபத்தொன்றுந்தீரும்.

### கர்ப்பூரச் சூரணம்

கர்ப்பூரம், கோஷ்டம், சாதிபத்திரி, கலநார், சாதிக்காய், கிராம்பு, ஜடாமாஞ்சில், ஏலம், குங்குமப்பூ, சந்தனம், நற்சீரகம், மல்லி, அமுக்குராக்கிழங்கு, சீந்திச்சர்க்கரை, முந்திரிகை, பேரீந்து, சலாசத்து, நெருஞ்சிவேர், வெள்ளரிவிரை, நீர்முள்ளிவிரை, இலவம்பிசின், முத்தக்காசு, விலாமிச்சுவேர், இந்துப்பு, வெங்காரம், ஆவாரையரிசி, கஸ்தூரி மஞ்சள், சிறுநாகப்பூ, நிலப்பனைக்கிழங்கு, சுஞ்சாங்கோரை, செஞ்சந்தனம் தக்கோலம், அதிமதுரம், வால்மிளகு இவைகளை ஓர்நிறையாய்ச் சூரணித்து அதற்குநிகர்சீனிகலந்து வேளைஒன்றுக்கு திரிகடிப்பிரமாணந் தேனிலாவது நெய்யிலாவது கொள்ள நீர்க்கடுப்பு எரிவு நீரிழிவு மேக காங்கை நீரடைப்பு பாண்டு காமாலை கண்காலெரிவு சுரமதாகந்தீரும்.

### அமிர்தசஞ்சீவிச் சூரணம்

சீந்திச்சர்க்கரை பலம்-1, முந்திரிப்பழம், தக்கோலம், கோஷ்டம், அதிமதுரம், திரிகடுகு, நெல்விவறறல், பூஞ்சாந்துப்பட்டை, அமுக்கராக்கிழங்கு, ஏலம், பூனைக்காலிவிதை, சூடன், சீரகம், குங்குமப்பட்டை, சாதிக்காய், அசோகம், சிறுநாகப்பூ, தாளிசபத்திரி இவைகளை ஓர்நிறையாய் இடித்து வடிகட்டின சூரணம் பலம்-1, நீர்வள்ளிக்கிழங்கு விராகனிடை-5, நிலப்பனைக்கிழங்கு விராகனிடை-5, விலாமிச்சுவேர், நெருஞ்சிவித்து, வெட்டிவேர், தாமரைக்கிழங்கு, அல்லிக்கிழங்கு வகைக்கு விராகனிடை-2, இவைகளை யிடித்து வடிகொண்ட சூரணத்தையும் ஒன்றாய்க் கலந்து திரிகடிப்பிரமாணம் ஆவினெய்யிற் கொள்ள நீர்க்கடுப்பு எரிப்பு அடைப்பு மூத்திரப்பாலை கைகால் காந்தல் எலும்புருக்கி பெரும்பாடுதீரும். இதுகளெல்லா மிச்சாபத்தியம்.

சீந்திசர்க்கரை பலம்-1, சாதிக்காய், சாதிபத்திரி, வாலமிளகு, ஏலம், கிராம்பு, கசகசா, தாளிசப்பத்திரி, மாசிக்காய் இவைகளை ஓர் நிறையாயிடித்து வடிகொண்ட சூரணம் பலம்-1, சீனி பலம்-6, ஒன்றாய்க் கலந்து திரிகடிப்பிரமாணத்தில் வாலோச் செந்தூரம் வைத்து நெய்யிற் கொள்ள மேகநீர் பிரமேகம் பிரமியம் அஸ்திசுரம் வெட்டைச் சூடு மூலம் பித்தம் கைகாலெரிவு மேகவூறல் தீரும்.

## கொடிவேலி சூரணம்

கொடிவேலிவேர், புங்கம்வேர், ஆயிலிப்பட்டை இவைகளின் சூரணம் வகைக்கு பலம்-1, கடுக்காய், சுக்கு, திப்பிலி, கடுகு, கருஞ்சீரகம் வகைக்கு பலம்-½, இவைகளை வெதுப்பி சூரணித்து ஒன்றாய்க் கலந்து வேளை ஒன்றுக்குத் திரிகடிப்பிரமாணம் மண்டலங்கொள்ள வாதவாயு பட்சவாதம் தீரும்.

## மதுராதி சூரணம்

அதிமதுரம், கோஷ்டம், அக்கிராகாரம், விலாமிச்சுவேர், தக்கோலம், ஏலம், சிறுநாகப்பூ, மல்லி, கிரும்பு, சிறுதேக்கு, மிளகு, திரிபலை, கூகைநீர், முத்தக்காசு, திப்பிலி, லவங்கம், லவங்கப்பத்திரி, நன்னாரிவேர், பருத்திவிரை பருப்பு, நெற்பொரி, நற்சீரகம் வகைக்கு விராகனிடை-2, வெதுப்பி பொடித்து தாளிசப்பத்திரி, சூரணம் விராகனிடை-4, சீனி பலம்-4, கூட்டி திரிகடிப்பிரமாணஞ் சாப்பிட்டு வர பித்த அரோசியம் நெஞ்செரிவு கிறுகிறுப்பு வாந்தி தீரும்.

## வச்சிரவல்லி சூரணம்

திரிகடுகு, திரிபலை, கல்லுப்பு, ஏலம், லவங்கம், சிற்றரத்தை, திப்பிலி, மூலம், கருஞ்சீரகம், நற்சீரகம், பறங்கிப்பட்டை, அக்கிராகாரம், இந்துப்பு, கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி, அமுக்குறாக்கிழங்கு வகைக்கு கழஞ்சு-4, கடுகுரோகணி, வெங்காரம், ஓமம் வகைக்கு கழஞ்சு-2, நவாச்சாரம், கலம்தம் வகைக்கு கழஞ்சு-1, இவைகளை யிடித்து சூரணித்து பாதியும் சீனி பாதியுங் கலந்து திரிகடிப் பிரமாணம் தேன், நெய், பாலிற் கொள்ள கபாலவாயு குன்மம் காசம் கபம் பித்தம் ஊஷ்ணம் வெட்டை அபானவாயுதீரும்.

**மகா ஏலாதி சூரணம் முற்றிற்று.**

---

மல்லி, குருசாணி, ஓமம வகைககுக கழஞசு-3, இவைகளை ஆவின பாலா லாட்டிபபோடடு காசசிவடிததது 2-பலம கறகணடை பொடித்துத தூவி அபபிரக செந்தூரம கலநது காணடிவீதஙகொள்ள மேக பிரமியம ஊஷ்ணம எரிபபு காநதல நீரகருததது எரிவு அஸ்திவெட்டை அஸ்திகாஙகை எலுமபுருககி காமாலை கிராணிபிததந தீரும.

பெரும பூசனிககாய்சசாறு படி-4, வெளளரிககாய, பொறறலைக் கரிபபான, இளநீர், நீரவளளிககிழஙகு, சீநதி, சிதேவியார், செஙகழுநீர், தாமரைககிழஙகு, தாழைவிழுது, முடககொததான இவைகளின சாறு வகைககுபபடி-2, ஆவினபால்நெயவகைக்கு படி-9, ஏலம், லவஙகம், கோஷ்டம், அதிமதுரம், கச்சோலம், பசசை சிறுநாகப்பூ செவவளளிககொடி, ஆனைததிபபிலி, சாதிககாய், முநதிரிபபழம், பேரீசசம பழம், இநதுபபு, சணபகபபூ, நறுமபிசின, அகில, சநதனம, செஞசந்தனம், இநதுபபு, கிராமம, மஞசிட்டி, வள்ளிககிழஙகு, நிலபபனைக் கிழஙகு, செஙநாயுருவிவேர், கரிபபாலைவேர், சததிசசாரணைவேர், செஙகழுநீரபூ, முததககாசு, நனனாரிவேர், கோஷ்டம், விலாமிசசுவேர், வெட்டிவேர், பொனனாங்காணிவேர், ஓரிலைத தாமரைவேர் வகைக்கு பலம்-$\frac{3}{4}$, இவைகளை ஆவினபாலி லரைததுபபோடடுக காயசசிவடித்து சீனிகறகண்டு வகைககு பலம்-?, புனுகு விராகனிடை-1, சேர்த்து வேளை ஒனறுககு காணடிவீதஞ சாபபிட பிததம மேகம அஸ்திசுரம வெட்டை உடமபெரிதல கணபுகைசசல தாது நஷ்டம தீரும.

பெரும பூசனிககாயசசாறு, நீர்வளளிககிழஙகுசசாறு, வகைககு படி-8, கரிபபானசாறு, பொறகையான சாறு, ஆவினபால, நெய் வகைககுபடி-2, லவஙகம், ஏலம், இநதுப்பு, யிளாவரிசி, அசமதாகம், சாதிககாய, சீரகம், கருஞசீரகம், சதகுபபை, கூகைநீர், முநதிருப பழம், பேரீச்சமபழம், கோஷ்டம், அதிமதுரம், சாதிபததிரி வகைககுககழஞசு-1, ஆவினபாலா லரைததுபபோட்டு காசசிவடிததது அதில் 10-கதலிபபழமும $\frac{1}{4}$-படி சீனியுமபோட்டு கடைநதுகொண்டு வேளை ஒனறுககு காணடிவீதஞ் சாபபிடுவர உளைமாநதை சுரமாநதை ஆறுவகை கிருசசனம மூததிரபாளை இரத்தகாசம பிததகாசந தீரும்.

பெரும்பூசனி நெய்

பெரும பூசனிககாய்சசாறு படி-8, வெள்ளரிக்காய்ச் சாறு படி-2, ஆவின நெயபடி-1, இளநீர் படி-2, ஒனறுய்க்கலநது அதில் ஏலம், கநதகம், லவஙகம், இலுபபைபபூ, கூகைநீர், வெருகஙகிழஙகு, முநதிரிபபழம், பேரீசசமபழம், கோஷ்டம், சிறுநாகபபூ, முததககாசு, செங்கழுநீரககிழஙகு, திபபிலி, காரகோலரிசி, அதிமதுரம், மிளகு வகைககு கழஞசு-3, அரைததுபபோடடு காயசசி வடிதது தேன படி-சர்க்கரைபபடி-$\frac{1}{4}$, கலநதுகொணடு வேளை ஒனறுககு ஒரு காண வீதஞ சாபபிடுவாப பிரமேகம், கிருசசனம், தேக எரிவு, வாட் தீரும பததியங கைப்பு தளளவும்.

### ஆவாரை நெய்

ஆவாரைவேர்ப்பட்டை தென்னங்குருமபை வகைக்குப்பலம்-20 நாவற்பட்டை, அத்திப்பட்டை, நீர்ப்பூலாவேர் வகைக்கு பலம்-10, இவைகளையிடித்து இருபதுபடி தண்ணீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில் ஆவின்நெய்படி-2, இஞ்சிச்சாறு படி-$\frac{1}{4}$, முசுமுசுக்கைச் சாறு படி-$\frac{1}{2}$, விட்டு அதிமதுரம், நற்சீரகம், மிளகு, நெத்திவேர்ப்பழம், பாசிவேர், நாகவல்லிவேர் வகைக்குபலம்-1, செங்கழுநீர்க்கிழங்கு, தாமரைக்கிழங்கு, கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி, சிறுகீரைவேர், பசலிவேர், நெல்லிவற்றல், ஏலம் வகைக்கு பலம்-$\frac{1}{2}$, புளியங்கொட்டைத்தோல், ஆவரையரிசி, வரப்பூலாக்கொழுந்து வகைக்குபபலம்-2, கருவேலம்பிசின், வெள்வேலம்பிசின், விளம்பிசின், மாம்பிசின், வெட்டிவேர், விலாமிச்சுவேர், அறுகங்கிழங்கு வகைக்குபலம்-$\frac{1}{4}$, இவைகளையரைத்துப்போட்டு காச்சிநெய்யை வடித்து ஆறின் $\frac{1}{4}$-பலம் திப்பிலிப்பொடியும் 2-பலம் சர்க்கரையும் $\frac{1}{4}$-படி தேனுஞ்சேர்த்து வேளை ஒன்றுக்கு ஒருகரண்டிவீதஞ் சாப்பிட்டுவர சகலமேகநீரிழிவு அடைப்புத் தாகம் மூத்திரக்கிருச்சனம் எலும்புருக்கி பெரும்பாடு கிராணி தீரும்.

### கொன்றை நெய்

கொன்றைவேர்ப்பட்டை பலம்-16, இடித்து பதினாறுபடி தண்ணீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில் இஞ்சிச்சாறு ஆவின்நெய் வகைக்குபடி-1, மணத்தக்காளி, நத்தைச்சூரி, கீழ்க்காய்நெல்லி, கொடிவேலி, கண்டங்கத்திரி, பொன்முசுட்டை, தழுதாழை வில்வம், நைவேளை சத்திச்சாரணை, கொழிஞ்சி, சிறுமூட்டி, பாதிரி இவைகளின்வேர் விளாம்பட்டை, ஆயிலியப்பட்டை முடக்கொத்தானிலை, நாயுருவியிலை வகைக்குபலம்-$\frac{1}{4}$, திரிகடுகு, திரிபலை, செவ்வியம், வாய்விளங்கம், நறுக்குமூலம், தகரம், தக்கோலஞ், சதகுப்பை, சீரகம், கருஞ்சீரகமேலம், கடுகுரோகணி, அறத்தை காரகோலரிசி, வெப்பாலையரிசி வகைக்குகழஞ்சு-1, அரைத்து காச்சி வடித்து வேளைக்கு காண்டிவீதஞ் சாப்பிட்டுவர முயலகண்டன் முதலான வலிப்புவாதங்குட்டப்பவுத்திரம் மகோதரம் வயிற்றுக்கட்டி தீரும்.

### நாவல் நெய்

நாவற்பட்டைபலம்-40 யிடித்து இருபதுபடிதண்ணீரிற்போட்டு நாலுப்படியாய் வற்றவைத்து வடித்து அதில் பெருமாத்துப்பட்டை, ஆவாரையரிசி, ஆவாரைவேர்ப்பட்டை, கோஷ்டம், லவுங்கப்பட்டை, கற்கடகசிங்கி, அதிமதுரம், அதிவிடயம், சடாமாஞ்சில், கூகைநீர், தேவதாரு, சிறுநாகப்பூ, நிலப்பனைக்கிழங்கு, நன்னாரிவேர்-வகைக்கு கழஞ்சு-2, ஆவின்பாலாலரைத்துப்போட்டு பசுநெய்படி-1, விட்டு காய்ச்சி வேளை ஒன்றுக் கொருகரண்டிவீதங் கொள்ள பெரும்பாடு தீரும்.

### பொன்னுங்காணி நெய்

பொன்னுங்காணி பொற்றலைக் கரிப்பான் இவைகளின்சாறு ஆவின்பால் வகைக்குப்படி-1, எலுமிச்சம்பழச்சாறு படி-½, அதிமதுரம்பலம்-2, ஆவின்பாலா லரைத்துப்போட்டு காய்ச்சிவடித்து கற்கண்டு, கோரோசனை, சாதிக்காய், சாதிபத்திரிவகைக்கு கழஞ்சு 1, பொடித்துப்போட்டு வேளை ஒன்றுக்கு ஒருகரண்டிவீதஞ் சாப்பிட்டால் மூலச்சூடு, உஷ்ணம், மேக்காங்கை, கைகாலெரிவு, காந்தல், உடம்பெரிவு, வாய்நாற்றம் பிரமியந்தீரும் கண்குளிரும்.

### வல்லாரை நெய்

வல்லாரைச்சாறு ஆவின்பால் வகைக்கு படி-4, இளநீர்நெய்வகைக்குப் படி-2, சீரகச்செங்கழுநீர்ச்சாறு படி-1, அதிமதுரம், கோஷ்டம், செங்கழுநீர்க்கிழங்கு; பச்சைக்கற்பூரம், கோரோசனை வகைக்கு விராகனிடை-3, பாலாலரைத்துப்போட்டு மூன்றுநாள்வரை தீயாலெரித்து நாலாநாள் காய்ச்சிவடித்து வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டிவீதங் கொள்ள ஈளை, இருமல், தொண்டைகம்மல், சில விஷம், உடம்பிற் காந்தல் காவரட்சி தீரும்.

வல்லாரை, பொன்னுங்காணி, பொடுதலை வகைக்குச்சாறு படி-1, எலுமிச்சம்பழச்சாறு படி-¼, பசு பால்நெய் வகைக்கு படி-2, சாதிக்காய், சாதிபத்திரி, மாசிக்காய், கடுக்காய்ப்பூ, காட்டாத்திப்பூ, வால் மிளகு, ஏலம், கிராம்பு, அதிமதுரம் வகைக்குக்கழஞ்சு-2, பசும் பாலா லரைத்துப்போட்டு மெழுகுபதத்தில் வடித்து இரண்டுபலச் சீனியைப்போட்டு கிண்டி வேளைஒன்றுக்கு ஒருகரண்டிவீதம் இரச பற்பம்வைத்து உட்கொள்ள சகலமேகம் ரணகிரந்தி, பிரமியம், மேகச்சூலை, குட்டம்,சொறி,சிரங்கு, நாபிநோய், யோனிப்புற்று நீர்க் கடுப்பு, எரிவு சிறுப்புத் தீரும்.

வல்லாரைச்சாறு படி-2, சீந்திற்றண்டு சாறுபடி-½, நெய்படி-1, திரிபலை, கடுகு, சீரகம், கிரும்பு, தாளிசபத்திரி, அதிமதுரம், கோஷ்டம், பேரிச்சம்பழம், மூந்திரிப்பழம், சிறுதேக்கு, கடுகுரோகணி, நறுக்குமூலம், நன்னாரிவேர், சிறுமூட்டிவேர் வகைக்கு விராகனிடை-2, அரைத்துப்போட்டுக் காய்ச்சிவடித்து இரண்டுபல கற்கண்டைப் பொடித்துத்தூவி வேளைஒன்றுக்கு ஒருகரண்டிவீதங்கொள்ள பழஞ்சுரம், அஸ்திசுரம், வரட்சி, இருமல், கனசுரம், மாந்தசுரம் காமாலை, பாண்டு, உடம்பெரிவு, பித்தம் நீங்கும்.

### கடுக்காய் நெய்

இருநூறுகடுக்காயை விரைநீக்கிப் பத்துக்குத்தண்ணீரிற்போட்( நாலில் ஒன்றாய் வற்றவைத்து வடித்த கியாழத்தில் கையாந்தகரை கீழ்க்காய்நெல்லி, அவுரி, பொடுதலை, முருக்கு, குப்பைமேனி, சி. செருப்படை, சத்திச்சாரணை இவைகளின் சாறு வெள்ளாட்டு

ஆவின்நெய் வகைக்குப் படி-1, கடவிட்டு சிவதை, சங்கமவேர், மூக்குரட்டைவேர், கீழ்க்காய்நெல்லிவேர், திரிகடுகு, சீரகம், கருஞ்சீரகம் வகைக்குக் கழஞ்சு-½, அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு காணடிவீதம் கொள்ள சூலைபாண்டு சோகை, உதர ரோகங்கள் தீரும்.

## வில்வ நெய்

வில்வவேர் பலம்-24, இடித்துப்பதினாறுபடி தண்ணீரிற்போட்டு எட்டிலொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில் ஆவின்நெய்படி-1, லவங்கப்பட்டை, ஏலம், செஞ்சந்தனம், திரிகடுகு, நற்சீரகம், இந்துப்பு, கற்கடகசிங்கி, பேரீச்சம்பழம், செங்கழுநீர்க்கிழங்கு, சிறுநாகப்பூ வகைக்கு கழஞ்சு-1, அரைத்துப்போட்டு பக்குவத்தில் வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு காணடிவீதங்கொள்ள விக்கல் சத்திவாட்சி தீரும்.

## அவுரி நெய்

அவுரிவேர் பலம்-6. சங்கம்வேர் முருங்கைவேர் வகைக்கு பலம்-2, வேலிப்பருத்திவேர், சிவனார்வேம்பு, சிறுகுறிஞ்சா, மிளகரணை, அழிஞ்சில் கருநொச்சி இவைகளின்மூலம் வகைக்குப் பலம்-1, இவைகளை யிடித்துப் பதினாறுபடி தண்ணீரிற்போட்டு எட்டிலொன்றாய் வற்றவைத்து வடித்த கியாழத்தில் ஆவின்நெய் படி-1, செங்கத்தாரிபட்டை, கடுக்காய், கருஞ்சீரகம், ஓமம், அழிஞ்சில்விரை, கடுகுரோகணி, தேற்றாம்பட்டை, கார்த்திகைக்கிழங்கு, மருட்கிழங்கு, காக்கோலரிசி, கஸ்தூரிமஞ்சள், பொன்முசுட்டைவேர், கீழ்க்காய் நெல்லிவேர், எட்டிவிரை, கடம்பவிரை வகைக்கு கழஞ்சு-1, அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு காணடிவீதஞ் சாப்பிட்டுவர சகல விஷமும் காணாக்கடி, எலி, இருமல், மரவெட்டைக்கடி தீரும்.

## அறுகவேர் நெய்

அறுகவேர்ச் சாறுபடி-4, ஆவின் நெய்படி-1, ஒன்றாய்க் கலந்து அதில் அதிமதுரம் பலம்-1, சீரகம், சாதிபத்திரி, விலாமிச்சம்வேர், சிற்றாமுட்டிவேர், வில்வவேர் வகைக்கு விராகனிடை-3 ஏலம், கிராம்பு, மிளகு, கோஷ்டம் வகைக்கு விராகனிடை-1, அரைத்துப்போட்டு காய்ச்சிவடித்து வேளை ஒன்றுக்கு ஒரு காணடிவீதங்கொள்ள உடம்பெரிவு, பிரமியம், இரத்தபித்தம், நீர்க்கடுப்பு, தாகந்தீரும்.

## சமுத்திராப்பழ நெய்

சமுத்திராப்பழம், அஞ்சி, வெள்ளுள்ளி வகைக்குப் பலம்-10, இவைகளை யிடித்து முக்குறுணி சலத்திற்போட்டு நாலிலொன்றாய் வற்றவைத்துப் பிழிந்து வடித்து அதில் முருங்கைவேர், கொடிவேலிவேர், ஓமம், இந்துப்பு, திரிகடுகு, காயம், செவியம், நவாச்சாரம், கருஞ்சீரகம், நற்சீரகம், புளியமடற்கிழங்கு வகைக்குக் கழஞ்சு-2,

அரைத்துப்போட்டு ஆவின்நெய் படி-2, விட்டுக் காய்ச்சி வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டிவீதஞ் சாப்பிட்டுவரக் குன்மம், உதர ரோகம், நீர்க்கோவை, பீலிகை, கெண்டை, பெருவயிறு தீரும்.

### கண்டங்காரி நெய்

கண்டங்கத்திரி சமூலம் பலம்-32, வில்வம், அமுக்குரா, ஆடாதோடை, சங்கு, சிறுவழுதலை, அவைகளின் மூலம் பேய்ப்புடல் வகைக்குப் பலம்-1, இடித்து குருணி நீர்ப்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்து அதில் ஆவின்நெய், பெரும்பூசணிக்காய்ச்சாறு, ஆவின்பால் வகைக்குப் படி-1, ஒன்றாய்க்கலந்து தாளிசபத்திரி, மிளகு, செவ்வியம் வகைக்குக் கழஞ்சு-3, ஏலம், லவங்கப்பத்திரி, லவங்கப்பட்டை, திப்பிலி, விலாமிச்சு, சிறுநாகப்பூ, சடாமாஞ்சில், கற்கடகசிங்கி வகைக்குக் கழஞ்சு-1 ஆவின்பாலாட்டிப்போட்டு பதமாய்க்காய்ச்சிவடித்து திப்பிலிபேரீச்சம்பழம்வகைக்குமூன்றுகழஞ்சு படி பொடித்துப்போட்டு வேளை ஒன்றுக்கு மூன்று கழஞ்சுவீதஞ் சாப்பிட்டுவர உழமாந்தை, சுவாசகாசம், ஈளை, க்ஷயந் தீரும்.

### தூதுளை நெய்

தூதுளைசமூலம் பலம்-20, கறிமுள்ளிவேர் கண்டங்கத்திரிவேர் வகைக்கு பலம்-10, இடித்து பதினாறுபடி தண்ணீர்ப்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்த கியாழத்தில் ஆவின்நெய் பால் வகைக்கு படி-1 விட்டு திரிபலை, திரிகடுகு, கோஷ்டம், தாளிசபத்திரி, கொடிவேலிவேர், நன்னாரிவேர், சிறுநாகப்பூ வகைக்கு கழஞ்சு-1, சிறுகாஞ்சொரிவேர், ஆடாதோடைவேர், அதிமதுரம், நற்சீரகம், தேற்றான்விரை, சடாமாஞ்சில், செவ்வள்ளிக்கொடி வகைக்குப்பலம்-கால், மொசுமொசுக்கைவேர் கண்டங்கத்திரிவிரை வகைக்குப்பலம்-1, அரைத்துப்போட்டு இஞ்சிச்சாறு-¼, விட்டு காய்ச்சி கடுகுடன் தேன்படி அரைக்கால், சாககரைபலம்-1, சேர்த்து வேளை ஒன்று 1-கரண்டிவீதங் கொள்ள ஈளை இருமல் காசம் சுவாசம் உபபிசம் இரத்தகாசந் தீரும்.

### விஷ்ணுகாந்தி நெய்

விஷ்ணுகாந்திபலம்-8, வில்வவேர் சிறுமுட்டிவேர் வகைக்கு பலம்-2, பற்பாடகம்பலம்-4, இடித்து 16-படி தண்ணீர்ப் போட்டு எட்டொன்றாய் வற்றவைத்துவடித்து அதில்ஆவின்நெய் பால் வகைக்குப்படி-1, அதிமதுரம் சீரகம் வகைக்குப் பலம், திப்பிலி, மிளகு, கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி, தாளிசபத்திரி வகைக்கு. விராகனிடை-2, ஏலம், சிறுநாகப்பூ, சண்பகப்பூ, கோஷ்டம், சந்தனம், விலாமிச்சம், ஓரிலைத்தாமரை, நறுக்குமூலம், கடுகுரோகணிவகைக்கு விராகனிடை-1½, கோரோசனை, பச்சைக்கற்பூரம் வகைக்கு விராகனிடை-½, இவைகளை வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டிவீதஞ் சாப்பிட்டுவர உட்காய்ச்சல் வரட்டி இருமல் சோகை காமாலை கைகாலெரிவு தாகம் வயிற்றெரிவு தீரும்.

### சதாவேரி நெய்

சதாவேரிகிழஙகுச் சாறு படி-12, குழிமீட்டான கிழஙகுசாறு, நெலலிககாய் சாறு, பெருமபூசனிககாய சாறு, கருமபுசசாறு வகைகக குப படி-1, ஆவினெய் படி-4, ஒனறாய்க கலநது திரிகடுகு, திரிபலை, வெபபாலையரிசி, கொததமல்லி, ஏலம், லவஙகம, லவஙகபபத்திரி, சிறுநாகப்பூ, சீரகம், விலாமிச்சமவேர், அதிமதுரம, கூகைநீர், மூநதிரிகை, பேரீதது, இநதுபபு, ஓமம, கோரைககிழஙகு, சிறுதேககு, கோஷ்டம, சநதனம வகைககு கழஞசு-3, அரைததுப போட்டுக் காய்சசி வடிதது வேளை ஒன்றுககு ஒரு கரண்டிவீதஞ சாபபிடடுவர மூததிரபபாளை நீரககடுபபு குத்து எலுமபுருககி மேககூரம கைககா லெரிவு நீங்கும். தேகபுஷடி தாதுவிருததி யுண்டாகும.

### கதலிகநத நெய

கதலிக்கிழஙகு அதின பூவகைக்குத துலாம-$\frac{1}{2}$, இடிததுப ககு நீரிற போட்டு நாலிலொனறாய வறறவைதது ஆவினநெய், பாலவகைககு படி-1, கருமபுச்சாறு, நெலலிககாய சாறு வகைககு படி-1, ஒன்றாய்க் கலநது ஏலம,லவஙகம, சநதனம, சடாமாஞசில, திரிபலை, ஆலவிழுது, செஙகழுநீரககிழஙகு, நெய்தறகிழஙகு வகைககு கழஞ்சு-3, இவைகளை யரைததுப்போட்டு 4-நாள சிறு தீயாயெரிதது 5-ம நாள காய்சசி வடிதது வேளை ஒனறுககு ஒரு கரண்டிவீதங கொள்ள எலுமபுருககி மேகவெட்டை பெருமபாடு நீரிழிவு தீரும.

### மூலைபபால் நெய்

மூலைப்பால படி-2, ஆவினெய் படி-1, ஒனறாய்ககலநது அதில் கொடுவேலிவேர், வெளளரிவிதது, பூசனிவிதது, நெலலி, மூளளி, அதிமதுரம வகைககு கழஞசு-2, அரைததுப்போட்டு காய்சசி வடிதது வேளை ஒனறுககு ஒரு கரணடிவீதஙகொளள உடறகாநதல மெலிவு எலும்புருககி கணமவாட்டி பிரமேகம வெடடை தீரும.

### கடுககாய நெய

கடுக்காய்-100, கீழக்காய் நெலலி பலம-20, இடிததுத தூணி நீரிறபோடடு காய்சசி 2-படியாய் வறறவைதது வடிதது ஆவினநெய் படி-1, பால் படி-2, கலநததில் சண்பகப்பூ, ஏலம, சிவதை, சுககு, மஞ்சள்,சீரகம, கடுகுரோகணி, கடுககாய், திப்பிலி, வகைககுபலம-$\frac{1}{2}$, அரைத்துப்போட்டு காயசசி வடிதது வேளை ஒனறுககு இருகழஞ்சு வீதஞ் சாபபிட்டுவர உடமபு வீககம பிததசோகை உடமபெரிவு அக்கினி மநதம் மலசலககட்டு இளைப்பு பிததம் நீங்கும.

### சுககு நெய்

சுககு பலம்-24, இடிததுத் தூணிநீரிற் போட்டு நாலிலொன் றாய் வற்றவைதத கியாழததுடன் ஆவின் நெய் படி-2, வெள்ளாட்டு

நீர் படி-1, கலந்து அதிவிடையம், காட்டாத்திப்பூ, பெருங்கரும்பை, கொடிவேலி, பெருங்காயம், முத்தக்காசு, திரிகடுகு, திரிபலை, சிறுதேக்கு, திப்பிலிமூலம், விளாம்பிசின், ஆடுதீண்டாப்பாளை, இந்துப்பு, சீரகம், மஞ்சள், ஓமம், செவியம் வகைக்கு கழஞ்சு-1, அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டிவீதஞ் சாப்பிட்டுவர குன்மம் கிராணி வயிற்று கழிச்சல் கடுப்பு அதிசாரம் மூலக்கடுப்பு தீரும்.

### பிரமி நெய்

பிரமிசாறு படி-4, ஆவின்நெய் படி-3, பால் படி-1, ஒன்றாய்க் கலந்து சிவதை, சுக்கு, திப்பிலி, நெல்லிவற்றல், இந்துப்பு, விளாவரிசி, கற்கண்டு, வேம்பு, கஸ்தூரிமஞ்சள் வகைக்கு கழஞ்சு-3, அரைத்துப்போட்டு 3-நாள்வரை சிறு கொதிப்பிட்டு 4-ம் நாள் காய்ச்சி வடித்து கைப்பு புளிப்பு நீக்கி வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டி வீதங் கொள்ள வாயு அக்னிமந்தம் நீங்கும் தீபன முண்டாகும் கபம் அறும் பொன்னிறமாகும் புத்தி விர்த்தியாகும்

கிருதப் படலம் முற்றிற்று.

---

## ஷர்பத்துப் படலம்

அதாவது பலவகைகளாலும் புட்பரச சந்தனங்களாலும் சர்க்கரை பாகு, கற்கண்டு இவைகளால் மெழுகுபதமாய் காய்ச்சி மருந்தினாலும் வேறு வகைகளாலும் பிரயோகிக்கலாம். ஆனதால் யூனானிய வாகடப் பிரகாரம் ஷர்பத்து படலமென்ப பெயர் வகுக்கப்பட்டது.

### இந்த ஷர்பத்துள் ஒரு தியகள் பிரயோகிக்கலாம்

### நன்னாரி ஷர்பத்து

முப்பத்தேழரை ரூபாயிடை நன்னாரிவேரை யிடித்து 1½-படி யாய் வற்றவைத்து வடிகட்டி 37½-ரூபா யிடை சீனியைக் கரைத்து காய்ச்சி ஒரு துளியை விரலாலழுத்தி பார்க்க பிசின்போலிருந்தால் அந்தப் பக்குவத்தில் சீசாவி லடைத்துக்கொண்டு 2-ரூபா யிடை ஷர்பத்தில் 4-ரூபா யிடை தண்ணீர் கலந்து சாப்பிட்டுவர மேககாங்கை பிரமேகம் நீர்ச்சுருக்கு நீர்க்கட்டு நிலப்பனைப்பு மேகநீர் கைகால் கிரந்தல் கண்ணெரிவு நாவரட்சி தாகந்தீரும் தேகங்குளிரும் மருந்திடு நீங்கும்.

### சந்தன ஷர்பத்து

முற்றின 2-பலம் சந்தனத்தூளை 10-பலம் தண்ணீரில் ஒருநாளூறவைத்து மறுநாள் காய்ச்சி 4-பலம் நீர் வற்றினபின் வடிகட்டி அதற்கு 1½-பங்கு கற்கண்டையும் 2-பலம் பனிநீரையுஞ் சேர்த்து

துக் காய்ச்சி மேற்சொல்லிய பதத்தி லிறக்கிச் சீசாவிலடைத்து கொண்டு 2-ரூபா யிடைவீதம் தண்ணீரிற்கலந்து சாப்பிட்டுவர மூலச்சூடு பிரமேகந் தீரும்.

### ரோஜாப்பூ தாமரைப்பூ வல்லாரை ஷர்பத்து

பதினெட்டு ரூபாயிடை காய்ந்த ரோஜாப்பூவை அரைசேய மாகாணிப்படி வெந்நீரில்-12 மணிநேரம்வரை ஊறவைத்து வடிகட்டி காலே அரிக்காலபடியாய் வற்றவைத்து ½-பலம் பனிநீரும் 1½-ரூபாயிடை சீனியுங்கலந்து காய்ச்சி மேற்சொல்லியபடி பதமறிந்து சீசாவி லடைத்துக்கொண்டு ஒரு ரூபாயிடையை 2-ரூபா யிடைத் தண்ணீரிற்கலந்து சாப்பிட்டுவர நீர்கட்டு மலக்கட்டு நீர்ப்பணப்புகாங்கை மூலச்சூடு நீங்கித் தேகங்குளிரும் இதுபோல உலர்ந்த தாமரைப்பூவையாவது உலர்ந்த வல்லாரையாவது ஷர்பத்து செய்து சாப்பிட்டுவந்தால மேககாங்கை திரும்.

### திராட்சபழ ஷர்பத்து

திராட்சப்பழத்தைச் சாறுபிழிந்து வடிகொண்டு அதற்குச் சரியிடை சீனியாவது கற்கண்டாவது சேர்த்து 2½-பலம் பனிநீர்விட்டு காய்ச்சி மேற்சொல்லிய பாகுபதத்தி லிறக்கி சீசாவி லடைத்துக் கொண்டு 3-ரூபாயிடை ஷர்பத்தை 6-ரூபாயிடைத் தண்ணீரிற் கலந்து சாப்பிட்டுவந்தால் பித்தச்சூடும் கைகாலெரிவுந் தீரும்.

### எலுமிச்சம்பழ ஷர்பத்து

தேறின எலுமிச்சம்பழம் ரசத்தினிடைக்கு 2-பங்கு அல்லது 2½-பங்கு சீனியாவது கற்கண்டாவது கலந்து காய்ச்சிப் பாகுபதத்தில சீசாவிலடைத்துக்கொண்டு முன்னிடைப்படி சாப்பிட்டுவந்தால் பித்தந்தீரும.

### நாரத்தம்பழ ஷர்பத்து

நாரத்தம்பழ ரசத்தினிடைக்கு இரட்டிப்பு சீனிகலந்து காய்ச்சி பதத்தில் சீசாவிலடைத்துக் கொண்டு சாப்பிட்டுவந்தால பித்தத்தைத் தணிக்கும.

### கொமட்டி மாதளம்பழ ஷர்பத்து

கொமட்டி மாதுளையை மேற்றோலை நீக்கி யிடித்துச் சாறுபிழிந்து அந்த நிறைக்கு முக்காலேயரைக்கா யளவு சீனியாவது கற்கண்டாவது கலந்து காய்ச்சி பாகுபதத்திற் சீசாவிலடைத்துக்கொண்டு ஒரு ரூபாயிடையில் 2-ரூபாயிடை தண்ணீர்கலந்து சாப்பிட்டுவர பித்தத்தையும் பித்தச்சூட்டையும் நீக்கும.

### மாதுளம்பழ ஷர்பத்து

மாதுளம்பழ ரசத்தினிடைக்கு 1½-பங்கு சீனிகலந்து மூன் போறகாய்ச்சி பாகுசெய்து சீசாவிலடைத்துக்கொண்டு சாப்பிட்டுவர பித்தம் நீங்கும்.

### இஞ்சி ஷர்பத்து

ஆறேகால் ரூபாயிடை இஞ்சியைத் துண்டுதுண்டாய் நறுக்கி மூழ்மாகாணிப்படி சுடுதண்ணீரில் 4-மணிநேரம் ஊறவைத்து வடி கட்டி 75-ரூபாயிடை சர்க்கரையைக் கரைத்துப் பாகுசெய்து சீசாவி லடைத்துக்கொண்டு சாப்பிடவும்.

### காடி ஷர்பத்து

ஒருசீசா காடியை ஒரு பீங்கானிலவிட்டு 94-ரூபாயிடை சர்க்க ரையைப்போட்டு காய்ச்சி பாகுப்பதத்தில் சீசாவி லடைத்துக்கொண்டு சாப்பிடவும்.

மேற்படி ஷர்பத்துகள் நாட்படவிருந்தால் புளித்து குணத் தில் வேறுபட்டுப் போகுமாதலால் தேவையானால் அப்போதைக்கப் போது செய்து உபயோகப்படுத்திக் கொள்ளவேணும்.

**ஷர்பத்துப் படலம் முற்றிற்று.**

---

## எண்ணெய்ப் படலம்

### பன்னிரண்டுதிங்கள் பிரயோகிக்கலாம்

### செங்கத்தாரி எண்ணெ

சிற்றாமணக்கெண்ணெ படி-1, செங்கத்தாரிபட்டை, பூதகாப்பன் பட்டை, வேம்பாடம்பட்டை, பெருமரத்துப்பட்டை, கண்டங்கத்திரி நன்னாரிவேர், கழுஞ்சிவேர், கிரந்திநாயகம், வேலிப்பருத்திவேர், கடுக்காய், சுக்கு, திப்பிலி வகைக்குக்கழஞ்சு-2, அரைத்துப்போட்டுகாய்ச்சி வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு காசிடைவீதம் காப்பன பதார்த்தம் நீக்கிச் சாப்பிட்டுவர தொண்டைபுற்று நாவுப்புற்று வாய்ப்புற்று நாக்கு வெடிப்பு உதடுவெளுப்பு நாக்குகொப்புளம் பல்லீருகட்டிச சீழ்வடிதல் வாய்நாற்றம் வாய்கிரந்தி தீரும்.

### கொமட்டிக்கா யெண்ணெ

கொமட்டிக்காய்ச்சாறு ஆவின்பால் வகைக்குப்படி-4, தேங்காய் பால் படி-1, சிற்றாமணக்கெண்ணெ படி-3, எருக்ளிச்சாறு படி-3, கடுகு, வெள்ளுள்ளி, பஞ்சலவணம், கடுக்காய், கடுகுரோகணி, அதி

மதுரம், திரிகடுகு, ஓமம், வாய்விளங்கம், சீரகம், அரக்கை, கோஷ்டம், சிறுநாகப்பூ, சன்னலவங்கம் வகைக்குக் கழஞ்சு-3, அரைத்துப் போட்டு காய்ச்சி வடித்து காலையில் ஒரு காண்டிவீதம் சாப்பிட்டுவர வாதநீர் சீதகட்டு கிருமி பீலிகை கிரக்கோவை உதரரோகம் பெரு வயிறு கெண்டைவாயு தீரும்.

## உள்ளி ஆமணக்கெண்ணெ

வெள்ளுள்ளி பலம் 100, சிற்றாமுட்டி, பேராமுட்டி, சிறுவழுதலை, தூதுவேளை, கண்டங்கத்திரி, புங்கு, ஆயிலபம், நொச்சி, மாவிலிங்கு, பேராமணக்கு, முருங்கை இவைகளின் வேர்ப்பட்டை வகைக்குப் பலம்-5, இடித்து 8-மரக்கால் சலத்திற்போட்டு குறுணியாய் வற்றவைத்து வடித்து அதில சிற்றாமணக்கெண்ணெ படி-4, கூட்டிவிட்டுக் கலக்கி வசம்பு, செவியம், சிவதை, சீரகம், கடுக்காய், இந்துப்பு, திரிகடுகு, ஓமம், கொடிவேலிவேர், பங்கம்பாளைவேர் வகைக்குக் கழஞ்சு-4, வெள்ளாட்டுப்பாலா லரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு காண்டிவீதம் கொள்ள வாதகாசம், விக்கல், விஷகடி, குடல்வாதம், பீலிகை, கோபவிப்புருத்தி, பெருவயிறு, பவுத்திரம், கல்லடைப்பு, யோனிச்சூலை, நீராமை, சூலை, வாயு தீரும்.

## கொடிவேலி எண்ணெ

முடக்கொத்தான் சாறு கள்ளியை வாட்டிப்பிழிந்த சாறு வகைக்குப்படி-$\frac{3}{4}$, சிற்றாமணக்கெண்ணெ படி-1$\frac{1}{2}$, சிவதைவேர், கொடிவேலி வேர், வெள்ளைக்காக்கணம்வேர், சிற்றரத்தை, சதகுப்பை, தேவதாரம், இந்துப்பு, திப்பிலி, பெருங்காயம், கடுகுரோகணி, கழற்சிப்பருப்பு வகைக்கு பலம்-1, சுத்திசெய்த நேர்வாளமுத்து-20, வெள்ளுள்ளி பலம்-4, இவைகளை யரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து கடும பத்தியமாய் காண்டிவீதம் கொடுக்க அண்டவாதம், குடல்வாதம், வாயு, கவுசி தீரும்.

நல்லெண்ணெ படி-$\frac{1}{4}$, கொடிவேலி வேர்ப்பட்டை பலம்-$\frac{1}{2}$, கருப்புக்கட்டி பலம்-$\frac{1}{4}$, அரைத்துப்போட்டு மெழுகு பதத்தில் காய்ச்சி கடுகுடன் வேளை ஒன்றுக்கு ஒரு காண்டிவீதம் கடும பத்தியமாய் 3-நாள் 6-வேளை சாப்பிட்டு நான்காநாள் தலைக்குத் தண்ணீர் வார்த்து உப்பை வறுத்துக்கூட்ட அரையாப்புத் தீரும்.

## மேகராஜாங்கத் தெண்ணெ

சிற்றாமணக்கெண்ணெ படி-4, எருக்கள்ளி கழுதை தலத்தில் வரிக் கொம்மட்டி, கையாந்தகரை, புளியாரை, சங்கல்லாரை. பிரமி, பொடுதலை, பெருப்பட்டை, கருநொச்சி, பொன்னாங்காணி, நுணா, ஆடாதோடை, கிரந்தி நாயகம், வெள்ளறுகு, சிவன்வேம்பு வகைக்குச்சாறு படி-2, ஒன்றாய்க் கலந்து கொடிவேலி, பூவரசுவேர், நிலவாகைவேர், சடுதாத்திவேர், கிளிமூக்கு கிழங்கென்ற கற்றாழைக் கிழங்கு, அப

பைக கிழங்கு, சஙகக்குபபிவேர் வகைக்கு பலம்-1, இடிதது குறுணி நீரிறபோட்டு எட்டொனறுய் வறறவைததது வடிதத கியாழததைக கூடவிட்டு ஜாதிககாய், கிராமபு, ஏலம சனனலவஙகப்பட்டை, வாலமிளகு, அதிமதுரம கோஷ்டம, திபபிலிமூலம, வெஙகாரம, குருசாணி, ஓமம, தானறிககாய், கடுககாய், கருஞசீரகம, காகோலரிசி, கஸ்தூரி மஞசள, அரததை, சுககு, அதிவிடையம, அககிருகாரம, கடுகுரோகணி, சடாமாஞசில, தாளிசபததிரி, கசகசா, கஞசா, வலமபுரிககாய, பாஙகிப்பட்டை, அழிஞசிபபட்டை, வாலுளுவையரிசி, சிறுநாகபபூ, தககோலம, வசமபு, சுககு, அபினி, வசுவாசி, சீரகம, ஆனைததிபபிலி, குஙகுமபபூ, சாஸ்திரவேதி, வாளம, சேஙகொட்டை, சததிசாரம, எவாசசாரம, நவாசசாரம வகைககு விராகனிடை-4, பொடிததுபபோட்டுக் காயசசி மெழுகு பததததில் வடிதது வேளை ஒன்றுககு ஒரு கரண்டிவீதம கடுமபததியமாய் 3-நாள 6-வேளை சோகை பாண்டு கழலவாதம, அணடவாதம, காலவாதம, பககவாதம், பவுததிரம, மூலப்புற்று, மண்டைசசூலை, வாயு, ரணம, சூலைதீரும துவரம் பருபபும வறுதத உப்புங கூட்டிக கொள்ளலாம்.

## ஐங்தெண்ணைத் தயிலம்

எள்ளு, ஏரணடம், இலுப்பை, வேமபு, புஙகு இவைகளின் எண்ணை வகைககு படி-1, ஆடாதோடைவேர அதினிலை, கழுதாழை, காட்டாமணககு, திருகுகளளி, வேளை, மேனி, மாவிலிஙகுபபட்டை, கருநொசசி, வேமபு, புஙகு, கொடிவேலி, முருஙகை, சஙகு, காட்டு முருஙகை, தூதுவேளை இவைகளின மூலம மாமபட்டை வகைககு பலம-5, இடிதது தூணிநீரிறபோட்டு எட்டொன்றுய் வறறவைதது கியாழததையும ஒனறுகக் கலந்து அரததை, சுககு, ஓமம, திப்பிலி மூலம, ஆனைத்திப்பிலி, காயம, கரியசீரகம, சதகுபபை, தேசாவரம, குருசாணி, வெள்ளைப்பூண்டு, வெளிசசிபிசின், வசமபு, சிறுதேககு, இஞ்சி, சடாமாஞசில, கிராமபு, குககில் வகைககு பலம-¼, இடித்துப்போட்டு காய்சசி மெழுகு பததததில வடிதது 3-நாள காசிடை உள்ளுககுக் கொடுதது உடமபெங்கும் பூசினுல சன்னிதோஷம் வலிபபு அண்டவாதம தீரும. நாலாமநாள் தலைக்குத தணணீர் வார்தது உப்பு கூட்டவும.

## சுத்தவல்லாதி எண்ணை

சிற்றுமுட்டிவேர் பலம்-32, யிடிதது இருதூணி நீரிற்போட்டு நாலிலொனறுய் வற்றவைதது வடிதது அதில் ஆவின்பால் எலுமிசசம் பழச்சாறு வகைககு படி-1, ஐஙதெண்ணைசேநதி, அதிமதுரம, கோஷ்டம, சாதிக்காய், சாதிபததிரி, ஏலம, லவஙகபபட்டை, அரததை, சுககு, அககிராகாரம, சடாமாஞசில, தாளிசப்பததிரி, வாய்விளஙகம, ஆனைதிப்பிலி, திபபிலிகடுகு, தககோலம, கடுகுரோகணி, வாலமிளகு, ஓமம், குஙகுமப்பூ கருஞசீரகம, கடுககாய், தானறிககாய், சணபகபபூ, கொததமலலி, வாலுளுவையரிசி, சிறுநாகபபூ, செவியம வகைககு கழ

ஞ்சு-¼, பொடித்துப்போட்டு காய்ச்சி வடித்து புனுகு கஸ்தூரி வகைக்கு 1, போட்டு மூன்றுநாளாறவைத்து காசிடை உள்ளுக்குக் கொடுத்து ஒரு துளி நாசியில்விட்டு உடம்பிற் பூசிவர முகவாதம் அண்டவாதம் பித்தம் சிலேத்துமம் பீனிசம் தாகசூலை சொறி நீங்கும் பத்தியம் பணிபாயறும் உப்புடன் கூட்டிவந்து நாலாநாள் சீக்காய் தேய்த்து வெந்நீரில் ஸ்நானஞ் செய்யவும்.

முடக்கொத்தான் எண்ணெ

முடக்கொத்தான் சமூலம் பலம்-30, சிறுமுட்டிவேர் பலம்-15 சிற்றாமணக்கின் வேர் பலம்-7½, இலவம்பட்டை, முருங்கப்பட்டை, செவியம், சிவதைவேர், வீழிக்கிழங்கு, வெள்ளைச்சாரணைவேர், கழற்றிருப்பை, கொள்ளு பருப்பு, முதியார் கூந்தல், செம்முள்ளி, வேர், கொடிவேலி வேர், தேவதாரம், நெருஞ்சி வேர், தண்ணீர்விட்டான் கிழங்கு வகைக்குப் பலம்-3, இடித்து இருதூணி நீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்த கியாழத்தில் கொடிக்கள்ளிப் பால், சதுரக்கள்ளிப்பால் வகைக்கு படி-¼, ஆவின்பால், ஏரண்டத் தெண்ணெ, தாமரைக்கிழங்குச்சாறு, பேய்க்குமட்டிக்காய்ச்சாறு வகைக்கு படி-4, ஒன்றாய் விட்டு, திரிகடுகு, சித்திரமூலம், சாதிக்காய், செவியம், ஏலம், பெருங்காயம், வசம்பு, ஓமம், மல்லி, சதகுப்பை, இந்துப்பு, பொட்டிலுப்பு, அமுக்குறாவேர், அதிமதுரம், லவங்கப் பட்டை, சடாமாஞ்சில், வாலுளுவையரிசி, சிவதை, வெட்பாலையரிசி சிற்றரத்தை, சந்தனம், நன்னாரிவேர், அக்கிரகாரம் திப்பிலி வகைக்கு கழஞ்சு-3, அரைத்துப்போட்டு 5 நாள் ரவியிலூறவைத்துக் காய்ச்சி வடித்து நோயின் பலன் நோயாளியின் தேகபலமறிந்து ஒரு கழஞ்சு அல்லது இரண்டு கழஞ்சு கொடுக்க நீர்க்கட்டி மலக்கட்டு மகோதரம் குட்டம் குன்மம் விஷபாக வீக்கம் கெவுசி கண்டை வெப்புப் பாண்டு அந்தவாத நீராம்பல் பெருவயிறு விப்புருதி பாண்டு இளைப்பு உதிரக்கட்டால் கரிடு சகல ரோகமுந் தீரும். பத்தியத்திற்குக் கொள்ளு மிளகுநீர் கோழிரசஞ் சோறுங் கொள்ளலாம்.

விப்புருதி எண்ணெ

விளக்கெண்ணெ படி-1, நிலவாகை, பிரமி, பொடுதலை, கோழி யவரை, சிவனி, அவுரி, வெள்ளறுகு, மலைவேம்பு, சங்கங்குப்பி, கழற்சி, காட்டாமணக்கு, வகைக்கு சாறு படி அரைக்கால் ஒன்றாய்க் கலந்து அதில், திப்பிலி, கருஞ்சீரகம், கஸ்தூரிமஞ்சள், கடுகுரோகணி, வசம்பு, நீர்வெட்டி முத்து, நேர்வாளம், காட்டுச்சீரகம் வகைக்கு விராகனிடை-1, வெள்ளுள்ளி, கடுக்காய் வகைக்கு பலம்-1, இடித்துப்போட்டு காய்ச்சி வடித்து 3-நாள் காலையில் ஒரு கரண்டி வீதங் கொள்ள விர்த்தியாகும். நாலாறுபடி பிரவிர்த்தியான இவ்வெண்ணெ பத்தியங் கொள்ள சீக்கிரத்தில் பலவிதமாய்க் கட்டுகிற விப்புருதிக் கட்டியும் அதிலுண்டாகும் புண்ணும் அரையாப்பு பவுத்திரம் தீரும். பத்தியம் உப்பு புளி நீக்கவும்.

வேப்பெண்ணையாதல விளக்கெண்ணெயாதல படி-½, ஆடுதீண்டாப் பாளை, சங்கங்குப்பி, காட்டாமணக்கு, சிணனி, அவுரி, வெள்ளறுகு, வேலம்பட்டை இவைகளின் சாறு புங்கம்பால், ஆலம்பால் வகைக்குப படி-⅛, ஒன்றாய்க் கலந்து அதற்கு, சாதிலிங்கம், மிருதாரசிங்கி, கெந்தகம், சீனிக்காரம, கருஞ்சீரகம வகைக்கு விராகனிடை-3, காா்கோலரிசி, வெள்ளைக்குங்கிலியம வகைக்கு விராகனிடை பொடித்துப போட்டு காய்சசி வடித்து அந்த எண்ணெயை உள்ளுக்குக கொடுத்து இந்த எண்ணெயை மேலோடு போட விப்புருதிப புண்ணும புரை விழுந்த புண்ணும் சூலை அரையாப்பு பவுத்திரப புண்களும மற்றும் ஆறா ரணங்களும ஆறும்.

நீரடைப்புக்கு எண்ணெ

விளக்கெண்ணெ படி-¼, எருள்ளி பலம்-1, சிதைத்துப்போட்டு பொன்னிறமாய்க் காய்ச்சி வடித்து பொரித்த வெங்காரம கடுக்காய்த் தூள் வகைக்கு கழஞ்சு-1, போட்டுக் கலக்கிக் கொடுக்க துணமாங்கிசம நீரடைப்புக் கல்லடைப்புத் தீரும.

சாதிக்காய எண்ணெ

நல்லெண்ணெ படி-1, முலைப்பால படி-⅛, ஆவின்பால் படி-¼, ஒன்றாயக கலந்து சாதிக்காய பலம்-2, சாதிப்பத்திரி, வெந்தயம வகைக்குப் பலம்-1, குமரிச்சாற்றால் அட்டிப்போட்டு காய்ச்சி வடித்து குளிர்ந்த தண்ணீரிலாவது சுடுதண்ணீரிலாவது முலைப்பாலிலாவது ஒரு துளி இரண்டு துளி விட்டுக் கொடுக்க கணத்தோஷம் இரத்த வாந்தி இரத்தகாசம் வாந்தி இருமல் கக்குவான இருமல சீதபேதி இரத்தபேதி தீரும்.

லவங்காதி எண்ணெ

லவங்கம், கற்கண்டு வகைக்குப பலம்-¹, சாதிக்காய், சாதிபத்திரி வகைக்கு பலம்-¼, இவைகளை பொடித்து ஒரு படி நல்லெண்ணெயிற் போட்டு முயலிரத்தம பலம்-¼, கூட்டிவிட்டுக காய்ச்சி வடித்து அதில் குங்குமப்பூ, கோரோசனை வகைக்கு ஒரு கழஞ்சு பொடித்துப்போட்டு வைத்துககொண்டு வேளை ஒன்றுக்கு ஒரு துளி அல்லது இரண்டு துளி வெந்நீரிலாவது முலைப்பாலிலாவது கொடுக்க க்ஷயம காசம் ஈளை இருமல் உப்பிசந் தீரும்.

சந்தன எண்ணெ

சந்தனத்தூள் பலம்-8, நல்லெண்ணெ பலம்-10, இவைகளை பதக்கு நீரிற் கலந்து நீர்வற்றக் காய்ச்சி வடித்துச சீசாவிலடைத்துக கொண்டு பஞ்சிற றோய்த்து கையில வைத்திருக்கத் தேகத்தில வாடையேறிச் சுகத்தைத் தரும். சொறி சிரங்கு காப்பான புண்களிற் றடவத் தீரும்.

### மதனகாமேசுரப்பூ எண்ணெ

இரண்டு சேர் மதனகாமேசுரப்பூவை மலருமுனேயெடுத்து பத்துக்கு சலத்திற் போட்டு வைத்திருந்து மலர்ந்தபின்பு 4-பலம் நல்லெண்ணெய்விட்டு வேகவைத்திறக்கி எண்ணெயை பதமுண்டாய்ப் பிரித்து சீசாவி லடைத்துக்கொண்டு உடம்பிற் பூசிக்கொள்ள சுகந்தமும் வசியமாகும்.

### தாளிசபத்திரி வடகம்

தூதுவேளைவேர், கண்டங்கத்திரிவேர் வகைக்கு பலம்-1½, திரிகடுகு, கடுக்காய் வகைக்கு பலம்-1, தாளிசப்பத்திரி பலம்-2, நெல்லிமுள்ளி, தானறிக்காய், திப்பிலிமூலம் வகைக்கு பலம்-½, ஏலம், கோஷ்டம், சன்னலவங்கப்பட்டை, சாதிக்காய், கிராம்பு, சிறுநாகப்பூ, அதிமதுரம், வெட்பாலையரிசி, லவங்கப்பத்திரி வகைக்கு பலம்-¼, சாதிபத்திரி பலம் அரைக்கால் இவைகளை யிடித்து சூரணஞ்செய்து ஒரு பானையில் 2-படி ஆவின்பாலும் ½-படி பாசிப்பயறும் போட்டு வாயில் வேடுகட்டி சூரணத்தை வைத்து சட்டியால் மூடி பிட்டவித்திறக்கி 14-பலம் சர்க்கரையைக் கலந்து பிசைந்து கொட்டைப்பாக்குப் பிரமாணம் உண்டைசெய்து சாப்பிட்டுவர நீரடைப்பு கல்லடைப்பு ஏப்பம் வாயு சூசிவாயு சூலை காந்தல் வரட்சி தீரும்.

தாளிசப்பத்திரி விராகனிடை-16, சாதிக்காய் விராகனிடை-1, ஏலம், அதிமதுரம், அக்கிராகாரம், கிராம்பு, கோஷ்டம், திப்பிலி, சன்னலவங்கப்பட்டை, வால்மிளகு வகைக்கு விராகனிடை-4, சுக்கு ஓமம், மிளகு, சீரகம், லவங்கம் வகைக்கு விராகனிடை-2, இவைகளை சூரணித்து ஒரு பாண்டத்தில் குறுணி பாலைவிட்டு வாயில் வேடுகட்டி தோல் நீக்கின 4-பலம் வெள்ளைப்பூண்டின் பாதியைச் சிதைத்து வேட்டின்மேற் பரத்திச் சூரணத்தை வைத்து அதின்மேல் மற்ற பாதிப் பூண்டை வைத்து மூடி பிட்டவித்திறக்கி 2-பலம் சர்க்கரையை சேர்த்து மெழுகுபோலரைத்து கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர இரத்தம் விழுதல் இருமல் இளைப்பு அரோசியம் வாய் நீரூறல் உஷ்ணம் மெய்மயக்கம் வாயுமந்தம் புளித்தேப்பம் தீரும்.

### காந்தரச வடகம்

காந்தம், அரப்பொடி, இரதம், கெந்தி, பெருங்காயம், லிங்கம், இவைகளை ஓர் நிறையாய் கற்றாழைமடற் சோற்றில் 3-தரம் அரைத்து உலர்த்தி வைத்துக்கொண்டு தேனை, திரிகடுகு பொடியில் வேளை ஒன்றுக்கு ஒரு பணவிடை வீதம் மண்டலங்கொள்ள வாயு சன்னி குன்மம் பாண்டு சோகை வீக்கம் தீரும்.

### நெல்லி வடகம்

பசுங் நெல்லிவற்றலை எலுமிச்சம்பழச்சாற்றில் ஊறவைத்து உலர்த்தி அதற்கு நிகர் சீனியை பாலிற் கரைத்து பாகுசெய்து இந்துப்பு, கொடிவேலிவேர், சதுர்சாதம், அதிமதுரம், சீரகம் வகைக்கு பலம்-1, முந்திரிப்பழம், திப்பிலி, சிவதை வகைக்கு பலம்-4, இடித்து சூரணித்து தூவிக் கிண்டி நெய் பலம்-4, தேன் பலம்-8, கூட்டிவிட்டுப் பிசைந்து வைத்துக்கொண்டு வேளைக்கு கொட்டைப்பாக்கு பிரமாணஞ் சாப்பிட்டுவர பாண்டு காமாலை பித்தம் இருமல் ஈளை சோகை தாகம் தலைவலி அரோசியம் நீங்கும்.

### கெந்தக வடகம்

கெந்தகம், திரிகடுகு, சதுர்சாதம், வாய்விளங்கம், திரிபலை, சிறுநாகப்பூ வகைக்கு பலம்-5, குக்கில் பலம்-2½, சித்திரமூலப்பட்டை-1½, இவைகளைச் சேர்த்தரைத்து தானறிக்காய பிரமாணம் உண்டை செய்து உட்கொள்ள மேகரோகம் தீரும்.

### லவங்காதி வடகம்

லவங்கம், சிறுநாகப்பூ, விலாமிச்சவேர், திரிகடுகு வகைக்கு விராகனிடை-10, இவைகளை பொடித்து முன்போற பிட்டவித்து 120-விராகனிடை வெல்லஞ் சேர்த்து பிசைந்து வேளை ஒன்றுக்கு கொட்டைப்பாக்கு பிரமாணம் வெந்நீர்கொள்ள வாந்தி வயிற்று பொருமல் கழிச்சல் மார்புவலி அக்கினிமந்தம் தீரும்.

### மண்டூர வடகம்

மண்டூர செந்தூரம், லோக செந்தூரம், வெள்ளுள்ளி, செவியம்' சித்திரமூலம், சீரகம், கருஞ்சீரகம், ஆனைத்திப்பிலி, வாய்விளங்கம், இந்துப்பு, கோரக்கிழங்கு, திரிகடுகு, முத்தக்காசு, சதகுப்பை, நறுக்குமூலம், ஏலம் இவைகளை யிடித்து பொடிசெய்து குப்பைமேனி, சங்கு, நொச்சி, கையாந்தகரை, கீழ்க்காய் நெல்லி, பூலாசு, தழுதாழை இவைகளின் சாற்றால் வகைக்கு ஒரு நாளாட்டி நெல்லிக்காய் பிரமாணம் உண்டை செய்து வேளை ஒன்றுக்கு ஒருண்டைவீதங் கொள்ள காசம் க்ஷயம் வாயு விக்கல் குன்மம் வாந்தி பாண்டு சோகை காமாலை தீரும்.

திரிகடுகு, சடாமாஞ்சில், திரிபலை, சாதிக்காய், கருஞ்சீரகம், நற்சீரகம், இலந்தைவேர், மரமஞ்சள், சாதிபத்திரி, திப்பிலிமூலம், செவியம், முத்தக்காசு, அரத்தை, பொன்முசுட்டைவேர் இவைகளை ஓரெடையாய்ப் பொடித்து அதற்கு நிகர் மண்டூர செந்தூரம், திரிலோக செந்தூரம், அயச்செந்தூரம் கூட்டி கரிப்பான் சாற்றால் ஒருநாளாட்டி நெல்லிக்காய்போ லுண்டைசெய்து தேன், சர்க்கரை, மோரிற் கொள்ள பாண்டு காமாலை சோகை க்ஷயம் தீரும்.

ஒருபல மண்டூரத்தை 8-பல கோசலத்திற் பொடித்துப்போட்டு காய்ச்சி உலாத்தி அதற்குநிகர் தேவதாரம், மரமஞ்சள், சித்ரமூலம், வாய்விளங்கம்,முத்தக்காசு,திப்பிலிமூலம், திப்பிலி, மிளகு,இவைகளை ஓர்நிறையாய் சேர்த்து சூரணித்து வேளை ஒன்றுக்கு திரிகடிப்பிரமாணம் எருமைமோரிற்கொள்ள பாண்டுசோகை காமாலை தீரும்.

## ஏலாதி வடகம்

ஏலம், லவங்கப்பட்டை, முந்திரிப்பழம்,திப்பிலி வகைக்குபலம்-1, அதிமதுரம், சர்க்கரை, பேரீச்சம்பழம் வகைக்கு பலம்-1, இவைகளையிடித்து கழற்காய பிரமாணம் உண்டைசெய்து சாப்பிட்டுவர அக்கினிமந்தம் பித்தம் வயிற்றுவலி, மூலக்கொதிப்பினால் இரத்தஞ் சீதங்காணுதல் நீங்கும்.

## செவிய வடகம்

செவியம், இலுப்பைப்பூ, திப்பிலிமூலம், விலாமிச்சம்வேர்,சுக்கு, நிலவேம்பு, அதிமதுரம், நெய்தற்கிழங்கு, வெட்டிவேர், சந்தனம், சதுர்ச்சாதம், மிளகு, தாளிசப்பத்திரி, ஓர்நிறையாய் சூரணித்து அதற்குநிகர் வெல்லஞ்சேர்த்திடித்து பாக்களவு உண்டை செய்து சாப்பிட்டுவர வாயு விக்கல், வாந்தி, அக்கினிமந்தம் நெஞ்செரிவு கிராணி காமாலை சோகை வீக்கம் இருமல் தீரும்.

## சுக்கு வடகம்

சுக்குபலம்-6, தாளிசப்பத்திரி பலம்-5, செவியம் மிளகு வகைக்குப்பலம்-1, திப்பிலிபலம்-4, விலாமிச்சுவேர், சதுர்ச்சாதம் வகைக்கு பலம்-½, சூரணித்து முன்போலபாலிற பிட்டவித்து சாக்கரை பலம்-6, சேர்த்துப்பிசைந்து கொட்டைப்பாக்குப்பிரமாண முண்டைசெய்து சாப்பிட்டுவர சத்தி விக்கல் அரோசகம் வயூறல் வாயு அக்கினிமந்தம் பொருமல் ஈளை இருமல் திரிதோஷம் நீங்கித் தீபனமுண்டாகி தேகம் பலக்கும்.

## கடுக்காய் வடகம்

நூறுகடுக்காயை காடியில் மூன்றுதபா ஊறவைத்து இடித்துப்போட்டு உலர்த்திநறுக்கி விரைநீக்கி அதற்குநாலிலொன்றுகல்லுப்பு, கோரக்கிழங்கு, குருசாணி, ஓமம், சுக்கு, கொடிவேலிவேர் திப்பிலி, செவியம், திப்பிலிமூலம் வகைக்கு விராகனிடை-3, மிளகு, இந்துப்பு, ஓமம் வகைக்கு பலமரை இவைகளை யிடித்து தூள்செய்து அதில புளித்தமோர், எலுமிச்சம்பழச்சாறு, இஞ்சிசாறு வகைக்கு படி-1, தனித்தனியேவிட்டுப் பிசறியுலர்த்தி பொடித்துக்கொண்டு திரிகடிப்பிரமாணஞ் சாப்பிட்டுவர வாந்தி குன்மம் சுவாசகாசம் மூலங்கிராணி மூலகிராணி அரோசியம் பாண்டு வீக்கம வயிற்றுவலி சோகை முதலான ரோகங்கள் தீரும்.

## மேகாதி வடகம்

பத்துப்பலம் வெள்ளுள்ளியை மேற்றோலுரித்துக் 25-பலம் பசும்பாலிற்போட்டு தீபம்போலெரித்து வேகவைத்து 5-பலம் பசுநெய் விட்டுக் கிண்டி யெழுத்துப்பதத்திலிறக்கிச் சீனிபலம்-2½, கோதுமை மாவு பலம்-5, தூவிக்கிண்டி வேளை ஒன்றிற்கு கொட்டைப்பாக்களவு கொள்ள வெகு மூத்திரமாயிறங்கும் மேகநீரெல்லாந் தீரும்.

திரிபலை, பருத்திக்கொட்டைப்பருப்பு, புளியவிரைத்தோல், வெள்வேலம்பிசின், வெண்குன்றிப்பருப்பு, மஞ்சள், காந்தப்பற்பம் அப்பிரகச்செந்தூரம் வகைக்கு விராகனிடை-1, இவைகள் கண்டயிடைக்கு ஆவாரைவிதையின் பருப்புகூட்டி பொடித்து அத்திப்பாலில்விட்டு முக்கழஞ்சிடை யுண்டைசெய்து வேளை ஒன்றுக்கு ஒருண்டைவீதம் எருமைமோரிற் கொள்ள மேகநீர் இருபதும் நீங்கும்.

## லோகாதி வடகம்

முத்தக்காசு, சீந்தில், சுக்கு, திப்பிலி, வாய்விளங்கம், சித்திரமூலம் இதுகளை ஓர் நிறையாய் பொடித்து அதற்குநிகர் லோகசெந்தூரங்கூட்டி திரிகடித்தேனில் மத்தித்து உண்டுவரில் பாண்டு சோகை காமாலை தீரும்.

## சவுபாக்கிய கண்டி

கரிசாலை, பொடுதலை இவைகளின் சூரணம் வகைக்குப் *பலம்-8, திரிகடுகு, திரிபலை, அதிமதுரம், ஓமம், குரோசாணியோமம், தாளிசப்பத்திரி சிற்றரத்தை, தேசாவரம், ஏலம் வகைக்குப் பலம்-1, சாதிக்காய், சாதிப்பத்திரி, கிராம்பு, அதிவிடயம், கருஞ்சீரகம், நற்சீரகம், லவங்கபத்திரி, வாலமிளகு, மல்லி, வெந்தயம் வகைக்கு பலம்-½, இடித்து வடிகட்டின சூரணத்தையும் 4-படி பசும்பாலையுங் குழம்பாய்க் காய்ச்சி அதிற் சிறுகத்தூவிப் பிசைந்து ஒருசட்டியில் 3-படி பாலவிட்டு ஏடு கட்டி அதின்மேற் பிசைந்த மருந்தைவைத்துப் பிட்டவித்துத் தேனைவிட்டு மத்தித்துச் சுண்டைக்காயப் பிரமாணம் இஞ்சி, எலுமிச்சம் பழம், நாரத்தம்பழம், மாதுளம்பழம் இவைகளின் சாற்றிலும் தேனிலும் அல்லது சீனியிலும் வெந்நீரிலுங் கொள்ள சூசிதாகிருணி குன்மம் வாயு உப்பிசம் தாகம் அரோசியம் அக்கினிமாந்தங் கழிச்சல் தீரும்.

இரண்டுபடி பசும்பாலில் 2-பலச் சீனியைக்கரைத்துப் பாகு செய்கதில் 8-பலச்சுக்கை மேற்றோல்சீவி சிறுதுண்டாய்நறுக்கி அதில் செம்முள்ளி, செந்திறுய, முருக்கிறு, கரிசாலை, சிறுசெருப்படை, காத்தடி * இவைகளின் சாறு வகைக்கு படி-¼, சீனித்தனியே விட்டு வெயிலுலாத்தி யிடித்த சூரணத்துடன் தக்கோலம், வாலுளுவையரிசி, கூகைநீர், கரியபவளம், வாய்விளங்கம், தான்றி, நெல்லி, திப்பிலிமூலம் வகைக்கு பலம்-1, வெதுப்பிப்பொடித்த சூரணத்தையும்

அமுக்குரா, பொல்முசுட்டை, கண்டங்கத்திரி, நன்னாரி, வுத்திப்பனை வகைக்கு பலம்-2, பசும்பாலில் அவித்துலர்த்தி யிடித்த சூரணத்தை யுந் தூவிக்கிண்டிக் கிரிகடிப்பிரமாணங்கொள்ள கிறுணி பிரமியம் வாயு வாதபித்தம் மேகம் அக்கினிமந்தம் வாதசூலை அந்திரவாயு வாயூறல் கசப்புந் தீரும்.

இரண்டுபடி ஆவின்பாலில் அரைவீசை சீனியைக்கலந்து பாகு செய்து அதில் இஞ்சி, வாலுளுவையரிசி, ஓமம், வாயவிளங்கம், திப்பிலி, மிளகு, ஏலம், கரிசாலை வகைக்கு பலம்-1, சதகுப்பை பலம்-2, மலவி பலம்-3, சுக்கு பலம்-8, இவைகளை யிடித்துச் சூரணித்துத் தூவிக்கிண்டி கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர வாதபித்தம், வலி, குன்மம், காசம், சூசிகவாயு, சுரதோஷம் கிராணி தீரும்.

## எண்ணெய்ப் படலம் முற்றிற்று.

---

# கட்டு வகைப் படலம்

அதாவது ஒவ்வொரு மூலிகைகளாலும் புஷ்ப ரசாதிகளினாலும் பால் வகைகளாலும் செயநீர் போக்கிகளாலும் சுருக்கு தாக்குவது கட்டு வகைப் படலமெனப் பெயர் பெற்றது.

### கட்டு-100 ஆண்டு பிரயோகிக்கலாம்

### சாதிலிங்கக் கட்டு

அஞ்சுகோழிமுட்டை, வெள்ளைக்கருவில் வீரம், பச்சைக்கர்ப்பூரம் வெடியுப்புச்சுண்ணம் வகைக்கு விராகனிடை-1, பொடித்துப் போட்டுச் சீசாவிலடைத்து ஆறுநாள் சென்றபின்பு அதிலடைத்துவிருக்கின்ற லிங்கத்தை பத்துத்தரந் தோய்த்துக் காயப்போட்டு அப்பாலதில் தோய்த்து கருஊமத்திலையில் சுற்றலை ஒன்றுமுதல் 32-புடம் வரை புடந்தோறும் ஒவ்வொரு எருவாய் உயரியாக்கி 32-மட்ட மணல் மறைவில் போட்டெடுக்க உருகிக்கட்டும் அதை யனுபானங்களிற் கொடுக்க முயலகண்டன், குமரகண்டன், முசலவலிப்பு, குதிரைவலிப்பு, காக்கைவலிப்பு, புறவீச்சு, உள்வீச்சு, சன்னிதோஷம் வாலைகிறுக்கை, நெஞ்சுகுத்து, வாயுகுத்துந் தீரும்.

10-விராகனிடை லிங்கத்தை முலைப்பால், எலுமிச்சம்பழச்சாறு, மாவிலிங்கம்பழச்சாறு, ஐவிரலிச்சாறு, தேன் இவைகளின் வகைக்கு ஒருசாமம் சுருக்குக்கொடுத்து 5-விராகனிடை சூடத்தையும் 5-விராகனிடை சாம்பிராணியையும் மெழுகுபோலரைத்து 10-பங்குசெய்து ஒவ்வொருபங்காய்த் துணியிற்றடவி லிங்கத்தின் மேற்சுற்றித் தீயிற் கொளுத்தி கரியெல்லாஞ்சுரண்டிப்போட்டுத் தேனிலிட வாயுபோகும் கிரிகடுகிற சன்னிதோஷம், இஞ்சிச்சாற்றில் நெஞ்சடைப்பு, வாயு,

மூர்சசை, பேதி, வயிறறுபபொருமலதீரும கொடிவேலிக கியாழத்தில விஷபாகம வயிறறுவலிகுனமம சோகைசூலை பிததபாண்டுதீரும.

ஒருபலசசாதிலிஙகக கட்டியினபேரிற,குனறுமணி பருபபின பசையினால 1-விராகனிடை தஙகரேககை ஒட்டி அதினமேல ரோமத்தை அரைவிராகனமசுததி பிரியாமறகட்டி ஒரு அகிறசிட்டிகையில அதறகுககீழ்மேலும கெநதகம அரிதாரம வகைககு பலமறைவீதம பொடிததூளைபபோட்டு மேறசிட்டிமூடிச சீலைசெய்து காயவைதது அதை ஒருசட்டியில நாலுவிராகனிடைமணலைககொட்டி சாலாககினியா யெரிதது மணலமேல நெலலைபபோட்டால பொரியுமபக்குவததிலிறககி ஆறறி மேறகசடுககி சுததமாய் கழுவிபபோட்டு ஆவினபாலில ஒரு பணவிடைவீதமஉரைததுசாபபிட வீரியவிர்ததியுணடாகும மூலைப பாலிறகொடுகக மூலவாயு மூாசசைவாவு அககினிமநதம நீஙகும.

ஒருபலலிஙககககட்டிககு ஒருபடிசெமபாததமபூசசாற்றைசசுருக் கிட்டு அதினபேரில 1-விராகனிடை தஙகரேககை சுததி அபபால சககோலிமூலிகையை அரைததுவசஞசெய்து சீலைமண வலுவாய்செய் துககுட புடமபோடக கட்டும அதை அனுபானஙகளிலுரைததுக கொடுகக சுரதோஷம் நீஙகும தேகம பலககும.

மூனறு விராகனிடை லிஙகததை கரணடியிலவைதது அதறகு கீழுமேலும ஐநதுவிராகனிடை சீனததைபொடிததுபபோட்டு தீபாக் கினியாயெரிதது ஓயாமறபுரட்டிககொடுதது பினபு மாகாணிபடிகொடி களளிப்பாலும காற்படி செமபுததேனும சுருககுககொடுத்து இரு சிச்சாறறிலுரைததுககொடுகக சுரம சனனிதோஷம வாயு புறவீசசு குனமம நீஙகும.

ஒருபல சாதிலிஙகககட்டிககு எலுமிசசம்பழசசாறு,மூலைபபால், தைவேளைசசாறு, வெடியுபபு செயநீாவகைககு ஒருசாமம சுருககு கொடுதது 1-விராகனிடை தஙகரேககைசுததி அபபால,சாரம,சீனம, வெஙகாரம், வெடியுபபு வகைககுபலம-1, வெணகருஙகாலாட்டி கவ சஞசெயது காயவைதது குகையிலவைததுச சிலுபோட்டுச சீலை மணசெய்து இரணடுகூடை உமியைககொட்டி அதறகுமததியில தீப் போட்டெரிதது வெநதபினனெடுகக உருகி மணியாயிருக்கும.

10-விராகனிடை லிஙகக்கட்டிககு வெள்ளெருககன வேரைக குழிததயிலமிறககி சுருககுககொடுதது இருபது செஙகொட்டையை அரைதது கவசஞசெய்து அதினமேல எலுமிசசஙகாயப பிரமாணம வெணணையைவைததுச சட்டியிலிட்டுத தீயெரிதது நெருபபுபிடிதத வுடன இறககி ஆறவிட்டெடுககக கட்டும.

காசிக்குப்பியை கலவததிற பொடிததது வெடியுபபு, சீனக்கா ரம், அணடததோல, வெஙகாரம் இவைகளை ஓர நிறையாய் வாய்நீா லரைதது லிஙகததுககு கவசஞசெயது ஏழுசீலைமணசெய்து காயவை தது முனபோல் உமிப்புடம போட்டெடுகக கட்டும்.

லிங்கத்திடை, அயம், தாளகம், மனோசிலைகெந்தி இவைகளை ஓர் நிறையாய் எலுமிச்சம்பழச்சாற்றாலாவது கோழிமுட்டை வெள்ளைக் கருவாலாவது ஆட்டி அந்தரத்தக் கவசஞ்செய்து உமியில் முனைபோற் புடம்போடக் கட்டும்.

5-விராகனிடை லிங்கத்தை முலைப்பாலில் 5-நாள் ஊறவைத்து ரவியிலுலர்த்தி முட்டைகூட்டில் வைத்து கெந்தி விராகனிடை-4, தாரா விராகனிடை-2, சூடன் விராகனிடை-1, வீரம் பொடித்துமேலே கீழேமேலும் போட்டு மூடிச் சீலைமண் செய்து மணல்மேல் வைத்தெரிக்கக் கட்டும்.

ஒருபல லிங்கத்தை 1-படி எருக்கிலைச்சாற்றில் சுருக்குக்கொடுத்து அதற்கு பொரித்த வெண்காரத்தைச் சாற்றாலாட்டிக் கவசஞ்செய்துலர்த்தி ஓட்டிலவைத்து மூடி ஏழு சீலைமண் செய்து குக்குடபுடம் போடக் கட்டும்.

லிங்கத்திடை கட்டின தாளகத்தைக் கொடுத்து உருக்குப பொடித்து அந்த இடைக்கு கட்டின தாளகத்தை சேர்த்து முலைப்பால்விட்டு மைபோலரைத்து நிறுத்தி அந்த இடைலிங்கத்திற் கவசஞ்செய்து 7-சீலைமண்செய்து காயவைத்து 1-சாண் ஆழக்குழியில் உமிப்புடம் போடக் கட்டும். அனுபானங்களிட சன்னி சிலேஷ்ம வாதசுரம் தீரும்.

தாளகம், கெந்தகம், பொரிகாரம் மனோசிலை வகைக்கு விராகனிடை ¼, பொடித்து 2-பங்கு செய்து ஒரு கோழிமுட்டை தோலிற் பாதி வெள்ளைக்கருவிட்டு ஒரு பங்கு பொடியைப்போட்டு அதின்மேல் ஒரு விராகனிடை லிங்கத்தைவைத்து அதின்மேலும் பாதி பொடியைப் போட்டு பாதி வெள்ளைக்கருவிட்டு முட்டைத்தோலால் மூடிச் சீலை மண்செய்து மணல்மேல் வைத்து 4-சாம எரிக்கக் கட்டும்.

இரசமும் நாகமும் தொந்தித்து அதற்குநிகர் பொரிகாரம் கெந்தி சேர்த்து முலைப்பாலாலாட்டி லிங்கத்திற் கவசஞ்செய்து ரவிற் காயவைத்து அதின்மேல் சுண்ணாம்பும் உப்புஞ் சேர்த்து எலுமிச்சம் பழச் சாற்றாலரைத்துச் சீலையிற் தடவிக் கவசஞ்செய்து குக்குட புடமிடக் கட்டும். இந்தப்படி வீரத்தையுங் கட்டிக்கொள்ளலாம்.

லிங்கரச காப்பூரக்கட்டு

12-விராகனிடை கெந்தகத்தை உருக்கி அந்த இடைவீரம் லிங்கம் இரசகாப்பூரம் பொடித்துப்போட்டுக் கிண்டி ஈர குழலில் விட்டு ஆறி மாத்திரைசெய்து சன்னி சுரதோஷ முதலானவைகளுக்கு அனுபானங்களி லிடத் தீரும்.

ரசகர்ப்பூரக்கட்டு

ஒரு பலம் ரசகற்பூரத்தை முலைப்பாலில் 10-நாள் ஊறவைத்து உலர்த்தி அப்பால் வெள்ளுள்ளித் தயிலத்தை 3-சாமம் சுருக்குக்

கொடுத்து ஓட்டில் 2-பலம் வெடியுப்பை பொடித்து அதற்குக் கீழு மேலும் போட்டு 5-கோழி முட்டையை உடைத்துவிட்டு மூடி அடுப் பேற்றிச் சிறு தீயாயெரிக்க பொங்கியுருகி நெருப்புப்பற்றி கெட்டியா யிருக்கும். குளிர்ந்தபின்பு உப்பை நீக்கி யெடுத்து அனுபானங் களில் உரைத்து கொடுக்க சன்னிசுரம் நாவரட்சி மலக்கட்டு நீங்கும். விக்கக்கட்டுடனே சோத்துக் கொடுக்க வாதநோய் தீரும்.

4-விராகனிடை ரசகர்ப்பூரத்துக்கு முலைப்பால் பாலங்ணடை யிடித்துப் பிழிந்த சாறு, முசுமுசுக்கை சாறு இவைகளை வகைக்கு 2-சாமம் சுருக்கிடக் கட்டும்.

10-விராகனிடை ரசகர்ப்பூரத்துக்கு முலைப்பால், எலுமிச்சம் பழச்சாறு, வாழைப்பழச்சாறு, ஆதளம்பால் இவைகளை வகைக்கு ஒரு சாமம் சுருக்கிட்டு 5-விராகனிடை சாம்பிராணியை பொடித்து வடிகட்டி $\frac{1}{8}$-படி தேனில் கலந்து சுருக்கிட்டு 10-விராகனிடை சூட னிப் பொடித்து அதற்குக் கீழ்மேலும் வைத்துத் தீக்கொளுத்தவும். இந்தப்படி 10-தரம் கொளுத்தக் கட்டும்.

தாளகக்கட்டு

வெடியுப்பு, சீனம் வகைக்கு விராகனிடை-20, நவாச்சாரம், வெங்காரம் வகைக்கு விராகனிடை-$1\frac{1}{2}$, இவைகளைப் பொடித்து கரண்டியிற் போட்டு தீயில் வைத்து உருக்கிப் பொங்கும்போது அதில் சுத்திசெய்த 5-விராகனிடை தாளகக்கட்டியைப் போட்டு பிரட்டிக்கொடுத்து மீந்திருக்கிறதையும் அரைத்து புனுமேற் கவ சஞ்செய்து காயவைத்து அதன்மேற் சுண்ணாம்பு நீரும் அரைத்து துணியிற் பூசி 7-சீலை செய்து காடை புடமிட்டெடுத்து அனுபானங் களில் விட ஈளை காசம் எலிகடி விப்புருதி உளமாந்தை குளிர்சுரம் தீரும்.

கிராம்பு, சிற்றரத்தை ஓர் நிறையாய் வெதுப்பிப் பொடித்துத் தேனிற் குளகக்கட்டை யுரைத்துவிட்டு மத்தித்துக் கொடுக்கப் பழஞ்சுரந் தீரும். பத்தியமில்லை மேற்சொல்லிய பிரகாரம் வெள்ளை யையும் கெவுரியையுங் கட்டிக்கொள்ளலாம்.

ஒரு பலம் தாளகத்தை கற்சுண்ணாம்பில் வைத்து அமுரிவிட்டு 10-தரம் நீற்றிச் சுத்தசலம் விட்டுக் கழுவி அயசட்டியில் வைத்து ஒருபடி பூநீறை 4-படி அமுரியிற் கரைத்துவைத்து 3-ம் நாள் தெளி விறுத்து அதில் வெங்காரம், காரம், சூடன் வகைக்கு பலமாக முப் புச்சுண்ணம் கழஞ்சு-1, பொடித்துப்போட்டு 4-சாமம் சுருக்குக் கொடுக்க உருக்கறுக் கட்டும் அனுபானங்களில் சேத்மரோகம்- 96, சுரம் சன்னிதோஷந் தீரும்.

10-விராகனிடை தாளகக்கட்டிக்கு ஒரு படி சிவகரந்தைச் சாற் றில் 10-விராகனிடை துருசுச் செந்தூரத்தைக்கலந்து சுருக்குக்கொடு த்து அப்பால் நவாச்சாரம், சீனிக்காரம், சூடன் வெடியுப்பு, வெங்கா

ரம் வகைக்கு விராகனிடை 4-வீதங் கல்வத்திலிட்டு எருக்கம்பாலாலும் கள்ளிப்பாலாலும் குமரிச்சாற்றாலும் வகைக்கு ஒரு சாமம் தனித் தனியே ஆட்டி உலர்த்தி அப்பால் ஊமத்தஞ் சாற்றாலாட்டி ஷை தாளகக் கட்டிக்குக் கவசஞ்செய்து உலர்த்தி ஏழுசீலை மண்செய்து பத்தெருவிற் புடமிடக்கட்டும்.

பத்து விராகனிடை தாளகக்கட்டிக்குச் சிவகரந்தைச்சாறு கரிப்பான் சாறு வகைக்கு படி-', சுருக்கு கொடுத்துலர்த்தி அதை 5-எருவில் வெடியுப்பு அடங்கவறுத்து எலுமிச்சம்பழச் சாற்றி லரைத்து 3-புடம்போட்ட கரியுப்பு விராகனிடை-40, சிறுநீர்விட் டரைத்து கவசஞ்செய்து அதின்மேலில் ஒரு விரற் கனத்தில் கற் சுண்ணாம்புக் கவசஞ்செய்து காயவைத்து 5-சீலை மண்செய்து 15-எருவிற் புடம்போட உருகிக்கட்டும்.

## சாரக்கட்டு

குளத்திலுண்டாகி யிருக்கிற முற்றின 100-நடுக்காய் சிப்பியை உயிருடனெடுத்துப் பொடித்துப் பொரித்துப்போட்டு வைக்க நீர்றங் கும் இருப்புச் சட்டியில் அஞ்சாங் காச்சல், வெடியுப்பை போட்டு அடுப்பேற்றி மேற்படி நீரைச் சிறுகச் சிறுக விட்டுக் கிண்டிக் கொடுத் துக்கொண் டிருக்கத் தண்ணீர்போலாகும் அந்த பக்குவத்தி லிறக்கி யாற்றி ஒருபலச் சாரக்கட்டிக்கு கவசஞ்செய்து காயவைத்து நெருப் பில் கருகவாட்டி யுதிர்த்துப்போட்டு அப்பால் வெடியுப்புச், சுண்ணம், இந்துப்பு, வளையலுப்பு, கல்லுப்பு, வெண்காரம், துருசு, பற்பம், சிப் பச் சுண்ணம், அண்டச்சுண்ணம் வகைக்கு பலம்-¼, வீதம் வெள்ளைக் கருவில் மெழுகுபோலாட்டி கவசஞ்செய்து நன்றாய்க் காயவைத்து ஒருசட்டியில் அரைப்படி கற்சுண்ணத்தைக் கொட்டி அதின்மேல் ஒரு ஓலைச்சுருளை வைத்து அதற்கு அரைவாசி கருமணற்கொட்டி அதில் மேற்படி சாரத்தை வைத்து மறையும்படி மேலும் கருமணல்போட்டு ஒருசாமம் ஒருவிறகாலும் மறுசாமம் 2-விறகாலும், மூன்றாஞ் சாமம் 3-விறகாலும், நாலாஞ்சாமம் 4-விறகாலும் தீயெரித்து ஆறவிட் டெடுத்து அனுபானங்களிற் பணவிடை கொடுக்க குணமங்கட்டு நீங் கும் இந்தக் கட்டைச்சேர்த்து செயநீர்செய்தால் சரக்குகள் கட்டும் மெழுகாகும்.

## பாஷாணக் கட்டு

ஒருபடி பூநீரில் நாலுபடி அமுரி விட்டு கரைத்து மூன்றுநாள் தெளிவிறுத்து ஒருபல பாசாணக் கட்டியைத் தோளாந்திரங் கட்டி எரித்தெடுத்துக் கள்ளிச் சாற்றிலும் எருக்கம் பாலிலும் திருகுகள் ளிப்பாலிலும் அல்லது சதுரக்கள்ளிப்பாலிலும் வகைக்கு 4-சாமம் சுருக்கு கொடுத்து அயவிரலிச்சங்கை சுட்டசுண்ணாம்பைச் சாராயம் விட்டுப் பிசைந்து அதற்கு மத்தியில் ஷை சட்டியைவைத்துத் தேங் காய்ப் பிரமாணமுருட்டி ஒரு துணியில் முடித்து பானையில் வைத்து

அதற்குக் கீழும் மேலும் ஒரு படி வெள்ளைக் கற்பொடியைக் கொட்டிக் தீயாயெரிசத்துக் குணிசெய்தபின் ஆறவைசத்துக் கட்டியையெடுத்து ஒரே கெஜகாயபபிரமாணம் நத்தைதையைய ரைத்து ஒரு கலசலத்திற்போட்டு அதின்மேற் கட்டியை வைத்து மூடிச் சீலைமண் செய்து எரித்து மருந்து கருதுப்படியாய்ப் புடம்போடவும் இந்தப்படி 5-புடம்போட்டெடுத்து பணவிடை அனுபானங்களிலிட சுரமசன்னி தோஷம் முதலான அநேக கொடியரோகங்கள் தீரும்.

வெள்ளைக்காசுண்ணம் பூநீர் வகைக்கு படி-½, 4-படி தெளிநீரிற் கரைத்துத் தெளியவைத்து மூன்றுநாள் தெளிவை யிறுத்து அதில் 10-விராகனிடை பாசாணத்தைத் தோளாந்திரங்கட்டி எரித்தெடுத்து சீனம், வெடியுப்புச் சுண்ணம், நவாச்சாரம், வெங்காரம், கூடன் நீர் சிப்பிச்சதை இவைகளை யரைத்துக் கவசஞ்செய்து குறுணி உப்புக்குள்ளாவது சுண்ணாம்புக்குள்ளாவது வைத்தெரித்து 4-சாமம் சென்றபின்னெடுத்து இஞ்சிச்சாற்றில் பணவிடையுரைக்க சன்னி சுரம் சூலை பின்னெடுத்து இஞ்சிச்சாற்றில் பணவிடை யுரைக்க சுரம் சூலை தீரும்.

ஜலமஞ்சரி

கெந்தி, காந்தம், லோகம், வெங்காரம், சீனம், சங்குப்பொடி சலாசத்து, சாஸ்திரவேதி, கல்நார் வகைக்கு விராகனிடை-1, வெடியுப்பு பலம் இவைகளை மயனமாயாட்டிக் குகையிலிட்டு அனலில் வைத்து உருகினவுடன் ஆற்றியெடுத்து பணவிடைவீதம் இளநீர், பழச்சாறு, வெந்நீர், கரிப்பான் கியாழத்திலிட கவுசிநீராமை பாண்டு சோகை வீக்கம் தீரும்.

வெடியுப்புக் கட்டு

சிறுநீரில் பூநீரை கரைத்து அதின் அண்ட ஓட்டைப்போட்டுக் கொதிக்கவைத்துச் சுத்திசெய்க விராகனிடை-5, நொறுக்கி கரண்டியிற்போட்டு அதற்குக் கீழுமேலும் வெடிப்புசினம வகைக்கு விராகனிடை-5, வீதம் பொடிக்கத் தூளைப்போட்டு உலையில் வைத்து ஊதி உருகினவுடனெடுத்துக்கொண்டு கேசக்கூரறிந்து தேனிலாவது ஆவின் வெண்ணெயிலாவது ஒருபணவிடை உரைத்துக்கொடுக்க வாயு குன்மம் வயிற்றுவலி சூதகவாயு தீரும்.

லவணக் கட்டு

கரியுப்பு, வெடியுப்பு, இந்துப்பு, சவுட்டுப்பு நவாச்சாரம் வகைக்கு விராகனிடை-5, ஐவிரலிசசங்கு சுண்ணம் விராகன்-15, இவைகளைப் பொடித்துத் திருகுகள்ளி கட்டையை நறுக்கி சோற்றை யெடுத்து அதற்குள் அடைத்து அதின்மேல அந்தச்சோற்றால் மூடிச் சீலைமண் வலுவாய்ச் செய்து ஏழுப்புடம்போலக் கம்மியுருகி நிற்கும் அதை பணவிடை கருப்புக்கட்டியிற் கொடுக்க குன்மம் வாயு வயிற்று வலி முதலானவை நீங்கும்.

இந்துப்பு, கலுப்பு, பாறையுப்பு, சவுட்டுப்பு, வளையலுப்பு, மாவிலிங்கு, பிரண்டை இவைகளை ஓர் நிறையாய முருங்கைப்பூ, எருக்கம்பூ, வேலிப்பருத்தி இவைகளின் சாறுால வகைக்கொரு சாமமாட்டி பில்லைசெய்து நன்றாய் காயவைத்து முழுப்புடம்போட்ட போட்ட வலுத்துகக்கட்டும கறுத்திருந்தால அந்தச்சாறுகளி லேதினுலாவ கரைத்து புடம்போட்டு 2-பணயிடை வாயு நெஞ்சடைப்புகளுவெந்நீரிலும அஸ்தி சூன்மத்திற்கு பசுநெய்யிலாவது தேன் சுக்கிலாவது கொடுக்கக தீரும்.

கரியுப்பைத் தண்ணீரிற் கரைத்துத் தெளிவிறுத்துக் காய்ச்சியெடுத்து மேனி, தைவேளை, முருங்கை இவைகளி னிலைச்சாற்றை ஓரளவாய்விட்டு மெழுகுபோ லாட்டி காயவைத்து குக்குடமாக-3, புடம்போட்டு பணயிடை கருப்புகட்டில மத்தித்துக கொடுக்க சகல வாயுவுந் தீரும்.

வீரக்கட்டு

ஒரு விராகனிடை வீரத்துக்கு அமுரியிலைச்சாறுபடி-½, சுருக்கு கொடுத்து கட்டி 1-கரண்டியில பசுநெய்விட்டு காய்ச்சி கட்டியை எடுத்துககொண்டு அந்த நெய்யில பாங்கிபபட்டைச் சூரணத்தைப் பிசைந்து கண்டைககாயபபிரமாணம உண்டைசெய்து கருப்புக்கட்டியிற் பொதிந்து மூன்றுநாளாறுபோது உபபுப் புளி நீக்கிச்சாபபிட மேற சூலை கிரந்தி முதலான மேகரணங்கள் தீரும.

இந்துப்பு, கலுபபு, கரியுபபு, சீனம், சாரம் வகைககு பலம-1, வெடியுபபு பலம-3, வெண்மையாய் வறுத்த துருசு பலம-½, சூடன் பலம-¼, இவைகளைப பொடித்து 2-பஙகுசெயது 1-பங்கைத் திராவகமாக வடித்து அதை மறறொருபங்கில விட்டுப பிசறி கலசத்திலிட்டு திராவகம வடித்துச சீசாவில அடைத்துககொண்டு அந்த திராவகம் விட்டு கரியுபபை மயனமட்டி வழித்து குகைபிடித்து அந்த குகையிலாவது அப்பிரகக கட்டிலாவது சவவீர கட்டியை வைத்து அதை மணலமேல வைத்து தீயெரித்து வீரககட்டியில சூடேறினவுடன மேறபடி திராவகம 2-சாமமும துமபை, ஆடாதோடை, முருங்கைபபூ இவைகளின சாறறிலும மூலைபபாலிலும வகைக்கொருசாமஞ் சுருக்கு கொடுத்து அதை அனுபானங்களிலிட சகல கொடியரோகங்கள தீரும.

கட்டின வீரத்தை கெந்தியும அயமும் சமனாய் எலுமிச்சம் பழச்சாறறால மெழுகுபோ லாட்டி கவசஞ்செய்து அதறகுமேல் உபபை யரைத்து கவசஞ்செய்து காயவைத்து 1-சட்டியில் 2-விரற்கடை மணறபோட்டு அதின்மேல் வைத்து அதனமேலும் மணலைக் கொட்டி 2-சாமங் கமலாக்கினியாய்த் தீயெரித்து ஆற்றியெடுக்க செந்

தூரமா யிருக்கும் இதை சகல ரோகங்களுக்கும் அனுபானங்களிற் கொடுக்கத்தீரும். வாய் கட்டாது 10-திங்கள் ஆண்டு பிரயோகிக்கலாம்.

கட்டுவகைப் படலம் முற்றிற்று.

---

# மெழுகுவகைப் படலம்

அதாவது தேன் பனவெல்லம் எண்ணை நெய் சேர்த்தரைப்பதால் மெழுகு படலமெனப் பெயர் பெற்றது.

## லிங்க மெழுகு

குமரிச்சோற்றிற் கடுக்காய்த்தூள் போட்டுப் பிசைந்து வைத்து அதில் வருகிற நீரை 10-விராகனிடை லிங்கத்திற்கு ஒரு சாமஞ் சுருக்குக் கொடுத்து சீனிக்காரம், துருசு, வெங்காரம், பூநீர் வகைக்கு விராகனிடை-5, எருக்கம்பால்விட்டு மெழுகுபோ லரைத்து 3-பங்கிட்டு ஒருபங்கைக் கட்டிக்குப்பூசி காயவைத்து நன்றாய் காய்ந்தபின்பு மற்ற 2-பங்கையும் அதுபோற்பூசி காயவைத்து மண்ணையரைத்துத் துணியிற்பூசி 5-சீலைசெய்து குக்குட புடம்போட்டு எடுத்து கரண்டியில் வைத்து கொடிக்கள்ளிச்சாற்றால் ஒரு சாமஞ் சுருக்குக்கொடுத்து கட்டியில் ஊசியினுறை குத்திலிறங்கும் அந்த பதத்தில் கல்வத்திட்டு அரைக்க மெழுகாகும் அதைப்பணயிடை அனுபானங்களில்விட கிரந்தி குஷ்டம் கரப்பன் காசம் சன்னிசுரம் சூலை நீரோடுதல் புண் பேதி வாதம் ரணம் நீங்கும்.

## வீர மெழுகு

பரங்கிப்பட்டை, கொடிவேலிவேர், சிவன்வேம்பு, சமூலம், சேங்கொட்டை ஓர் நிறையா நறுக்கிப் பாண்டத்திட்டு குழித்தயிலம் பிறக சுத்திசெய்த சவ்வீரலிங்கம், ரசகற்பூரம் வகைக்கு விராகனிடை-3, ரசம் அரிதாரம், துருசு, பற்பம் இந்துப்பு வகைக்கு விராகனிடை-1, இவைகளை மயனமாய் பொடித்துக் கரண்டியிற்போட்டு ¼-படி தயிலம் விட்டு ஓயாமற் கிண்டிக்கொடுத்து வற்றினபின்பு தேன் படி அரைக்கால் விட்டுக் கிண்டி மெழுகுபதத்திற் கல்வத்திட்டு சாதிக்காய், கார்கோலரிசி, திரிகடுகு, கோஷ்டம், அரத்தை, தேசாவாரம், அக்கிருகாரம், சன்னிநாயகம், திப்பிலிமூலம், ஓமம், திப்பிலி, கொடிவேலிவேர்ப்பட்டை வகைக்கு விராகனிடை-1, பொடித்து வடிகட்டிச் சேர்த்து தேன்விட்டு 2-சாமம் மெழுகுபோலாட்டி தந்தசிமிழிலடைத்துக்கொண்டு சுண்டைக்காய்ப்பிரமாணங் கருப்புகட்டியிற் பொதிந்து 7-வேளை கொடுக்க நெஞ்சடைப்பு மாருகுத்து விப்புருதி வலிப்புகள் வயிற்றுவலி முகவாதசன்னி சூலை பதினெட்டு கரப்பான் உதிரத்

திரட்சி சேகக்கடுப்பு சூதகவாயு மந்தாரகாசம் சன்னிதோஷம் கை காலில விழும கறுப்பு வெள்ளை சொறி சிரங்கு படர்தாமரை குஷ்டம் மேகரணம கிரந்தி அரையாப்பு மேகப்புற்று துனமாங்கிஷ அடைப்பு தீரும. பத்தியம புளிப்புகை தள்ளவும் கொஞசம் எயிறு கட்டும்.

### ரசமெழுகு

ஒரு பலம் கெந்தகத்தில ஆவினவெண்ணெயை போட்டு உருக்கி 3-தபா மிளகு, தக்காளிச சாற்றிலும 2-தபா வேலிப்பருத்திச சாற்றிலும காய்ச்சிக்கெடுத்து அதையும 4-சேங்கொட்டையையும வெட்டி ⅛-படி விளக்கெண்ணெயிற போட்டு காய்ச்சி ஒரு சொட்டு கீழே விட்டுப்பார்க்க கெந்தகதிற மிலலாம விருந்தால அந்தப் பதத்தி லிறக்கி வைத்துக்கொண்டு ஒரு விராகனிடை ரசத்தில விட்டு மத்தித்து வேளைக்கு ¼-பணவிடை வீதஞ் சர்க்கரையிற கலந்துண்ண மேகம்-21, சூலை கிரந்தி அரிசிரங்கு வெட்டை தீரும.

கெந்தகம விராகனிடை-௫, ஆவின வெண்ணெ பலம்-2, சேர்த்து மெழுகுபோலாட்டித்த துணியிலூட்டித்த திரித்து கதிரிற கோர்த்துத் தீயிற கொளுத்திச சொட்டுந்தயில மிறக்கி கலவத்திலிட்டு இரசம விராகனிடை-4, சேர்த்து மெழுகுபோலரைத்து வைத்துக்கொண்டு ஒரு பணவிடை வீதம மூனறுநாளாறுபோது நிருப்புக்கட்டியிற கொடுக்க வாதசூலை தீரும.

சங்கங்குப்பிச சாற்றிற் கொடுக்க கிரந்தி அரையாப்பு பவுத்திரம் தீரும. சிறுசெருப்படைச்சாற்றிற் கொடுக்க சிரங்கு சொறி தீரும்.

### லிங்கரசகாப்பூர மெழுகு

இரசகர்ப்பூரம விராகனிடை-2, லிங்கம விராகனிடை-1, முலைப்பால், எலுமிச்சம்பழச்சாறு, தேன இவைகளில் வகைக்கு ஒரு சாம மாட்டிக் கரண்டியில வழித்துப்போட்டு மேற்படி சாறு கொஞசம் விட்டுத தீபமபோலெரிக்க உருகி மெழுகாகும பணவிடை வீதங் கருப்பு கட்டியிற கொடுக்க வயிறறுவலி சூதகத்திரட்சி தீரும. திரிகடுகு பொடியிற கொடுக்க வாயு தீரும.

### பாஷாண மெழுகு

.ஒருபடி பூநீரை 4-படி சிறுநீரிற கரைத்து ஒரு பல பாஷாணத்தைத் தோளாந்திரங் கட்டி எரித்து அப்பால ஒருபடி முந்திரிச சாராயம் சுருக்கு கொடுத்து மெழுகாகுமவரை பிராயமபட்டைத் தயிலத்தைச் சுருக்கு கொடுத்து பணவிடை அனுபானங்களிற் கொடுக்க சுரம் சன்னிதோஷம நீங்கும.

## மெழுகுவகைப் படலம் முற்றிற்று.

# செந்தூரப் படலம்

அதாவது பழரசம் மூலிரசம விட்டு 50-புடம் போடுவதாம் செந்தூரப படலமெனப் பெயர் பெற்றது.

500-ஆண்டு பிரயோகிககலாம் அயச்செந்தூரம

அரப்பொடியை பழச்சாற்றில 3-நாள் ஊறவைததுப் பிசைந்து கழுவிப்போட்டு அப்பால காடியில 3-நாளூறவைதது கழுவிச சுததி செயது காடடாமணககமபாலில 3-நாள ஊறவைதது ரவியுலாததிக கல்வததிடடு ஷை பாலால 4-சாமம அரைதது வில்லை தட்டி காய வைதது ஓட்டிவிட்டு சீலைமண செயது கெசபுடம போடவும் இநதப் படி ஷை பாலில் 11-புடமும் மருதமபட்டை, நாவறபட்டை, கற்றாழை, சமூலம் இவைகளை ஓர் நிறையா யிடிததுச சாறுவாஙகி 25-நாள ஊறவைதது அரைதது 94-புடமும பொறறலைக கரிபபானிலை யுஞ சீநதிற்றண்டும ஓர்நிறையா யிடிததுப் பிழிநத ரசததில 25-புடமும போட்டெடுதது வாத தேகிக்குத தேனிலும பித்த தேகிககு வாழைப்பழததிலும நெய்யிலும அரததையிலும பாலிலுங்கொள்ள சோகை விஷபாக வீக்கம் குடலவாதம் தேக வெளுப்பு நயனரோகம 94-ம நீஙகும். தேகம பொன்போலாகும் ஒளியுண்டாகும அதிக பல முண்டாகும உதிரநத ரோமஙகள முளைககும் நரை மாறும மேற சொல்லியதை திரிகடுகிற் சொனன பெருவயிறு பககவாயு நீங்கும. வேலிச்சாற்றிற கொள்ள குனமம சததிகாசரோகங் தீரும.

முனபோற் சுததிசெய்த அரப்பொடி பலம சுததிசெய்த கெநதி பலம்-1 சிஙகி முபபுக்கழஞ்சு-1, இவைகளைப பொறறலைககரிபபான சாற்றிலும எலுமிச்சமபழச சாறறிலும் வகைககு 4-சாம மரைதது வில்லை தட்டி காயவைதது ஓட்டில வைதது மேலோடு மூடிச் சீலைமண செய்து முபபத்தெருவிற புடம்போட்டெடுதது அபபால ஷை இலைசசாறறில 3-புடமபோட்டு அனுபானஙகளிற கொடுகக பாணடு பிததம மெயமயக்கம் வாநதி வாயு தீரும. இஞசி சூரணததில் பிதத வாயு அரோசியம அனனததுவேஷந் தீரும.

முன்போற் சுத்திசெய்த 4-பலம் அரப்பொடியை நாவற்பட்டைச்சாற்றுல் ஒருநாளாட்டி வில்லை தட்டிக் காயவைதது கெசபுடம போடவும் இந்தப்படி பொறறலைககரிப்பான சாற்றிலும கவுதும்பை, சாறறிலும் வகைக்கு ஒரு புடமபோட்டு எரிதது திரிகடுகு, நறசீரகம் ஓர் நிறையாய் வெதுப்பிப் பொடிதது திரிகடிச் சூரணததில் பணவிடை செநதூரம வைத்து தூல தேகிக்கு தேனில மததிததும சுக தேகிககு ஆவினெய்யில் மததிததும கொடுக்க விஷபாகந் தவரைகயொழததில் தேன்விட்டுப் பணவிடை கொடுக்க சோகை தீரும, இதுகளெலலாம இச்சாபததியம,

சாதிக்காய், சாதிப்பத்திரி, கிராம்பு இவைகளைப் பொடித்து ஒரு சாசிடைப் பொடியில் பணவிடை செந்தூரம் வைத்துத் தேனில் மத்தித்துக் கொடுக்க மேகம் தீரும்.

சுத்திசெய்த அரப்பொடி பலம்-1½, சுத்திசெய்த கெந்தகம் பலம் 3½, இவைகளை கலவத்திலிட்டு கரசலாங்கண்ணிச் சாற்றில் அரைத்து வெளியில் வைத்து அந்த தெளிவு நீரால் ஏழுநாள் ரவியில் காயவைத்து உதிர்ந்து ஒரு சட்டியிற்போட்டு மேற்சட்டி மூடிச் சீலைசெய்து இரண்டு சாமம் எரிக்க செந்தூரமாகும் அதை அரிசியெடை நெய்யிற்கொள்ள பாண்டு சோகை காமாலையும் பச்சரிசி கழுநீரிற் கிருணியும் தேன் அல்லது வெட்பாலை யரிசியும் சீரகமும் கியாழஞ்செய்து அதிற்கொள்ள சூலையும் பாலிற்கொள்ள மேகம் வெட்டை சிறங்கு புண்புரையுந் தீரும்.

சுத்திசெய்த அரப்பொடியை நாவற்பட்டைச் சாற்றில் நாலுசாமமாட்டி பில்லைதட்டி காயவைத்து கற்றாழஞ்சாறு கைபிடிக்குள் பெருங்குறுணிய ஒரு பானையிற்கொட்டி அதின்மேல் பில்லையைவைத்து மேலும் மந்தத்தூளைக்கொட்டி அதின்மேற் சட்டியைமூடி ஏழு சீலைமண் செய்து 12-சாமமெரித்து ஆறின இதற்கு முந்தின பிரயோகத்திற் சொல்லியபடி அனுபானத்தில் வியாதிகளுக்கு உபயோகிக்கவும்.

முன்போற் சுத்திசெய்த அரப்பொடி பலம்-5, லிங்கம் பலம்-2, சூதம், கெந்தி, பொரிகாரம் வகைக்கு பலம்-1, தங்கம்-1, இவைகளை பொடித்து எலுமிச்சம்பழச் சாற்றிலும் குமரிச்சாற்றிலும் வகைக்கு 2-சாமமும், நாவற்பட்டைச் சாற்றில் 3-சாமமும், முருக்கம்பூச்சாற்றில் 4 சாமமும், புளித்த மாதுளம்பழச்சாற்றில் 1-சாமமும் அரைத்துப் பில்லைதட்டி காயவைத்து கற்றாழஞ்சோற்றை நாலுவிரல் கனத்தில் ஒரு சட்டியிற்போட்டு அதின்மேல் நாவற்பட்டை யிடித்தத்தூளை நாலுவிரற்கடை பரத்தி அதின்மேல் மேற்படி பில்லையை வைத்து மேலுமதுபோலவே நாவற்பட்டைத் தூளும் கற்றாழஞ்சோறும் போட்டு அதின்மேல் சட்டியைமூடி ஏழுசீலைமண்செய்து அடுப்பேற்றி தீபாக்கினி கமலாக்கினி கடாக்கினியாக வகைக்கு எட்டுசாமமெரித்து ஆறின எடுத்துக் கலவத்திலிட்டு குமரி முருக்கம்பூ நாவற்பட்டை இவைகளின் சாற்றால் வகைக்கொரு சாமமாட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டு ஏழுசீலைமண்செய்து முழங்கால் பள்ளத்தில் புடம்போட்டு எடுத்துப் பணவிடை வீதம் திரிகடிச் சூரணத்தில் 20, நாட்கொள்ள அஷ்டகாசம் மந்தாரகாசம் சுவாசகாசம் பாண்டுதீரும்.

சுத்திசெய்த அயம் காந்தசெந்தூரம் வகைக்கு பலம்-1, சாதிலிங்கம் கெந்தகம் வகைக்கு பலம் 2, வெண்காரம் இரசம் வகைக்கு பலம்-½, முப்பு கழஞ்சு-2, எலுமிச்சம்பழச் சாற்றில் நாலுசாமம் பொற்றலை கரிப்பான் சாற்றில் நாலு ஜாமம் அரைத்து பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து முப்பது எருவிற்புடமிட செந

தூரமாகும அதை யனுபானததிறகொளள பாணடு ஆறும பித்த
நாறபதும வாயுவாதம அககினிமநதம தீரும. தாதுபுஷ்டிககும தேக
வெளுபபு நீஙகும தேனிற்கொளள பாணடு சூலை கொபபநோய்
வாநதி பொருமல ஊஷ்ணவாயு சிலேதமம தலைமயககம வாயூரல
பிததம நீஙகும.

அயம, காநதம, இரதம, கெநதகம ஓா நிறையாயக் குமரிச சாற
றுல ஒரு நாளாட்டி பிலலைதடடி காயவைதது ஓட்டிவிடடுச சீலைமண
செயது சேவற்புடம போட்டுத திரிகடுகுச சூரணததில தேனவிட்டு
மததிதது பணவிடை செநதூரம வைததுணண வாயு தீரும வெள்
ளுளளி தயிலததில சனனியும நொசசிசசாறறில வாதம பெருங்
காயததில க்ஷயம் நீஙகும.

சுததிசெய்த காநதம, அாப்பொடி, சூதம, கெநதி, சாதிலிங்கம்
வகைககுப் பலம்-1, கறறுழமபாலில் ஒரு நாளாட்டி பிலலைசெய்து
காயவைதது ஒரு சட்டியில வைதது மேறசட்டி மூடி ஏழுசீலைமண
செயது காடாககினியாக நாலுசாமமெரித்து பணவிடை இஞசிசசாற
றிறகொளள சோகை தீரும. சிநதாதி லேகியததிற பாணடும மேக
மூந தீரும. மற்ற அனுபானஙகளிலிட வெடடை நீரிழிவு தாகம
வாயு க்ஷயம் அஸதிவெட்டை தீரும.

சுததிசெய்த அயம காநத கெநதகம் வகைககு பலம-1, பூநீர்
சுண்ணம் கழஞசு-1, எலுமிச்சம் பழசசாறறுல நாலுசாமம ஆட்டி
பில்லைத தட்டிக காயவைதது ஓடடிவிடடு சீலைமண்செய்து ஒரு முழ
குழிக்குள் அனபதெருவிற புடமபோட்டெடுததது சாதிககாய, சாதி
பததிரி, அதிமதுரம், சீரகம, குறுசாணி, ஓமம, வாய்விளஙகம,
நறுக்கு மூலம், அதிவிடையம, காயம, சுககு, திப்பிலி, மிளகு, அபினை,
கோஷ்டம வகைககு பலம-1, வெதுபபுபொடிதது நாலு பலக கரும
புககட்டி சேர்ததிடிததுத தேனவிடடுப பிசைநது வேளை ஒனறுககு
ஒரு சுணடககாய்ப பிரமாணததில செநதூரம குனறியிடை வைத
துணண ஆறுவகைக கிராணியும வாயுவும மறற அனுபானஙகளிற
பாண்டு சோகை காமாலையுந தீரும.

மணடூரச் செந்தூரம்

நாட்சென்ற நாலுபல மணடூரததை யிடிததது வெள்ளாட்டு நீரிற
குறுணிவிட்டு மூனறுநாளூறவைதது வறறககாசசி அபபால ஆவினீ
ரில பததுதபா சாசசி தேயததுக கழுவிப்போடடு கறறுழஞ சாற்
றில எருநாட்டி பில்லைசெய்து காயவைதது ஒட்டிலிட்டுச சீலைசெய்து
கெசபுடம போடவும இந்தபபடி மேறபடி சாறறில புடமபதது நீா
முள்ளிககரிப்பான, வீழி, வேலிப்பருததி, மாதுளமபழ மிவைகளின
சாறறில வகைக்கு புடமபததுப்போட்டு பணவிடை கரிப்பான சாற்
றில வகைககு புடம்பததுப்போட்டு பணவிடை கரிப்பான சாறறிற
கொளள மகோதரம், விஷநீர்ககோவை, கெண்டை, பாண்டு,

விஷபாகம், சோகை, சூலை, பெருவயிறு குன்மம், தேகவீக்கம், நீர்க்கடுப்பு, தாகம், வாதம், கிறுணி, குடலவாதம் தீரும்.

முன்போற் சுத்திசெய்த மண்டூரம பலம்-1, கெந்திசூதம், கெவுரி, வெடியுப்பு, சூடன், சாரம், சீனம், தாளகம் வகைக்கு பலம்-1, இவைகளை எருக்கம்பாலில ஆறுசாமமும் பழச்சாற்றிலிரண்டுசாமமுமாட்டி பில்லைத தட்டி காயவைத்து குக்குட புடம்போடவும் இந்தப்படி செந்தூரம ஆகுவரை புடம்போட்டெடுத்து அனுபானத்திற் கொடுக்க பாண்டு வகையெல்லாந் தீரும்.

முன்போற் சுத்திசெய்த மண்டூரத்திடைக்குப் பத்திலொன்று கெந்தி, சூதம், லிங்கம், முப்பு, வெங்காரங்கூட்டி, எலுமிச்சம்பழம், கரிப்பான், செருப்படை, நெட்டை இவைகளின் சாற்றில் வகைக்கு புடம்-10, அரசம்பட்டைசாற்றிற புடம்-5, முன்போற போட்டெடுத்து திரிகடுகு தேனில இரண்டுபண யிடையத்துண்ண விஷபாண்டு, காமாலை, பாண்டு, பித்தம், சிலேத்மம, தேகவெளுப்பு மாறும்.

சுத்திசெய்த அயப்பொடிகாந்தம மண்டூரம் வகைக்கு பலம்-1, கவுதும்பை கரிப்பான் வெற்றிலை இவைகளின் சாற்றில வகைக்கு நாலுசாமம தனித்தனியே ஆட்டிக்கெஜபுடமாய் ஐந்துபுடம போட்டு அனுபானங்களிலிட முந்தின பிரயோகத்திற் சொல்லியபடி வியாதிகளனைத்துந் தீரும்.

சுத்திசெய்த அயப்பொடிகாந்தம் மண்டூரம் வகைக்கு பலம்-3, எருக்கம்பாலால் 1-சாமமாட்டி வில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டுச சீலைசெய்து குழிவெட்டிக கெசபுடம்போட்டு அப்பால மேற்படி பாலிலும் கையாந்தகரை, வீழிசீறுபீளை, சிறுகீரை பொன்னாங்காணி, செந்நாயுருவி, நீர்முள்ளி, கற்றாழை இவைகளின சாற்றிலும உசிலம்பட்டைக கியாழத்திலும வகைக்குப்புடம 10-போட்டு திரிகடுகு சூரணத்திலசெந்தூரம பணயிடைவைத்துக தேன்விட்டு மத்தித்து கொடுக்கப் பெருவயிறு, காமாலை, பாண்டு, சோகை, மகோதரம், கவுசி, கைகால்கடுப்பு, வாதசூலை, மேகவெட்டை, நீர்க்கடுப்பு, சன்னி சீதளம், மந்தாரசன்னி, அண்டவாதம, க்ஷயரோகந் தீரும்.

## உருக்கு செந்தூரம்

கோசலமும் வெள்ளாட்டுநீரும ஒன்றுய்க்கலந்து அதில பத்து உருக்குளியைப் பழுக்கக காய்ச்சித்தோய்க்க அதில் தகடா யுதிரும அதையெடுத்து பொற்றலைக்கரிப்பான்சாற்று லொருநாளாட்டி பில்லை செய்து காயவைத்து அதற்கு மேற்படியிலையை யரைத்து கவசஞ் செய்து காயவைத்து ஓட்டிலிட்டு மேலோடுமூடிச சீலைமண்செய்து கெசபுடம போட்டெடுத்து இந்தப்படி அந்தராத்தாமரையின் சாற்றி லொருபுடமும கற்றாழஞ்சாற்றி லொருபுடமும போட்டெடுக்கச் செந்தூரமாகும் திரிபலைத்தூளும் வெல்லமுங்கூட்டிப் பணயிடைக்

செந்தூரம் வைத்து தூலதேகிக்குத் தேனிலுஞ் சுஸ்ததேகிக்கு ஆவின்நெய்யிலும் மத்தித்துக்கொடுக்க தேகம் பலக்கும்.

### திரிலோக செந்தூரம்

சுத்திசெய்த அயம், காந்தம், அப்பிரகம் வகைக்குப் பலம்-1, கெந்தகம்பலம்-3, ரசம்பலம்-1½, பூநீரகழஞ்சு-3, இவைகளைக் கல்வத்திலிட்டு பொற்றலைக்கரிப்பான் சிறுசெருப்படை குமரி இவைகளின் சாற்றால் வகைக்கு நாலுசாமமாட்டி வில்லைசெய்து காயப்போட்டு நூறு எருவில் புடம்போட்டு வீங்கப் பலமரை கூட்டிக் குமரிச்சாற்றில்-4, சாமமாட்டி வில்லைதட்டிக் காயவைத்து மூப்பதெருவிற புடம் போட செந்தூரமாகும் வைத்து நெய்யில் மத்தித்துக்கொள்ள மேகநீர், பாண்டு, பித்தம், பிரமேகவாயு, உசரூடு, இருமலநீங்கும் தேகங் குளிரும்.

சுத்திசெய்த அயம் உருக்கு கிட்டம் வகைக்குப்பலம்-1, நாவற் பட்டைச்சாற்றில் 1-சாமமாட்டி வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டில் வைத்துச் சீலை மண்செய்து கெசபுடம்போடவும் இந்தப்படி 5-புடம் போட்டு சிற்றுமணக்கிலையிற் பொதிந்து நெற்பாண்டத்துக்குள் 20-நாள்வைத்து பணவிடை அனுபானத்திற்கொள்ள பாண்டு, சோகை, காமாலை, பெருவயிறு, மலகாழிச்சல், விஷநீரகசோவை, வாய்நீரூறல், வாய்க்கசப்பு, வாந்தி, இருமல், இளைப்பு, வாயு, பொருமல் தீரும்.

### பஞ்சலோக செந்தூரம்

தங்கம்,வெள்ளி,செம்பு,காந்தம் இரும்பு, இவைகளை ஓர் நிறையாய் சுத்திசெய்து அதிற்கிரட்டி கெந்தகம், சூதமரை, வீரங்கால், கூட்டி மூப்புச்சுண்ணம் கழஞ்சு-1, எலுமிச்சம்பழச் சாற்றிலும் கரிசாலைச்சாற்றிலும் வகைக்குநாலுசாமமாட்டி முழுப்புடத்திற் போடச் செந்தூரமாகும் அதிற்பணவிடை திரிகடிச சூரணத்தில் வைத்து தேனவிட்டு மத்தித்து மண்டலங்கொள்ள வாயு என்பதும் பித்தம் மூலம் சிலேத்மம் நீங்கும்.

### அப்பிரக செந்தூரம்

ஆவிநீரும் வெள்ளாட்டுநீரும் ஒன்றாயக்கலந்து அதில் கிஷ்ண அப்பிரகத்தை கொல்லனுலையில் பழுக்கக் காய்ச்சித் தோய்த்து உரலிலிட்டுக் கட்டப்பாரையால் இடித்து நெல்லுடன் கலந்து அவித்து கம்பளியிற்கட்டிக் காடிறப்பிசைந்து மறுநாள் தெளிவையாயிறுத்து அடியிலஉறைந்திருக்கும் அப்பிரகநவநீதத்தை ரவியிலுலர்த்திபலம்-10-ல் கோதிபலம்-1, கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றால் நாலுசாமமாட்டி வில்லைசாய்வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து மூப்பதெருவிற புடம்போடவும் புடந்தோறும் கெந்திசேர்த்து எலுமிச்சம்பழம், கரிசாலை, செருப்படை, பொடுதலை, முருங்கப்பூ, பொற்றலைக்கரிப்பான் சிறுசெருப்படை இவைகளின் சாற்றில் வகைக்குப்

துப்போட்டச் செந்தூரம் அருந்தபோலாகும் அனுபானங்களி லிட க்ஷயம் ஈளை இருமல் முதலான சிலேத்தும ரோகம் தொண்ணூற்றாறும் அமிர்தசஞ்சீவிச் சூரணத்திற் கொடுக்க மேகநீரிழிவு பிரமியம் எலும்புருக்கி உட்சூடு உள்ளெரிவு நீங்கும் விந்தூறும் புஷ்டியாகும் கண் குளிரும் தேகம் மினுக்கும்.

இரண்டுபல அப்பிரக நவநீதத்திற்குக் கெந்தி, தங்கம் வகைக்கு விராகனிடை ½-வீதம் புடந்தாருஞ் சேர்த்து சிறுசெருப்படைச் சாற்றால் 4-சாமமாட்டி ரவியிலுலர்த்தி 30-எருவில் 30-புடம்போடச் செந்தூரமாகும். அந்தச் செந்தூரம் குங்குமப்பூ, கோரோசனை, பச்சைக்கர்ப்பூரம், நத்தைச்சூரிவிரை, கூகைநீர் வகைக்கு விராகனிடை-5, புநுகு, அபின் வகைக்கு விராகனிடை-1½, இவைகளைச் செவ்விளநீராலும் கரும்புச்சாற்றாலும் மாதுளம்பழச்சாற்றாலும் வகைக்கு ஒரு சாமமாட்டி குன்றிப்பாலுணடைசெய்து காலையிலும் மாலையிலும் ஒவ்வோருண்டைவீதம் ஆவின்பாலி லரைத்துச் சாப்பிட்டுவர நீரிழிவு பிரமேகம் தீரும்.

வீரியவிர்த்தியும் தேககாந்தியுமுண்டாகும் சாதிக்காய்த் தயிலமும் கச்சகசா தயிலமும் ஓர்நிறையாய்க் கலந்து ½-விராகனிடை தயிலத்திற் செந்தூரம் பணவிடை வைத்து மாலையிலுண்டு இரவில் பாலும் அன்னமுஞ் சாப்பிட்டுப் புணர்ந்தால் விந்து கட்டும்.

அப்பிரக நவநீதம் பலம்-10, முள்ளிக்கிழங்குச் சாற்றிலும் 4-சாமமாட்டி வில்லைசெய்து காயவைத்து கெசபுடம்போடவும் இப்படியே சாற்றிலும் ஆல், அரசு, நாவல், அத்தி இவைகளின் பட்டைகளை ஓர்நிறையக இடித்துக் கியாழஞ்செய்து அதிலும் கொடிவேலிக் கியாழத்திலும் எலுமிச்சம்பழம் கவுதும்பை, காந்தை, சிறுசெருப்படை, பொற்றலைக்கரிப்பான், முருக்கம்பூ, குமட்டி மாதுளம்பழம், புளிப்பு மாதுளம்பழம் இவைகளின் சாற்றிலும் வகைக்குப் புடம்-10, போட்டெடுத்து அனுபானங்களிலிட க்ஷயம்-16, மேகம்-21, இருச்சனம் பிரமேகம் மேகவாரி கிராணி சன்னி அஸ்திசுரம் அஸ்திவெட்டை உடல்வாக்ஷி கைகாலெரிவு ரத்தல் நீங்கும். ஆவின்பாலிற் கொள்ளத் தாது கட்டும்.

அப்பிரகநவநீதத்தை எருக்கம்பாலில் 7-நாளூறவைத்து நாலு சாமமாட்டி வில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டுச்சீலைசெய்து கெசபுடம்போட்டு பின்பு முள்ளங்கி கிழங்கு, செங்குமரி, நாயுருவி, கொழிஞ்சி, இஞ்சி, கருமட்கிழங்கு, கரணைக்கிழங்கு, கருவாழை, பொன்னாங்காணி, சாரணை, மணத்தக்காளி, கறிப்பிரண்டை, நீர்முள்ளி, கோட்டாங்காந்தை, திருநீற்றுப்பச்சை, கடுக்காய், பொற்றலைக்கரிப்பான் இவைகளின் சாற்றிலும் ஆலவிழுது கியாழத்திலும் வகைக்கு மூன்றுபுடம்போட்டு பணவிடை யனுபானங்களி லிட தாதுகட்டும் நாம்புகள் முறுக்கேறும் தேகம் பலக்கும் பத்தியமில்லை.

அப்பிரகநவநீதம் பலம்-4, கோவைப்பிலைச்சாற்றில் 4-சாமமாட்டி 50-எருவிற் புடம்போட்டு கெந்தகம், சூதபவளம், காந்தம் வகைக்குப் பலம்-2, சோத்துக்கரிப்பான் சாற்றிலும் உசிலம்பட்டை — ஆவாரம்பட்டை ஆலவிழுது இவைகளின் கியாழத்திலும் குமரிச்சாற்றிலும் பொற்றலைக்கரிப்பான் சாற்றிலும் கருக்கற்று அருணன்போற் சிவக்கும்வரை புடம்போட்டு அனுபானங்களிலிட மேகநீரிழிவு தீரும்.

### கருவங்க செந்தூரம்

காரீயத்தை எலுமிச்சம்பழச்சாற்றிலும், நல்லெண்ணெயிலும், கோசலத்திலும், கொள்ளுச்சாற்றிலும், காடியிலும் வகைக்கு 7-தரம் உருக்கிச்சாய்த்து சுத்திசெய்தது பலம்-4, சூதகபலம்-1, அயச்சட்டியிலிட்டு உருக்கும்போது ஆவாரைப்பஞ்சாங்கத்தை இடித்துத் தூட் செய்து தூவி நாலுசாமம் வறுத்தபின்பு ஒருசாமம் மரைத்து சிறு செருப்படை, எலுமிச்சம்பழம், கற்றாழை, பொற்றலைக்கரிப்பான் இவைகளின் சாற்றில் வகைக்கு 4-சாமம் மாட்டி வில்லைசெய்து காய வைத்து கோழிப்புடம்போட்டுப் பணவிடை தேன் நெய்யிலுண்ண பிரமியம் பெரும்பாடு கிருச்சனம் கல்லடைப்பு நீரிழிவு தீரும்.

முன்போற் சுத்திசெய்த ஒருசேர் காரீயத்தை அயச்சட்டியிலுருக்கி முப்புச்சுண்ணம், துருசுச்சுண்ணம் வகைக்குக் கழஞ்சு-1, அஞ்சாங்காச்சல், வெடியுப்பு பலம்-16, ஒன்றாய்ப் பொடித்துச் சிறுகத் தூவி அசவசெந்திவேரினால் நாலுசாமங் கடைந்து கலவத்திட்டு பூநீரை அமுரியிற் கரைத்துத் தெளிவிறுத்து அதினால் ஒருசாமம் ஆட்டிச் சிறுவில்லைகளாகச் செய்து காயவைத்து ஒருசட்டியிற் பச்சைப்பனையோலையை விரித்து அதின்பேரில் அவ்வில்லைகளைப்பரப்பி மேற்சட்டிமூடிச் சீலைசெய்து கமலாக்கினியாய் 4-சாமமெரித்து ஆற்றியெடுக்க செந்தூரமாகும் அதைப்பணவிடை அனுபானங்களிலிட மேகம்-20-ம் குமரிலேகியத்திலிட சூலைகிராணிவாதம்-80, பித்தம்-40, சிலேத்பனம் 96-ம் நீங்கும் தேகம் பலக்கும் பத்தியத்திற்கு ஆவின் பாலும் நெய்யுஞ் சேர்த்துக்கொள்ளலாம்.

சுத்திசெய்த கருவங்கம் பலமறை அயச்சட்டியிலிட்டு உருக்கி அதில் ரசம் பலமறை கெந்தகம், மனோசிலை, அரிதாரம் வகைக்குப்பலம்-¼, ஒன்றாய்ப்பொடித்துச் சிறுகத்தூவி கற்றாழஞ்சோற்றில் கடுக்காய்ப்பொடி தூவிப்பிசைந்து வைத்திருக்க ஜலம் ஊறும் அதைவிட்டு அயக்காம்பாற் கிண்டிகொடுக்கச் செந்தூரமாகும் அதில் பணவிடை நெய்யிற்கொள்ள நீரிழிவும் சுக்கு கியாழத்தில் சுரமுங் கரிப்பான்சாற்றில் காமாலை பாண்டும் நீங்கும்.

சுத்திசெய்த லவங்கம் பலம்-1, உருக்கியசோரம்பலம்-1, மனோசிலை பலம்-¼, ஒன்றாய்ப் பொடித்து 2-சாமம்வரை சிறுகத்தூவி அயக்காம்பாற் கிண்டி வறுத்து அப்பால் வெடியுப்பு பலம்-1, ஆவாரைவேர்ப்பட்டை பலம்-2½, ஒன்றாய்ப் பொடித்து 2-சாமம் சிறுகத்

தூவி கற்றாழைவேராற கிண்டி வறுதது குமரி எலுமிச்சம்பழம், சிறு செருப்படை, பொறறலைககரிபபான இவைகளின சாறறில வகைககு ஒரு புடம போட்டெடுத்தது அனுபானஙகளிலிட மேகநீரிழிவு வாதஷி காநதம கிரநதிசூலை பெருமபாடு மேகபபுறறு தீரும.

சுததிசெய்த கருவஙகம பலம்-1, ஆடாதோடை வேராலும ஆடுதீண்டாபபாளை வேராலும வகைககு 2-சாமம வறுததுக கலவத திட்டு ஷை சாறறிலும, கொட்டாஙகரநதைச சாறறிலும அரைதது வகைககு 3-புடமும வெறறிலைசசாறறில 10-புடமும போட்டு அனு பானஙகளிலிட மேற்காட்டிய ரோகஙகள தீரும.

சுத்திசெய்த லவஙகம, நறபவளம, சலாசதது வகைககு பலம-1, சூதம பலம-½, இவைகளை எலுமிசசமபழசசாற்றால 3-நாள ஆட்டி வில்லைசெய்து காயவைதது புடமபோட்டு நிறுதது நாலிலொன்று கெநதி சேர்தது பொறறலையின சாறறாலாட்டிச சிவககுமவரை புடம போட்டு அமிரதசஞ்சீவி லேகியததிறகொள்ள கழிசசல கடுபபு இரத தம அபானககாநதல லிஙகபபுற்று முதலான மேகவியாதிகள தீரும.

சுததிசெய்த வஙகம், சூதம, பவளம், லிஙகம் வகைக்கு பலம-1, எலுமிசசமபழச சாறறா லரைதது வில்லைசெயது காயவைதது ஓட்டி லிட்டுச சீலைசெய்து மணல மறைவில 3-புடமும, வெளியில 5-புட மும போட்டு அனுபானஙகளிலிட நவமூலம மூலச்சூடு நீரிழிவு கிராணி தீரும.

தாம்பிர செந்தூரம

5-பலம தாமபிரததை குகையிலிட்டு உருக்கி அண்டத்தோல் பலம-1, மஞசள, வளைகி, வெஙகாரம, சாமபூரம, வெடியுபபு, வீரம, சீனம, பூநீரசுணணம வகைககு கழஞசு-1, இவைகளை ½-படி பழச் சாற்றாலாட்டி பணமபோல வில்லைசெய்து காயவைததால ஒவவொரு வில்லையாயக் கொடுததது பினபு அதை மறு குகையிலிட்டு உருககி ஒரு படி எலுமிசசமபழசசாறு ¼-படி முலைபபாலும சுருக்குக கொடுதத தாளகம பலம-1, வெஙகாரம, சாரம வகைககு பலம-2¼, கலவத திட்டு ஒரு படி திருககளளிபபாலில ஷை களளியுபபு, நவாசசாரம, வீரம, வெடியுப்பு, சீனம, பூநீர வகைககு கழஞசு-1, பொடிததுப் போட்டு வைததிருகக 3-ம நாள செலமாகும அநத செலததால 3-நாள் அரைததுப பணமபோல வில்லைசெய்து காயவைதது உருககி முகததில ஒவ்வொரு வில்லையாகக கொடுகக களிமபறறு செமபுநிற மாறி வெணகலமபோலாகும அதை கலவததிட்டு பொடிதது அதற் கிரட்டி சூதமும வீரமும சேர்தது பூநீரசசுணணம கழஞசு-10, சேர் தது முலைபபாலில் 3-நாள் ஆட்டிக காயவைததுக் கண்ட இடை கெநதி சேர்ததுப் பொறறலைக கரிப்பான சாறறாலாட்டி 50-எருவிற புடம்போட செந்தூரமாகும பணவிடை திரிகடுகுச் சூரணததிற்

கொள்ள குணமவாயு பீலிகை உதிரதிரட்சி பெருவயிறு நீர்க்கோர்வை நீர் மை தீரும். பத்தியம் ஆவின்பால் நெய் சேர்த்துக்கொள்ளவும்.

முன்போற் சுத்திசெய்த தாமபிரதகிடுகுப பாதி கெந்தியும் சூதமும் கூட்டிப பழஞ்சாற்றால் ஒருநாளாட்டி வில்லைசெய்து காய வைத்துக் கெசபுடம் போடவும் இப்படி சிலகுமவரை சூதம் கெந்தி கூட்டிப புடம்போட்டெடுத்து பணவிடை அனுபானங்களி விட மேற்படி வியாதிகள் தீரும்.

முன்போற் சுத்திசெய்த தாம்பிரம் விராகனிடை-10, கெந்தகம் விராகனிடை-8, இரதம் விராகனிடை-6, கலவத்திட்டு நொச்சி யிலைச சாற்றால் 3-நாள் ஆட்டி அம்மிலைபோல் லேசாய் வில்லைகட்டிக் காயவைத்து ஒரு சட்டியிற் பாதிவரை உப்பிட்டு அதின்மேல் வில்லை களை பரத்தி மேலும் உப்புக்கொட்டி அடுப்பேற்றிக் தீபம்போல் 8-சாமமெரித்து ஆறியெடுக்கச் செந்தூரமாகும் அதிற் பணவிடை அனுபானங்களிவிட்டு மேற்காட்டிய பிணிகள் தீரும்.

முன்போற் சுத்திசெய்த தாமபிரதகிடை கெந்தி சேர்த்து எருக் கம்பாலால் 4-சாம மாட்டி வில்லைகட்டிக் காயவைத்து கெசபுடம் போட்டபின்பு திரிபலைக் கியாழத்திலும், ஆவின்பாலிலும், கற்றாழஞ் சாற்றிலும் வகைக்கு 4-புடம் போட்டு அப்பால் எருக்கம்பால், வெள ளாட்டுப்பாலும், மரைக்கிழங்கு, அரசம்பட்டை, பொற்றலை இவை களின் சாற்றால் வகைக்கு ஒரு புடம்போடச் செந்தூரமாகும் அதில பணவிடை அனுபானங்களிவிட சகல ரோகங்களுந் தீரும்.

முன்போற் சுத்திசெய்த தாம்பிரம் பலம்-1, பொன்னிமிளை பலம்-1, சூதம் பலம்-1, கெந்தி பலம்-8, இவைகளைக் கலவத்திட்டு பொற்றலை கரிப்பான் சாற்றில் 3-நாளாட்டி வில்லைகட்டிக் காய வைத்து மணல் மறைவிற புடம்போட்டு பின்பு மேற்படி சாற்றில் அரைத்து வெளியில் 5-கோழிபுடம் போட்டு அனுபானங்களிவிட மூலம் குன்மம் சூலைப்புற்று முதலான சகலவியாதியுந் தீரும். தாது புஷ்டிக்கும்.

### நாகசெந்தூரம்

இலுப்பை நெய்யில் 10-தபா உருக்கி சாய்த்து சுத்திசெய்த நாக த்தை குகையிலிட்டு உலையில வைத்துருக்கி அதில் ¼-பலம் மஞ்சிலை யைப் பொடித்து தூவி வெண்கொழிஞ்சிவேராற கிண்ட நீறும் அதை கலவத்திட்டு சூதபஸ்பம் வகைக்கு பலம்-1, கூட்டி மூலைப்பாலால் 4-சாம மாட்டிப பின்பு கெந்தகம் இரட்டிப்புச் சேர்த்து பொற்றலைக் கரிப்பான்சாற்றா லரைத்து 6-தபா கோழிபபுடம்போடச் செந்தூர மாகும் குன்றியிடை அனுபானங்களிவிட காசம் வலி குன்மம் உசி புண் சூலை கிராணி உளமூலம் மேகம் வாதபீலிகை காமாலை காசசல் குளிர் மந்தாரகாசம் நீங்கும்.

ஒருபலஞ் சுத்திசெய்த நாகத்தை அயச்சட்டியி லுருக்கி அதில் விளையலுப்பு மஞ்சள் வகைக்குப் பல மரை, பொடித்துத் தூவி சிவக்குமட்டுங் கிண்டிக்கொடுத்துப் பணவிடை அனுபானங்களிலிட மேற்படி வியாதிகள் தீரும்.

சுத்திசெய்த நாகம் பலம்-1, இரும்புச்சட்டியி லுருக்கி பொடியுப்புப் பலம்-1, ஓமம், சுக்கு, மஞ்சள் வகைக்குப்படி கால் அரைக்கால் ஒன்றாய்ப் பொடித்துத் தூவி அறுகவேரால் இரண்டு சாமம் கிண்டிக்கொடுத்து அப்பால் நாயுருவிச்சமூலம் இடித்த தூளைச் சிறுகத் தூவிக்கிண்டி கொடுத்துச் சிவந்தபின்பு எலுமிச்சம்பலச் சாற்றா லாட்டி பில்லைசெய்து காயவைத்துப் புடமிட்டு பணவிடை அனுபானங்களிலிட எல்லா இருமல் எலிகடி கணமூலந் தீரும்

காளமேகநாராயண செந்தூரம்

எட்டாங்காசல வெடியுப்புச் சீனம் வகைக்குப் பலம்-24, வெண்மையாய் வறுத்த துருசு, வெங்காரம், சாரம், கல்லுப்பு வகைக்குப் பலம்-6, பூநீறு பலம்-3 இவைகளை பொடித்து மூன்று பங்குசெய்து ஒரு பங்கைத் திராவகமிறக்கி அதை மற்றொரு பங்கில் விட்டுப் பிசறி யுலர்த்திப் பொடித்து திராவகமிறக்கி அதை மூன்றாவது பங்கில்விட்டுப் பிசறி யுலர்த்தி திராவகம் வடித்து பளிங்குக்குப்பியிலடைத்துக்கொண்டு வாலை ரசம் பலம்-30, சாதிலிங்கம் பலம்-15, அரிதாரம் பலம்-10, கெந்தகம் பலம்-4, இவைகளைக் கல்வத்திலிட்டு பொடித்து மேற்படி திராவகத்தால் நாலுசாமமாட்டி ஒன்றாய் உலர்த்திப் பொடித்து ஏழு சீலைசெய்து காயவைத்து உலர்த்தின குப்பியிலிட்டு வாலுகைக்கலால் அடைத்து ஒரு சட்டியில நாலுவிரற்கடை பொடி மணலைக் கொட்டி அதின்மேற் குப்பியை வைத்து அதின் கழுத்துவரை மணலைக் கொட்டி மேற்சட்டிமூடிச் சீலைமண்செய்து பத்துசாமம் ஆவரைவிறகாலெரித்து மேற்சட்டி திறந்து சலாகைபோட்டுக் கிண்டிக்கொடுத்து நிறமில்லாவிட்டால் பின்னுமிரண்டு சாமமெரித்து ஆறவிட்டெடுக்கச் செந்தூரமா யிருக்கும் தூதுவேளை, கண்டங்கத்திரி, ஆடாதோடை இவைகளை ஓர் நிறையாயிடித்து பிட்டவித்து அரைக்காற்படி சாறு பிழிந்து அதில் ஒரு காணடி தேனும் அரைப் பணவிடை செந்தூரமுங் கலந்து நாலொன்றுக்கு இருநேரம் இருபதுநாட் கொடுக்க சிலேத்மரோகம் 96-ம் எலிகடி வயிற்றுப் பொருமல் மேலிளைப்பு சன்னி-3, சன்னி மூர்ச்சை சிலேர்ப்பன மூர்ச்சை இப்படிப்பட்ட வியாதிகள் 180-ம் தீரும்

திப்பிலியை வெதுப்பிப் பொடித்துச் சூரணம் திரிகடியில் அரைப் பணவிடை செந்தூரம் வைத்து தேனில் மத்தித்து இருவேளையும் ஒரு மண்டலங் கொள்ள சூலை 1[illegible]-ம் குஷ்டம் 18-ம் குன்மரோகம் ரணம் கடிவிஷம் அரையாப்பு புற்று கபாலசூலை கண்ணோய் கன்னப் புற்று பீனிசம் நெஞ்சுநோய் காதடைப்பு நெஞ்சடைப்பு காதுமடல் வீக்கம் தீரும்.

வெள்ளுள்ளித் தயிலத்தில் அரைப்பணவிடை வீதம் இருவேளை யும் 10-நாட்கொள்ள வாதமூர்ச்சை பித்தமூர்ச்சை அற்புதவாதம் உதிரவாதம் சன்னி மூர்ச்சை சிலந்தி கணஞ்சி கரப்பான் சன்னி 15-ம் தீரும்.

நெற்பொரி, அசமதாகம், சுக்கு, மிளகு இவைகளை வெதுப்பிப் பொடித்த சூரணம் கிரிகடியும் அரைப்பணவிடை செந்தூரமும் முருங்கப்பட்டைச் சாரத்தில் கலந்து ஒருமண்டலங்கொள்ள சன்னி வாதம் பக்கவாதம் சருவாங்கவாதம் மீதாளவாதம் எரிவாதம் உதிர வாதம் நடுக்குவாதம் பிடிவாதம் முடக்குவாதம் கெண்டைவாதம் அசந்தவாதம் இடுப்புவாதம் முதலான வாதம் 80-ம் பித்தநடுக்கம் சிலேத்மநடுக்கம் சருவாங்கநடுக்கம் இருமல் ஓங்கரித்தல் தலைநடுக்கம் காலநடுக்கு கண் செவி கபாலநடுக்கம் உள்வீச்சு புறவீச்சு சத்திகுன்மம் எரிகுன்மம்வலிகுன்மம்முதலான அஷ்டகுன்மம்வாயுவகைகளும் மூலவாயு உதிரகிராட்டி கவுசி கல்லடைப்பு சதையடைப்புநீரடைப்பு இப்படிப்பட்ட 300-வகை வியாதிகளும் தீரும்.

நிலவாகைச்சாற்றில் அரைப்பணவிடை செந்தூரமிட்டு ஒன்றை விட்டொருநாள் இருவேளையும் 10-நாட்கொள்ள கொப்பவிப்புருதி மடுவிப்புருதி விலாவிப்புருதி உழைமாந்தை பக்கவாயு அண்டவாயு அண்டவாதம் சூலவாதம் குடைவாதம் இடிசூலை பக்கசூலை வாதச் சூலை யோகினிசூலை நாபிசூலை கிருமி உதிரவாயு ரணங்கள் ரண சூலை முதலான வியாதிகள் தீரும்.

மேற்சொல்லிய வியாதிகளுக்கும் மற்ற வியாதிகளுக்கும் அவை கட்குரிய மற்ற அனுபானங்களிலும் மேற்படி செந்தூரம் வைத்துக் கொடுக்கலாம்.

சுத்திசெய்த இரத்தம் விராகனிடை-10, கெந்தி விராகனிடை 15, அரிதாரம் விராகனிடை-8, லிங்கம் மனோசிலை வகைக்கு விராக னிடை-4, அல்லது சுத்திசெய்த கெந்தகம் சூதம் வகைக்கு விராக னிடை-60, லிங்கம் விராகனிடை-15, தாளகம் விராகனிடை-5, மனோசிலை விராகனிடை-2½, இவைகளை எருக்கம்பால், புரயலை, கவு தும்பை, சிறுசெருப்படை, செம்முள்ளி, மாதுளையினிலை, வெடி முருக்கம்பூ இவைகளின் சாற்றால் வகைக்கிரண்டு சாமமரைத்து துலாத்திக் குப்பியி லடைத்து மணல்புடம்வைத்து 24-சாமமெரித்து ஆறியெடுக்க செந்தூரம் முருக்கம்பூப்போலிருக்கும் அதை முந்திய பிரயோகத் திற் சொல்லியபடி வியாதிக்குத் தக்கத் அனுபானங்களிற் விட்டுத் தீரும்.

## ரசராசிந்தாமணி செந்தூரம்

சுத்திசெய்த இரத்தபலம்-2, கெந்திபலம்-2½, சாதிலிங்கம்பலம் 1, மனோசிலை பலம்-½, இவைகளை பொற்றலைக்கையாந்தகரைப்பான மாதுளம்பூ, முருக்கம்பூ,பிச்சிப்பூ இவைகளின் சாற்றில் வகைக்கொருநாளரைத்து வர்த்திப் பொடித்து ஏழுசீலைமண்செய்த குப்பியிலடைத்து சலவக்கல்

லால்மூடி ஒருசட்டியில நாலுவிரற்கடை மணல்மேல்வைத்து அதின் கழுத்துவரை மணறகொட்டி அடுபபேபறறி தீ ாககினியாய்ஒருசாமம கமலாககினியாய் ஒரு சாமம் கடாககினியாய் 21-சாமமெரித்து தியாற் றியெடுககச் செந்தூரமாகும் ஜாதிககாய், ஜாதிபததிரி, கிருமபு, குறு சாணி, ஓமம், அதிவிடயம வகைக்கு பலம-1. வெதுப்பிப பொடிதது திரிகடியிற பணவிடை செந்தூரம வைதது 10-நாள்கொள்ள சகல கிராணி தீரும்.

மரட்கிழஙகை உலர்ததி யிடிதத திரிகடி கதூளில் பணவிடை செந்தூரமவைகது 20-நாள் சாபபிட்டு பததியம கீரைததண்டும் கோழிககறியுஞ் சேர்ததுவர நவமூலந தீரும.

பரங்கிப்பட்டை சூரணத்திற செநதூரம்வைததுத தேன்விட்டு மத்தித்து இருபதுநாள் கொள்ள விப்புருதிமேகம் மேகரண முதலா னவை தீரும.

வெருகஙகிழங்கு விளாமபொருக்கும ஓர்நிறையாய்க்குழித்தயில மிறக்கி அதில் ரசகற்பூரம, பணவிடை-¼, செநதூரம பணவிடை-1, வைத்து மததித்து இஙநேரமும மண்டலஙகொள்ள குட்டம-18, வண்டுகடி, விஷகடி, குதிரைநோய் சிரங்கு, சொரி, கபாலகுட்டம், விஷகடியினு லுண்டாகும் வியாதிகளுந தீரும.

பிரண்டைகதயிலமிறக்கி அதில பணவிடை செநதூரம்வைதது 20-நாளகொளள சகலகுனமமும சகலவாயுவுந தீரும்.

தாமரைப்பூ சாறறிலாவது, அல்லிப்பூச்சாற்றிலாவது, செங்கழு நீர்பூச் சாற்றிலாவது ஒரு பணவிடை செநதூரம்வைதது 20-வது நாள் கொள்ள ஊஷ்ணரோகம் சுரநதீரும்.

வெறறிலைசாற்றில மாளாசுரம், அஸ்திசுரம் நீஙகும் விலவாதி லேகியததில் ஈளை,இருமல, மநதாரகாசம், உளைமாநதை, சுரமாந்தை, சததிகுன்மம, காமாலை, எரிகுன்மம, வலிகுனம முதலானவை தீரும.

இரத செந்தூரம்

கழிமண்ணும பொடிமணலுஞ்சேர்ததுச சீலையிற்றடவி செஙகா சல குப்பிக்கு ஏழுசீலைசெய்து நனறுய்காயவைத்து ஒருபுதுசட்டியை அடுப்பிலவைகது தீபமபோலெரிதது 20-விராகனிடை சுததிசெய்த கெந்தியைப் பொடிததுப்போட்டு உருகினவுடன தீயாறறி சுததி செய்த 80-விராகனிடை ரசததை சிறுகவிட்டு சடடுவைததாறகிண்டி கொடுக்க கருப்பாயிருககும அதை கல்வததிட்டு பொடிகது மேறபடி குப்பியில் அரைவாசிபோட்டு அதின வாயை ஓட்டாலமூடி தூககனை த தாழியில் இரண்டல்லது நாலுவிரற் பொடிமணலபோட்டு அதின மேல் ஷை குப்பியைவைதது அதின் கழுத்துவரை மணற்கொட்டி வாலுகை யடுப்பிலேற்றி தீபாக்கினியாய் ஒரு சாமமுங் கமலாக்கினி

யாலொருசாமமும எரிகக்து புகைகண்டவுடன் குப்பிவாயோடடை
யெடுக்துச சலாகையாற கிண்டிசகொடுககவும.

இநதப்படி ஒரு நாழிகைககொருதபா குப்பிவாய்திறநது கிண்டிக்
கொடுதது வெவவேறேட்டால மூடிவருகையில மருநதுருககிச சலா
கையிற பிடிதத லபபோது சுததிசெயதகாளகம மூனறலலது ஐநது
விராகனிடைபபொடிதது மூனறுபஙகுசெயது ஒருபஙகைபபோட்டுச
செவ்வையாய் கிண்டிககொடுதது மூடி கடாககினியாயெரிதது அடிக்
கடிகிண்டிககொடுதது வெவவேறேடுபோட்டு மூடிவருகையில ஓட்டில்
மெழுகுபபததால வெளுபபயிருநதாலும கிண்டிககொடுககுமபோது
குப்பியினமட்காததாலும சலாகையிலே சிவபபாயாவது வெளுபபா
யாவதிருநதாலும அநதபககததில தீபாறறிககுப்பியையெடுதது தண
ணீரிறறேறுபதது ஆறினபினனெடுதது உடைதது செநதூரததை
சீச விலடைகதுககொண்டு திரிகடுகு, சாதிககாய், சீரகம் இவைகளை
ஓர்நிறையாய் வெதுபபிபபொடிதத திரிகடிததூளையும பணவிடை
செநதூரமுமவைதது மததிதது 20-நாளகொளள, வாதம்-80 அண
டத்தயிலததிலாவது இஞசிசசாற்றிலாவது திரிகடி திரிகடுகுச்சூரண
மும் பணவிடை செநதூரமும வைதது மததிததுககொடுகக சனனி
தோஷமும திபபிலி, சுககு, திபபிலிமூலம, வாயவிளஙகம இவைகளை
ஓர் நிறையாயப பொடிதது திரிகடியில செநதூரமவைதது தேனை
விட்டு மததிததுணண சூலைவாயும தேனிற்கொள்ள மூலம பவுத்
திரம குனமம வாயு சூலைகிராநதி மேகவனை சொரி கரப்பான வெண்
குட்டமும முந்திய பிரயோகததிற சொலலிய பல வியாதிகளுக்கும்
அனுபானஙகளில விடத் தீரும.

சுததிசெய்த இரததம பலம-10, கெநதி பலம்-2½, இவைகளை
முன்போலதொநதிதது பேயசசேமபுசாறறால 4-சாம மாட்டியுலர்த்
திப பொடிதததும் குப்பியிலடைதது மணமேலவைதது முநதிய பிர
யோகததில சொலலியபடி எரிதது மருநதைககிண்டி சலாகையிற்
பிடிககுமபோது 2-பலந காளககதைப பொடிததுச சிறுகச சிறுகப
போட்டுக கிண்டி கொடிததெரிததுப பததிலெடுதது தண்ணீரிருக
வைதது குப்பியை யுடைதது செந்தூரததை எடுதது முநதின பிர
யோகததிற சொலலியபடி வியாதிகட்கு அனுபானஙகளில்ட்த தீரும.

வாலைரசம் பலம-1, சுததிசெய்த கெநதகம் பலம-¼, இவைகளை
முனபோல கொநதிதது பேய்ச்சேம்பின கிழஙகுச்சாறறால் 3-நாளா
ட்டி உலாததி பொடிதது குப்பியிலடைதது மணலமேலவைதது 3-
சாம மெரிதது குப்பியையுடைதது மருநதை கலவததிட்டு முன
சொலலிய இடைபபடி கெநதிசேர்தது ஷடி சாறறாலாட்டி யுலாததி
குப்பியிலடைதது மூனறுசாம மெரிககவும இந்தப்படி அஞசுதபா
கெநதிசேர்தது எரிகக செநதூரம் மேலேறாமல் தளததில நிற்கும
குப்பியையுடைத்துச் செநதூரததை யெடுதது பணவிடை அனுபா
னஙகளில்ட மேறசொல்லிய வியாதி தீரும.

சூதகம் பலம்-1, கெந்தி பலம்-2, இவைகளை ஒன்றாய்ச் சேர்த்து கல்வத்திலிட்டு கருந்துளசி சாற்றால் நாலுசாமமாட்டி உலர்த்துக் குப்பியிலிட்டு மணல்மேல்வைத்து வாலுகாக்கினியாய்ப் பத்துசாமம் எரித்து ஆறவிட்டெடுத்துப் பணவிடை பொரிமாவிற்கொள்ள சுத்தசுரம் உட்சுரம் நேர்சன்னிச்சுரம் மாந்த சுரம் கொடிவேலிக் கியாழத்தில் அஷ்ட குன்மம் சதமூலக் கியாழத்தில் சன்னிதோஷம் அமுக்குறாக் கிழங்கு கியாழத்தில் பவுத்திரம் ஆடாதோடை கியாழத்தில் கெர்ப்ப விப்புருதி கரிப்பான் மிளகு சேர்த்து அரைத்து அதில் பணவிடை செந்தூரம் வைத்துண்ண பாண்டு வீக்கம் தேனையில் வாதம் 80-ம் கரணைக்கிழங்குச் சாற்றில் மூலம் பருத்திவிதைத் தயிலத்தில் மேகம் 20-ம் மற்ற அனுபானங்களில் சீதம் விழுதல் சுரம் அரோசிய முதலான வியாதிகள் தீரும்.

சந்திரோதய செந்தூரம்

தங்கம் வராகன் 1, வாலைரசம் வராகன்-8, சுத்திசெய்த கெந்தம் வராகன்-16, இவைகளைச் செம்பரத்தம் பூச்சாற்றில் நாலுசாமமும் ஆட்டி நிழலிலுலர்த்தி குப்பியிலிட்டு மணல்மேல்வைத்து தீபாக்கினி கமலாக்கினி சாடாக்கினியாய் வகைக்கொருநாள் ஒரு சாதிவிறகாலெரித்து ஆறவிட்டெடுக்கச் செந்தூரமாகும் அதில் பணவிடை வீதம் அனுபானங்களில் நீரிழிவு க்ஷயம் முதலான சகலரோகங்களும் தீரும்

கெந்தி, சூதம், சீனம், வெங்காரம், நாவிசங்கு, மனோசிலை, பவளப்புற்று வகைக்கு பலம்-1, இவைகளை எலுமிச்சம்பழச் சாற்றிலும் குமரிச்சாற்றிலும் வகைக்கு ஒரு நாளாட்டி வில்லைதட்டி யுலர்த்தி கலசத்திலிட்டு மேற்கலசமூடி சீலைசெய்து அடுப்பேற்றி முத்தீயும் ஒருநாளெரித்து ஆறவிட்டெடுத்து தங்கம், பொன், வெள்ளி, லிங்கம், பவளம், ருத்திராட்சம், முத்து, அக்கிராகாரம் வகைக்கு ஒரு கழஞ்சு சேர்த்து முலைப்பாலிலும் மாதுளம்பூ சாற்றிலும் துளசிச் சாற்றிலும் வகைக்கொருநாளாட்டிச் சிறுவில்லையாய்க் கட்டி [illegible] வைத்து இருபதுநாட் சென்றெடுத்து அனுபானங்களில் சன்னி தோஷமான காசம் நீரிழிவு அரோசிகம் மகோதரம் கவுசிபாண்டு முகவாதம் எலும்புருக்கி உழலை தாகம் சூடு முதலானவை தீரும்

சடாச்சர அக்கினி குமாரன்

அரைப்பொடி, கெந்தி, காந்தம், வெங்காரம், லிங்கம், இரதம் வகைக்குப் பலம்-1, இவைகளை கற்றாழைச் சாற்றால் ஒரு நாளாட்டி யுலர்த்திப் பொடித்து கலசத்திற்போட்டு கடாவியில் ஒருநாள் வைத்து அதை மறுபடியும் மேற்படி சாற்றால் மூன்றுபோலாட்டிப் பொடித்து கடாவியில் வைக்கவும் இதப்படி மூன்றுதரம் ஆட்டி கடாவியில் வைக்கச் செந்தூரமாகும் திரிகடி திரிகடுகுச் சூரணத்தில் பணவிடை செந்தூரம் வைத்து தேனைவிட்டு மத்தித்து நாளொன்றுக்கு இருவேளையுமண்டலங்கொள்ள வாதம்-80, வாயுசூலை அஷ்டகுன்மம் சன்னி முகவா

தம் கழல்வாதம் மூர்ச்சை பித்தம சிலேற்பனம மூசல்வலிப்பு மொளிச்சூலை கிரந்தி அரையாப்புத தீரும்.

### சுயமக்கினி

இரதம் மனோசிலை வகைக்கு விராகனிடை-4, கெந்தி விராகனிடை, காந்தம விராகனிடை-16, அரப்பொடி விராகனிடை-32, லிங்கம கல்லார் கல்மதம வகைக்கு விராகனிடை-1, இவைகளில் அரப்பொடியைக குமரிச்சாற்றால ஒருசாமமாட்டி யுலாததி இரும்புக கிண்ணததிலிட்டுக கடுவெயிலில வைக்கப்புகைந்து செந்தூரமாகும அதிற பணவிடை இஞ்சிச்சாறறில் பததுநாளகொளள வாதசுரம, அஷ்டகுன்மம, சனனியும வெளளுளளித தயிலததிட சனனியும தேனில மகோதரம உளைமாந்தை பிரமேகக்கோாவையும கிராமந்தாககினி நீரிழிவும கரிப்பானசாற்றில காமாலை பாண்டு சோகையுந தீரும.

மனோசிலை பலம்-2, சூதம்-4, கெந்தி பலம-8, காந்தை-16, அரப்பொடி பலம்-32, இவைகளைக் குமரிச்சாற்று விரண்டு சாம மாட்டி வில்லைசெய்து இருப்புப் பாததிரததில் வைதது ரவியில்வைக் கப்புகைந்து செந்தூரமாகும் அதைக குப்பியிலடைத்து ஒரு மண்டலம் நெறகுழியில் வைததெடுகதுப் பணவிடை இஞ்சிச்சாற்றிலிட பித்தபாண்டு சோகை புளிதசேப்பம் கிராணி உள்மூலந தீரும.

### பஞ்சபாஷாண செந்தூரம்

சாதிலிங்கம், மனோசிலை, காந்தாரம, காரம, கெந்தி, ரசக்கற்பூரம் வெளளைப்பாஷாணம வகைககு பலம-1, இவைகளைச சுததிசெய்து குப்பைமேனி, வெற்றிலை, பருததி, வெளளறுகு, துளசி, வேலிப் பருததி, பொடுதலை இவைகளின் சாற்றால வகைககு நாலுசாமமாட்டி வில்லைசெய்து நிழலில உலர்தது அதற்கு வெற்றிலையாா கவசஞ செயது ஒருசட்டியிலவைதது மேறசட்டி கொண்டுமூடி ஏழுசீலை மண செய்து நனறுய்க காயவைதது அடுபபேறறி தீபமபோல நாலுசாம மெரித் தாறறிப்பார்கக மேற்சட்டியில செந்தூரம் பறறியிருககும அதை எடுத்துப் பணவிடை தேன இஞ்சிச்சாறு முதலான வியாதிகளுக்குத் தகுந்த அனுபானங்களிலிட சன்னிசுரம வெண்குட்டம சூலை வாயுவாதம மேகம் குன்மம கிராணி கைகால முடககு பிளவை புறறு கண்டமாலை குஷ்டநோய் பெருவியாதி அரிகரப்பன் தேமல வணடு கடி கழல்வாதம அண்டவாதம் குழிவாழை வலிபபுடன ஜேஷ்கனனப் புறறு கபால குட்டம பவுததிரம மூலமுளை கசரோகம மேகரணங்கள் கிரந்தி அரையாப்பு கபாலசூலை முதலான வியாதிகள் தீரும.

வெடியுப்புபலம்-10, அட்டுப்பு சீனம, வெண்துருசு வகைக்குபலம் 5, நவாசசாரம பலம்-7, அன்னபேதி பலம-2, கெந்தகம பலம-3, இவையெல்லாங கண்ட யிடைக்குப் பழமபுளி சேர்ததிடிதது ஒட்டி விட்டு அதில் தீகொளுதத எரிக்து சுண்ணமாகும் அதைப பீஙகா

னில் வைத்து மூடி மண்ணிற் புதைத்து மண்டலஞ்சென் றெடுக்கச் செயநீர்றங்கி யிருக்கும் இரதம், கெந்தி வகைக்கு விராகனிடை-20, தாளகம் விராகனிடை-10, மனோசிலை விராகனிடை-5, லிங்கம் விராகனிடை-1½, இவைகளைச் சுத்திசெய்து பொடி செயநீரால் 3-நாளாட்டி யுலர்த்தி கோழிமுட்டைக் கூட்டிலடைத்து அதற்கு 7-சீலை செய்து காயவைத்து 4-விறகடை மணல்மேல் வைத்து தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி வகைக்கு 10-நாழிகை யெரித்து ஆற்றி யெடுக்கச் செந்தூரமா யிருக்கும் அதில் பணவிடைவீதம் அனுபானங்களிலிட மேற்காட்டிய வியாதிகளும் அமிர்தவல்லிச் சூரணத்தில் மேகத்தி லெடுத்த சகல வியாதியுந் தீரும் தேசபலம், அப்பிரகம், அயம், காந்தம், வங்க முதலான லோகங்களைத் தனித்தனியே மேற்படி செயநீரா லரைத்துக் கோழிப்புடமாய்ப் 10-புடம் போடச் செந்தூரமாகும். அனுபானங்களிலிட வியாதி தீரும்.

### கரியுப்பு செந்தூரம்

கரியுப்பை எருக்கம்பால், திருகுகள்ளிப்பால் அமபை, மருதம் பட்டை, குமரி, எலுமிச்சம்பழம், பொடுதலை இவைகளின் சாற்றில் வகைக்கு 2-புடம்போடச் செந்தூரமாகும் அதை 3-பணவிடை தேனிற் கொடுக்க குன்மம் உதரரோகம் க்ஷயம் சூலை வீக்கம் வாயு கிராணி முதலானவை தீரும்.

### லிங்க செந்தூரம்

ஒருபலம் லிங்கத்தை அயச்சட்டியிலிட்டு அதற்குக் கீழுமேலும் ஒருபலம் கெந்தியைப் பொடித்துப்போட்டு ¼-படி கழுதைப்பாலைச் சிறுகச்சிறுக மெழுகுபோ லுருகும்படி விட்டுக்கொண்டு 4-சாமம் எரித்தெடுத்துக் கழுவி பொடித்து பணவிடை இஞ்சிச்சாற்றிலும், திரிகடுகு சூரணத்திலும், கொடிவேலிக் கியாழத்திலுங் கொடுக்க சன்னி சூலை வாதம் 80-ம் வாய்வுந் தீரும்.

### தாளக செந்தூரம்

கரியுப்பைக் கழுதைப்பாலவிட்டு 4-சாமமாட்டி வில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு சீலைசெய்து குக்குடபுடம்போடவும் இப்படி 3-புடம் போட்ட உப்பு சூடன் வகைக்கு பலம்-1, இவைகளை அண்டவெள்ளைக் கருவ லாட்டிச் சுத்திசெய்க ஒருபலம் தாளகக் கட்டிக்குக் கவசஞ்செய்து காயவைத்து அதற்குமேல 7-சீலைமண் செய்து காயவைத்து ஒரு சட்டியில ஒரு விற்கனை மணற்கொட்டி அதன மேற் கவசத்தை வைத்து மேலும் மணற்போட்டு கமலாக்கினியாய் ஒருசாமமெரித்து ஆற்றியெடுக்கச் செந்தூரமாகும் அதிற் பணவிடை தேனிற் கொள்ள சுரம் சன்னி க்ஷயம் எலிகடி உளமாந்தை தீரும்.-

## செந்தூரப் படலம் முற்றிற்று.

அதாதது பற்பல செயநீராலும் மூலிகைகளாலும கவசஞ்செயது காடைபுடம தொடஙகி கெஜபுடம் வரையிற பகுததுணாநது பாகிததால பற்ப படலமென பெயா பெறறது

900-ஆணடு பிரயோகிககலாம்

விருத-தம்

கூறும்பறபங குறை நூமெலலாமாயநது
நீறுமேசாக் காணவறுபதும
தேறநீறறினது செய்யுவேபண்டிதற்
காரமாமுனிக் கடியவறைநதவே.

ரச பஸபம்

காட்டுள்ளியும், கெந்தகமும ஓர் நிறையாய் அரைத்து பில்லை தட்டிக் கலசததிலிட்டு தயிலமிறககி வாலைரசததிலவிட்டு ரவியில் வைகக நீறும அதை அநதத தயிலகதாலாட்டி பிலலை செய்துககொண்டு நனறாய் வெநத செஙகலலைப் பாக்குபோலுடைகது ஒரு குணடு சட்டியில அரைவாசி போட்டு அதினமேல ஒரு படி உப்பு கொட்டி பாபபியதில பிள்ளையைவைகது மூடி 7-சீலைமண செய்து அடுப்பேற்றிக் காடாககினியாய 3-சாமமெரிதது ஆறறி எடுகக பஙகிதஇருககும அதை எடுகது பணவிடை, பணவெலலம முதலான அனுபானங்களில 7-நாட் கொளள குஷ்டம குலைநோய் பவுகதிரம கழலை காமாலை விப்புருதி விககம வெளளை படருதல குலை அரையாப்பு யோனிப் புறறு மூலமுளை கண்டமாலை கிரநதிக தடிபபு வெளளை கருஙகாப்பன வண்டுகடி மேகவாயு குனமம தீரும. வாய் வேகாது.

ஒருபலம் சூதகத்தை மூநதிரிககொட்டைத் தயிலத்தாலும், விடநதீஞசான்மூலிச் சாற்றாலும, மாலதேவிக கிழஙகுசசாற்றாலும, வெளளெருககம பாலாலும வகைக்கு ஒரு சாமமாட்டி வில்லைசெய்து முன்போல் எரித்து பதஙகிதது பணவிடை வெல்ல முதலான அனுபானஙகளிலிட மேறகாட்டிய வியாதிகள் தீரும. வாய்வேகாது.

பனிரண்டு விராகனிடை சுததிசெய்த கெநதககதையும், 80-விராகனிடை இரதத்தையும் இரதசெநதூரததிற சொலலியபடி ஒனறாய்த் தொநதிதது பொடிதது முனபோல பதஙகிததுககொணடு 4-விராகனிடை ஓமததைப பொறிதது அதற்கு நிகர் கருப்புககட்டியும் 8-விராகன மேறபடி பஸ்பமும இதனடியிற சொலலியிருககிற கெநத பறபமுஞ் சோதது மெழுகுபோலாட்டி 16-மாததிரை செய்து 8-நாள அநதிசநதி கொள்ள மேறசொலலிய வியாதிகள் தீரும.

### கெந்தக பற்பம்

பூநீரும், வெடியுப்பும் ஓர்நிறையாய்ச் சுத்தஜலம்விட்டரைத்து பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு அதற்குக் கீழ்மேலும் 4-விராகனிடை உவர்மண்போட்டு 2-சாமம் எரிக்கச் சுண்ணமாகும் அதற்குப்பாதி சாரஞ்சேர்த்து மெல்லிய சீலையால் முடிந்து ஒரு பீங்கானில் தொங்கவிட்டு மூடிப் பூமியிற்புதைத்து ஒரு மண்டலஞ் சென்றெடுக்கச் சொரீரிறங்கும் அதைச் சீசாவிலடைத்துக்கொண்டு கெந்தகமுஞ் சீனமும் ஓர் நிறையாய்க் கல்வத்திலிட்டு ஷை செயநீரா லரைத்து பில்லை செய்து காயவைத்து சிறுசின்னியிலையை அரைத்து குகைசெய்து அதில் பில்லையை வைத்து மூடிக் காயவைத்து அதற்குமேல் 7-சீலை மண்செய்து காயவைத்து அஞ்செருவிற் புடம்போடத் தீரும். இந்தப்படி தாளகத்தையும் நீற்ற ஷை பற்பமும் ரசபற்பமும் வகைக்குப் பணவிடை தேனிலாவது மற்ற அனுபானத்திலாவது கொள்ள ரசபற்பத்திற் சொல்லிய வியாதிகள் தீரும்.

கெந்தகமும், சீனிக்காரமும் ஓர் நிறையாய்ப் பொடித்து கல்வத்திலிட்டு சிறுசின்னிச்சாறுவிட்டுப் பிசறி ரவியிலுலர்த்தி மேலோடு மூடி மூன்றெருவிற் புடம்போட நீறும். அனுபானங்களில் ஷை வியாதிகள் தீரும்.

### வீர பற்பம்

ஒருபடி பூநீரை 4-படி அமுரியில் கரைத்துத் தெளிவிறுத்து ஒரு பாண்டத்திலவிட்டு அதின்வாயில் சீலையால் வேடுகட்டி அதின்மேல் 5-விராகனிடை வீரக்கட்டியை வைத்துமூடி நீர்வற்றும் வரை தீயெரிக்கப் பற்பமாகும் அதை கிரந்திநாயகச் சாற்றால் 12-சாமம் மெரித்து பில்லைசெய்து காயவைத்து ஷை பில்லையை அரைத்துக் குகை செய்து அதற்குள் ஷை பில்லையை வைத்து மூடி ஒரு சட்டியில் நாலு விராகனிடை மணல்போட்டு அதின்மேல் வைத்து 4-நாழிகை யெரிக்க சிவந்த நிறமாய்ப் பஸ்மமாயிருக்கும் அதில் பணவிடை திரிகடிச்சூரணத்தில் வைத்து தேனவிட்டு மத்தித்து 3 வேளை கொடுக்க சன்னி க்ஷயம் கபக்கட்டு வாயுவாதந் தீரும்.

### தாளக பஸ்மம்

ஒருபலம் தாளகத்தை பெரும்பூசினிக்காயை யிடித்துப் பிழிந்த சாற்றில் 2-சாமம் வேகவைத்தெடுத்துச் சுண்ணாம்பு கலுவத்துள் வைத்து 100-தபா நீற்றி எடுத்து நல்லெண்ணெயில் 2-சாமமெரித்து சாரப்புநீ, சவுட்டுப்பு, சுண்ணாம்பு, சவலுப்பு, சூடன், சீனம், வெடியுப்பு, இந்துப்பு வகைக்குப் படி-1, .-படி சிறுநீரில் கரைத்துத் தெளிவிறுத்து கட்டிக்குச் சுருக்குக் கொடுக்கச் சுத்தியாகும் மூக்கரைச் சாரணை சமூலமும் 1-தேங்காய்ப் பிரமாணம் அரைத்து அதற்கு நடுவில் கட்டியைப் பொதிந்து சட்டிக்குள் வைத்து மேற்சட்டி மூடி சீலை

செய்து தீபம்போல 4-சாம மெரிக்க பற்பமாகும் அதில பணவிடை தேனிற கொடுக்க க்ஷயம கபாலசூலை பெருமபூசனிககாய்ச சாறறில மேகமும் மற்ற அனுபானங்களில கிரகதி சூலையும சுரம குஷ்டமுங தீரும்.

சுத்திசெய்த ஒரு பலம் தாளகததை வாழைககிழஙகுக்குள் வைதது மூடி 7-சீலை மண்செய்து காயவைதது ஐமபதெருவிற புடம் போட நீறும அனுபானததிட்டு சிலேதமநோய 96-ம சுரம அரையாபபு கிரகதிசூலை குட்டமுங தீரும.

சுததிசெய்த ஒரு பலம தாளகததிற்கு எருளளிசசாறு, சிககாங் தைசசாறு வகைககுப படி-1, சுருககுக கொடுதது சிததண்டமபூநீர் இவைகளின் சுண்ணததை ஓர் நிறையாய் எருககம்பாலா லாட்டி கட்டிகருக் கவசஞ்செய்து காயவைதது பூவரசம்பட்டை புளியமபரணை நாயுருவி இவைகளின் சாமபல வகைககுப படி-2, ஒரு சட்டியிற் போட்டு அதற்கு நடுவில வைத்து மேறசட்டி மூடிச சீலைமண்செய்து 4-சாமம் கமலாககினியாய தெணமடையாம லெரிகக பஸபமாகும அதில பணவிடையும ரசபஸ்பம பணவிடையுஞ் சேரதது அனுபானத்திலிட மேற்படி வியாதிகள் தீரும

## துருசு பஸபம்

துருசுக்கட்டியைக் கவுதுமபைச்சாற்றில 6-சாமம் ஊறவைதது ரவியிலுலர்ததி அப்பாலநதச சாற்றால் ஒருசாம மாட்டி பிலலைசெய்து காயவைதது வெடி இலையை யரைதது அதறகு அஙகிபூட்டி 7-சீலை செய்து கதுவாளிப்புடமபோட்டு கருஊமததஞ்சாறறு லாட்டி பிலலை செய்து காயவைதது வெடி இலையை யரைதது அஙகிபூட்டி 7-சீலை செய்து முனபோல் புடமபோட நீறும அரை அனுபானததிலிட சுரம கெணடை சனனிதோஷம கட்டி அஷ்டகுனமம பககவாயு சளி இளைப்பு தாகம வயிறறுப் பொருமல பெருவயிறு வீககம காமாலை ரததம சோகை பாணடு விஷரோகமோவை தீரும். வெடிபஸ்பததைச சாறுவரத தலைகளி லிடச சாறு வரும.

## தாமபிர பஸபம்

தாம்பிர செநதூரததிற சொலலியபடி சுததிசெய்த தாம்பிரம், வீரம், இரசம், சூடன், வெளளைரம வகைககுப பலம-1, பாஷாணம பலம-¼, இவைகளை வெளளெருககம்பாலவிட்டு ஒருநாளாட்டி பிலலை செயது காயவைதது ஓட்டிலிட்டுச சீலைசெய்து செகபுடமபோட பஸ்பமாகும அதில பணவிடை அனுபானஙகளிலிட பிரமேகம மேகம குட்டம் க்ஷயம பவிததிரம சூலை-18, குனமம வாயுவகை பிதத முதலான வியாதிகள் தீரும். பததியம் ஆவினபாலும் அன்னமுங் கொள்ளவும்.

சுத்திசெய்த தாமிரம் விராகனிடை-12, சுத்தம் கெந்தி தாளகம் வகைக்கு விராகனிடை-8, இவைகளை வெள்ளெருக்கம் பாலா லாட்டி வில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு சீலைசெய்து கெஜ புடம்போட்டு அப்பால் சத்திச்சாரணைசாற்றால் ஒருநாளாட்டி முன போற்புடம்போட பஸ்பமாகும் அதில் பணவிடை தேனில்கொள்ள குன்மம் வாரிகவுசி கெண்டைசூலை மூலம்தீரும்.

### வெள்ளிபற்ப செந்தூரம்

சரிகை வெள்ளியை மலசாய்த்தட்டிப் பழுக்கக்காய்ச்சி பழுபாகற் கிழங்குசாற்றில் ஏழுதரம் தோயத்துக் குகையிலவைத்து உருக்கிக் கணவிட்டாடும்போது மகிழம்பூச்சாத்தை சிறுகச்சிறுகவிட்டு ஊதப் பொடியாய்ப்போகும் அதை ௸ சாற்றாலாட்டிக்குகைசெய்துவைத்து மூடி ஏழுசீலைமண்செய்து நூறெருவில புடம்போட நீறும் அதில பணவிடை திப்பிலி லேகியத்திற்கொள்ள சிலேத்மம் 96-ம் சூலையுந் தீரும்.

மேற்படி வெள்ளிபொடிக்குச் சமன் லிங்கஞ்சேர்த்து எருக்கம் பாலும் அரசம்பட்டை; தாமரைக்கிழங்கு, எலுமிச்சம்பழம், இவைக ளின் சாத்திலும் தனித்தனியே அரைத்து வகைக்கொருபுடம் முப்ப தெருவிற்போடச் செந்தூரமாகும் இதை மேற்படி வியாதிகட்கு உப யோகப்படுத்திக் கொள்ளவும்.

### பவள பஸ்பம்

முயலெலும்பைச் சுட்டசாம்பல் பலம்-1, குமரிச்சாத்தாலாட்டி குகையும் மூடியுஞ்செய்து பவளம்பலம்-1, சிறும்பு சடாமாஞ்சில் வீரம் வகைக்கு கழஞ்சு-¼, இவைகளை ௸ இரத்தத்தாலாட்டி காய வைத்து ௸ குகைக்குள்வைத்து ஏழுசீலைசெய்து ஐம்பதெருவில் புடம்போட நீறும் ௸ பஸ்பத்தைச் சீந்திச் சர்க்கரையில் கொள்ள சகல மேகமுந் தீரும்.

எலுமிச்சம்பழச்சாற்றில் பவளத்தை ஒருநாள் ஊறவைத்துக் கழுவிப்போட்டு எருக்கம்பாலால் 3-நாளரைத்து வில்லைசெய்து காய வைத்து முன்போற புடம்போட நீறும்.

கீழ்க்காய் நெல்லியிலையை அரைத்துக் குகைசெய்து அதற்குள் பவளத்தைவைத்து ஏழுசீலைசெய்து முன்போல புடம்போடபஸ்பமா கும் அதை யனுபானங்களில்விட சுரம், குளிர்சன்னி, வயிற்றிரைச்சல், பித்தம், கணப்புகைச்சல், விக்கல், வயிறுளைச்சல்களை இருமல்தீரும்.

ஒருபல பவளத்தை ஒருநாள் தண்ணீரில் ஊறவைத்துக் கழு விப்போட்டு தேட்கொடுக்கிலையை யரைத்துக் குகைபிடித்து அதற் குள் மேற்படி பவளத்தைமூடி ஏழுசீலைசெய்து காயவைத்து முன போற் புடம்போட்டெடுத்துப் பீங்கானிலிட்டு அதின் ஆவின்பால் விட்டு ரவியில் காயவைத்து அப்பால் அதை ஆலம்பழுப்பில் கட்டி

நெறகுழியில 3-நாள புதைததெடுதது அனுபானஙகளிலிட க்ஷயம, ஈளை, மநதாரகாசம், சிறஙகு, சொறிமுதலான மேலகாட்டிய ரோகங கள தீரும.

1-பலம பவளததை எலுமிச்சமபழச சாததிலிட்டு 1-நாள ரவி யிலவைதது கழுவிப்போட்டு இலநதை இலையையாவது தைவேளை யிலையையாவது அரைததுக குகைசெயது அதறகுள வைதது மூடி ஏழுசீலைசெயது காயவைதது முனபோல புடமிடடெடுதது ஒரு பிஙகாணிலிட்டு ஆவினபால ரவியில காயவைதது பேன ஆவினநெயயில கொளள மேகச்சூடு, காஙகை, க்ஷயம, ஈளை, இருமல, நீககடுபபு நீஙகும்.

ஒருபல பவளததை எலுமிச்சமபழச சாததில 2-நாள வரை ஊறவைததுக்கழுவி அதறகுநிகா காபபூரசலாசததுச சேர்ததுப பிரணடைசாததால நாலுசாமமாட்டி வில்லைதட்டிக காயவைதது ஒட்டி விட்டுமூடிச சீலைசெய்து முழுபபுடம்போட நீறும அதைப் புளியாரைச்சாததில இரண்டுசாமமரைதது வில்லைசெய்து முனபோல புடம போட்டு பணவிடைவெணணெயில கொளளஎலும்புருககி, மதுமேகம, அஸ்திமேகம மேகமுதலான ரோகஙகளுந தேனிலகொளள ஊறல குன்மவாயுவுந் தீரும.

நாக பஸ்பம்

இலுப்பைநெய்யில் இருபதுதரம் உருககிச்சாயதது சுததிசெயத அரைப்பல நாகததைக் குகையிலுருக்கிக கணவிடடாடும்போது சிததாமணக்கிலையைக்கசககி அஞசாறு சொட்டுபபிழியச சததமடஙகும இருததிலை விசையாயஊதி மறுபடியும அஞசாறு சொட்டுபபிழிநது மேற்படி வேரால் கிணட மலலிகைபபூப்போல நீறும அதை யனுபானஙகளிலிட வெளளை வெட்டை சிலேததமகுனமமூலம நீஙகும தாதுவிர்ததி யுண்டாகும.

சுததிசெய்த நாகத திடைக்குப்பாதி இரதஞ சேரததுருககி வேலிபபருத்திச சாற்றாலரைதது வில்லைதட்டி காயவைதது அதறகு மேல துத்தியிலையை யரைதது கவசஞசெயது ஏழு சீலை மணசெயது முழுபபுடமபோட நீறும இபபடி மூனறுபுடமபோட்டு வெணணெயில பததியமாய்க்கொள்ள மேறபடி வியாதிகள தீரும.

சுததிசெய்த நாகததிடை ரசஞசேர்ததுருக்கி அதறகு கால பஙகு பெருஙகாயஞசேரதது வேலிபபருததி சாறறாலாட்டி வில்லை செய்து குகையிலவைதது புகையடஙகுமட்டுமூத நீரும வெணணெ யில்கொள்ள மேற்படி வியாதிகள தீரும.

கெருடககல பஸபம

கரூழுஞ் சோற்றில் கடுகசாயைப் பொடிததுப்போட்டுப் பிசைநது வைககத தண்ணீராகும அதில் கெருடக்கல்லைப் போட்டுக்

சேர்த்திக்க வைத்துக் கழுவி ஓட்டிலிட்டு அதற்குக் கீழு மேலும் ஆனை யறுகங் கிழங்கை யிடித்து தூளைப் போட்டு மூடிச் சீலைசெய்து கெச புடம்போட தீரும். வெண்ணெயிற் கொள்ள கடுப்புளலுப்புருக்கி அஸ்தி சுரம அஸ்திவெட்டை மேகவெட்டை தீரும் தேகங் குளிரும் விந் திறுகும்.

## வெள்வங்க பஸ்பம்

புளியமட்டற்கிழங்கை அரைத்து எருமைத்தயிரிற் கலக்கி வங் கத்தை 10-தபா உருக்கிச் சாய்த்துச் சுத்திசெய்த விராகனிடை-3, வாலைரசம விராகனிடை-3, இவைகளை ஒன்றாய்த் தொந்தித்து காப் பூர சலாசத்து விராகனிடை-3, கூட்டிச் சுண்ணாம்பால் 2-சாமமாட்டி பில்லைதட்டி காயவைத்து ஓட்டிலிருட்டுச் சீலைசெய்து 30-யெருவிற புடம்போட்டு மறுபடியும் மேற்படி நீராலாட்டி 3-4-புடம்போட தீரும். மாதளம்பூ விதையை நிழலிலுலர்த்தி அதினிடை சீனிசேர்த் துச் சூரணித்துத் திரிகடிப பிரமாணத்தில் பணவிடை பஸ்பம வைத்து நாளொன்றுக்கு இருநேரமாக மண்டலங்கொள்ள நவமூலம் மெய்நோய் மேகம எலுமபுருக்கி தீரும் நாடி வலுத்துத தாதுண்டா கும காயபன பதார்த்தம நீக்கவும்.

சுத்திசெய்த வெளவங்கத்திற்குப பாதிரசஞ் சேர்த்துருக்கிக் கஞ்சாவிலைச் சாற்றாலாட்டி பில்லைசெய்து காயவைத்து அதற்கு ஷ இலையை யரைத்துக் கவசஞ்செய்து ஓட்டிலிட்டு மூடி மூனபோறு புடம்போட பஸ்பமாகும அதை யனுபானங்களிலிட மேற்படி வியா திகள தீரும்.

கருவங்கத்தைப பிரண்டைச்சாற்றில 10-தபா உருக்கி சாய்த்து சுத்தி செய்தது பலம்-¹, சட்டியிலிட்டு உருக்கி ஆடுதீண்டாபாளை வேரால பஸ்பமாகுமவரை கிண்டி நிறுத்தி அதற்குப பாதரசஞ் சேர்த்து மூக்கரைச்சாரணை சாற்றால 4-சாமமரைத்து 3-புடம்போட தீரும். அனுபானங்களிலிட மேக வியாதிகள் தீரும.

கருவங்கத்திற்குப பாதி ரசஞ் சேர்த்துருக்கி ஆலம்பாலால மெழுகுபோலரைத்து பில்லைகட்டிக் காயவைத்து மருதமபட்டையும உப்புஞ் சேர்த்து இடித்து பில்லைக்குக் கீழு மேலும போட்டு மூடிச் சீலமண் செய்து 30-எருவில புடம்போட்டு மூக்கரைசாரணைச்சாற்று லரைத்து 3-புடம்போடத் தவளம்போல நீறும அனுபானங்களி லிட மேக முதலான வியாதிகள தீரும.

## காப்பூரசலாசத்து பஸ்பம்

கர்ப்பூரசலாசத்தை ஆவின்பாலிலபோட்டு காய்ச்சிக்கழுவி சுத்தி செய்து சிறு செருப்படைச்சாற்றால 4-சாமமாட்டி லேசாய் பில்லை தட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டு சீலைசெய்து 50-எருவிற புடம போடவும இந்தப்படி மேற்படி சாற்றாலாட்டி 3-புடம்போட்டு

ஆவின் வெண்ணெயிற் கொள்ள மேகலரிவு பித்தவெட்டைநீர்க்கடுப்பு நீங்கும்.

மேற்படி 10-யிடை சுத்திசெய்த வெங்காரஞ் சேர்த்து சிறுநீரா லாட்டி பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு சீலைசெய்து ஒரு எரு வில புடம்போட்டு வெண்ணெயிற்கொடுக்க நீர்க்கட்டு நீர்க்கடுப்பு தீரும்.

வெள்ளரிவிரை, விராதத்லைக்கல், மேற்படி பஸ்பம் இவைகளை யரைத்து ½-படி வெள்ளரிக்காய்ச் சாற்றில் ஒரு வேளையும் முள்ளங்கி யைபிடித்து பிழிந்த சாற்றில் ஒருவேளையுங் கொடுக்க கல்லடைப்பு தீரும்.

வெங்காரம், சலாசத்து, லவங்கொம்பு, கல்நார் இவைகளை ஓர் நிறையாய் கல்வத்திலிட்டு பருத்திச்செடிமூலஞ் சுட்டசாம்பல் படி-4, 4-படி சலத்தில் போட்டு கலக்கி 4-ம் நாள் தெளியிறுத்து அந்த தெளிவினால் 4-சாமமரைத்து பில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து 30-எருவிற் புடம்போட்டு அதில் சாரம், சூடன், பூநீர், வீதம் வகைக்கொரு கழஞ்சு சேர்த்து மேற்படி நீரால் 4-சாம மாட்டி பில்லைசெய்து காயவைத்து சுண்ணாம்புப்பொடிக்குள் வைத்து முழுப்புடம்போட நீறும் கறுத்திருந்தால் அண்டவெள்ளைக் கருவினா லரைத்து ஒரு புடம்போட வெளுத்து நீறும் அதற்குப் பாதி சுத்தி செய்த லிங்கஞ் சேர்த்துப் பொடித்து 2-பணவிடை இளநீரிற் கொள்ள பெருவயிறு மகோதரம் கிருச்சனம் கல்லடைப்பு சதை யடைப்பு நீர்ச்சிறுப்பு நீரெரிவு நீர்ச்சுருப்பு நீர்க்கட்டு தீரும்.

சொர்ண பஸ்பம்

தங்கரேக்கை முள்ளிக்கீரைச்சாற்றில் மூன்றுநாளூறவைத்து ரவியிற் காயவைத்து கல்வத்திலிட்டு சித்திரப்பாலைச் சாற்றிலரை போலரைத்து பில்லைதட்டி காயவைத்து அதற்கு மேல்பில்லையை அரைத்துக் கவசஞ்செய்து அகலில்வைத்து 7-சீலை மண்செய்து நூறெருவில் புடம்போடப் பஸ்பமாகும் கவுரியிலைச்சாறு படி-8, சிறுகச்சிறுக ஒருசமட்டியிலிட்டுக் காயவைத்துத்திரட்டி நிறுத்தி அந்த விடை ஆடாதோடையிலையும், ஒருபலப் பூனைக்கும் இரண்டு கழஞ்சு ஷை பஸ்பமுஞ்சேர்த்து மெழுகுபோ லரைத்து நெல்லிக்காயப்போ லுருட்டி எள்ளெண்ணெயில் போட்டு அந்திசந்தி ஒவ்வொரு உருண் டைவீதம் ஆறுமாதஞ் சாப்பிட்டு ஷை எண்ணெயை வாரத்துக்கி ரண்டுமுறை ஸ்நானஞ்செய்து சையோகமும் காப்பன பதார்த்தமுந் தள்ளிவைக்க வெண்குட்ட முதலான சகல குட்டமுந் தீரும்.

கிராம்பை மயனமயப்பொடித்து ஆவின்நெய்யில் மத்தித்து அதிற் பணவிடை தங்கபஸ்பம் வைத்துச் சாப்பிட்டு பாலும் அன்ன மும் புசித்துவர விந்துறும் தாதுகட்டும் தேகம் பலக்கும்.

முத்து பற்பம்

முத்தைச் சங்கம்பழச்சாற்றி லிரண்டுநாளூறவைத்து முள்ளிப் பழச்சாற்றால் மெழுகுபோ லரைத்து பில்லைசெய்து காயவைத்து

ஓட்டிவிட்டுச் சீலைசெய்து முப்பதெருவிற் புடம்போட்டு தங்கபற்பத்துடன சேர்த்து சாப்பிட தாதுகட்டும மேகவியாதிகள் தீரும்.

### அயபஸ்ப செந்தூரம்

நாலு பலம் சுத்திசெய்த அயத்தில மாஞ்செவிக கள்ளிப்பால் விட்டு ரவியிலவைக்க நீறும அதை உத்தமபட்டைச சாற்றால 4-சாம மாட்டி 10-புடமபோடச செந்தூரமாகும் அனுபானத்திலிட தேகம இறுகும் விந்தூறும தாதுகட்டும.

### சிங்கி பற்பம்

மானகொம்பை நாளாய்ப்பிளந்து சிறு துண்டுகளாய்ந்றுக்கி ஒரு நாள் குப்பைமேனிச்சாற்றில ஊறவைத்து ஷை யிலையை யரைத்து கவசஞ்செய்து காயவைத்து ஓட்டில பாப்பி மேலோடு மூடிச சுந்து வாய் சீலைமண்செய்து 50-தெருவிற புடமபோட்டெடுத்து ஆவின பாலவிட் டரைத்து பிலலைதட்டிக் காயவைத்து முனபோற புடம் போட பஸ்பமாகும அனுபானங்களில ஷை பஸ்பத்துடன பவளபற பஞ்சோத்துக்கொடுக்க நீரடைப்பு கலலடைப்பு சதையடைப்பு நீ ரெரிவு க்ஷயம சுளை இருமல் உஷ்ணம மேககாஙகை தீரும.

மானகொம்பை இழைத்து கோவைச்சாற்றிறுல ஒருநாளூற வைத்து மறுநாள் நனருய் காயவைத்து ஓட்டிவிட்டுச சீலைசெயது முனபோற புடமபோட நீறும அதை யனுபானஙகளிலிட மேற காட்டிய வியாதிகள தீரும.

### கல்நார் பஸ்பம்

கல்நாரைச சிறுதுண்டாய்ப பிளந்து ஓட்டிவிட்டு அதற்கு கீழு மேலும சோஙகிலவபட்டையை இடித்துபபோட்டு அபபால ஷை பட்டைக கியாழமவிட்டரைத்து 3-புடமபோட தவளமபோல நீறும தேனிலாவது தூதுவேளை லேகியத்திலாவதுகொளள சிலேத்மநோய் 96-நீஙகும் மேககாஙகை தீரும. பறபத்தை பலவிளககத தாத மிறுகும்.

### பஞ்சலவண பஸ்பம்

பஞ்சலவணம வகைககு பலம-$\frac{1}{2}$, கல்வத்திட்டு பிரணடை, முருங்கைப்பட்டை, குப்பைமேனி, கொசகி, குமரி இவைகளின சாற்றால வகைககு ஒருசாம மறைத்து பிலலைதட்டிக காயவைத்து ஓட்டிவிட்டுச் சீலைசெய்து பத்தெருவிற புடமபோடபபறபமாகும அதறகு நாவிலொனறு பெருஙகாயஞ் சோத்து நெய்விட்டு மெழுகுபோலரைத்து சிமிளில வைத்துககொணடு வேளைககொரு கழஞ்சு வீதம வியாதியின பலத்துககுத தகுநதபடி $\frac{1}{2}$-மணடலம $\frac{3}{4}$-மணடலங கொள்ள வாதம வாயுகுறறல குடறபுரட்டல வயிறறுப்பொருமல செரியாமை மநதம மநதாரம நீஙகும்.

## பற்பப் படலம் முற்றிற்று.

# திராவகப்படலம்

---

அதாவது சகலவிதமான லவணவகை உபரசங்களை கிளாசுப் பாத்திரங்களிலும் வாலைப பாத்திரங்களிலும் புட்டி வகைகளிலும் நீரை பெருக புகைநீர பிடிததால திராவகப் படலமெனப் பெயர பெறறது.

50-ஆணடு பிரயோகிககலாம்

## விருததம

சொனனேரெ திராவகததின மாாககமெலலாஞ
 சுலபமாய்பலநூலு மெலலாம்பாாதது
பனனவேலோகஙகள நீறுமாாககம
 பாடினார்நீததினஙகளு சுருககுவேதை
எனனவெயிநநூலபோ லாருஞசொலலாா
 எனமககாளுஙகளுககு வுரைததேனயானும்
மனனேகேள் ஆதமாடசாமிாதததை
 மணடலததிறபணடிதறகா யரைநதிட்டோமோ.

## மகா திராவகம

எருககு, துததி, தாழை, முருஙகை, ஊமததை, நாயுருவி, பிரண்டை, அறுகு, சிததிரமூலம, தென்னோலை, வாழைககிழஙகு, குப்பைமேனி அறுகு இவைகளை சுடடசாமபல வகைககுப படி-1, வெறுபாணடததி விடடு ஒவவொன்றிலும 4-படி சலமவிடடுக கரைதது வைதது நாலாநாள தெளிவிறுததுகாய்ச்சி குழமபுபததில பீஙகாணிலவிடடு மோர்தெளித்து இரவில பனியிலவைகக உபபு நிறைநதிருககும அதை ரவியில காயவைதது வகைகது பலம்-3, கலலுபபு, வளைய லுப்பு, இநதுப்பு, நவாசசாரம, வெணமையாயவறுதத துருசு, துததம, பூநா வகைககு பலம்-5, சிவககவருதத அனனபேதி பலம்-15, சவுட்டுபபு பலம்-[illegible]0, சீனம பலம்-700, ஐஙகாயகாசசல, செயயுபபு பலம்-10, இவைகளை பொடிதது 3-பஙகுசெயது ஒருபஙகைக கலசததிலிடடு நனறாய் வெநத செஙகலலை வடடமாயுரைதது அதினடுவில பெருவிரல ஒடததக்கத தமரிடடு அதைககவசவாயிற பொருநத மூடி ஏழுசீலை மணசெய்து காயவைததததினமேல தூாபோதத சீசா வைததுச சீலைசெய்து அடுபபேறறி தீயெரிதது பொடிதது கலசததிவிட்டு திராவகம் வடிதது சீசாவி லடைததுக கொணடு 1-முதல 15-துளிவரை தண்ணீர் கியாழ முதலான அனுபானஙகளிலிட வயிறறுவலி குனமம பீலிகை நீராமை கவுசி சொணடை பெருவயிறு வாயுததிரடடி காசசல கட்டி சூதகவாயு சூதகததிரடசி மகோதர முதலான் உதரரோகஙகள தீரும உவாசிணணுனு சுணணாமபுததண ணீரில் கரைதது அதில முதிாநத காககாய்ச சிபபியைபபோட்டு

வெள்ருக்குமவளை காசரி சுத்திசெய்து பொடித்து ஷை திராவகத்தி லிட்டுக் கரைத்து செலவாகும் அந்தச் சலத்தை யிறுத்துக்கொண்டு அடியிலுறைந்திருக்கும் மஷ்டியைச் சாரத்திற்கு அட்டிப் பூட்டிப் புடம் போட்டு கட்டும் அதை ஷை செயநீரா லரைத்து வீரத்தைத்தப்பூசி அபிரகப பொடியிலவைத்து புடம்போட்டுக் கட்டும் கட்டின வீரஞ் சாரம் வகைக்கு பணவிடை-1, சூலம் பலம்-1, இவைகளை மேற்படி நீராலாட்டிக் குகையிலவைத்து ஊதக் கட்டும்.

நாயுருவி தாழை, மேனி, சிறுசின்னி, வாழை, தென்னை, வெள் ளறுகு, உமரிகள்ளி-இவைகளின் உப்பு வகைக்கு பலம்-10, சீனம் பலம்-5, பூநீர்சூட்டன சாரம் வெளுக்க வறுத்த துருசு சிவக்க வறுத்த அன்னபேதி பாஷாணம் வகைக்கு பலம்-$\frac{1}{4}$, சுத்திசெய்த சிப்பி பலம் கால இவைகளை பொடித்து 3-பங்குசெய்து முனபோல திராவகமிறக் கவும் இதில நவலோகமும் நீறும் செந்தூரமாகும்.

## சங்கத திராவகம்

அஞ்சாங்காய்ச்சல் வெடியுப்பு பலம்-6, சீனம் இந்துப்பு வகைக் குப் பலம்-3, சிவசக அன்னபேதி பலமேழரை வெளுக்க வறுத்த துருசு கரியுப்பு வகைக்குப் பலம்-2, சாரம பூநீர் வகைக்கு பலம்-1, பொரிகாரம பலம்-$\frac{1}{4}$, இவைகளை பொடித்து 3-பங்கு செய்து முன் போல திராவகம வடித்து அனுபானங்களிலிட ஷை வியாதிகள் தீரும்; நவலோகம பாஷாணஞ் சுரக்கும தீரும.

## சீனத் திராவகம

அஞ்சாங்காய்ச்சல வெடியுப்பு பலம்-15, சீனம பலம்-10, கல் லுப்பு, சவுட்டுப்பு, வளையலுப்பு, பூநீ வகைக்கு பலம்-2, இந்துப்பு சாரம் வகைக்கு பலம்-1, நாயுருவி உப்பு பலம்-3, சிவக்க வறுத்த அன்னபேதி பலம்-5, இவைகளை பொடித்து 3-பங்கு செய்து முன போல திராகவம் வடித்து அனுபானங்களிலிட ஷைவியாதிகள் தீரும். நவலோகச சத்துக்களின வீரஞ்சேர்த்து ஷை திராவகம் விட்டரைக்க ரசமாகும்.

## கெந்தகத் திராவகம்

கெந்தகம பூநீர் வகைக்குப் பலம்-10, சீனம பலம்-20, வெடி யுப்பு பலம்-4 , கலலுப்பு-5, இவைகளைப் பொடித்து பனியில வைத்து மெழுகுபோலாட்டி உலர்த்தி பொடித்து 3-பங்கு செய்து முன்போல திராவகம் வடித்து அதில துருசை கரைத்து ரவியில வைக்க தீறும அதற்கு நிகர் காரஞ்சேர்த்து அரைக்கச் செயநீராகும் வீரத்தை வைத்துவாட்ட மெழுகாகும.

## பஞ்சலவணத திராவகம்

வெடியுப்பு சீனம் கரியுப்பு வகைக்குப் பலம்-3, நவாச்சாரம் வெண்காரம் வகைக்குப் பலம்-1$\frac{1}{4}$, இவைகளை பொடித்து திராவகம்

### சாதஞ்செரியாமற் சோறுசோறாய் மலங்கழிந்தால்

1-படி பிரண்டைத்தண்டைச் சிறுக நறுக்கிப்போட்டு 2-விராகனிடை ஓமத்தைக் கூடப்போட்டு பொரியும்போது 1-படி தண்ணீர் விட்டு அரைக்காற்படியாக வற்றவைத்துக் கொடுக்கத் தீரும்.

### அரைவீட்டில் வயிற்றிற் சீய்கட்டி ஷரக்ஷி தோஷங்கண்டால்

திரிகடுகு, ஆக்கிராகாரம், அதிமதுரம், நற்சீரகம், சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, மாசிக்காய் வகைக்கு விராகனிடை-2, இவைகளை வெதுப்பி கஸ்தூரி விராகனிடை-½, கோரோசனைவிராகனிடை-10, கூடப்போட்டுத் தேனில் மத்தித்துச் சிறுகழற்காயப் பிரமாணம் உள்ளுக்குக் கொடுத்து 4-நாழிகைக்குப்பின்பு முற்றின வேப்பம்பட்டை பலம்-1, மஞ்சள் பலம்-½, இடித்து 2-படி தண்ணீர்விட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து இந்தப்படி 5-நாள் கொடுக்க வயிற்றுவலி சீய்க்கட்டு நாவரட்சி தோஷமுதலான குற்றங்கள் நீங்கும்.

### தலைபேனுக்கு மாரணம்

இரசத்தை கருஊமத்தமிலைச் சாற்றிலாவது மேனிசாற்றிலாவது அரைத்துப் பழந்துணியிலாவது நூலிலாவது தடவி நிழலிலுலர்த்தி சிரசிற் சுற்றிவைக்க மூன்றுசாமத்திற்குள் பேனெல்லாம் உதிர்ந்துபோகும்.

### மேகப்புண் முதலான ரணங்களுக்குத் தயிலம்

சங்கம்வேர், பூவரசம்பட்டை, சிவனார்வேம்பு, வாலுளுவையரிசியும் இவைகளை ஓர் நிறையாய்க் குழித்தயிலமிறக்கி உள்ளுக்குக் கொடுத்து உடம்பிலும்பூச மேகத்திற்பிறந்த சகல புண் புரைகள் ஆறும்.

### நாக்கிலும் உதட்டிலுமுண்டாகும் புண்ணுக்கு

ஆவின்பால் சிற்றாமணக்கெண்ணெய் வகைக்குப்படி-½, கலந்ததில வெந்தயம், வெங்காயம், மயிர்மாணிக்கம், மூலிவகைக்கு பலம்-¼, அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்துக் காலையில் ஒருகரண்டிவீதஞ் சாப்பிட்டுவர மூன்றுசுருட்டு தணிந்து புண் ஆறும்.

### எச்சிற்தழும்பு படாதாமரை தழுதனைப்பற்றுக்கு

பூரசம்விரையை எலுமிச்சம்பழச் சாற்றிலுரைத்துப் போடக் கொப்பளித்து நீராய்வடிந்து மாறிப்போகும்.

எருக்கம் வேர்ப்பட்டையையும் தகரை விரையையும் எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்துப் பூசிவர மாறும்.

## மருந்துவகைப் படலம் முற்றிற்று.

---

# பிளாஸ்திரிப் படலம்

அதாவது சகல ரணங்களை ஆற்றுதலாம்

10-திங்கள் ப்ரயோகிக்கலாம்

வெள்ளைக் குங்கிலியத்தையும், வெள்ளை மெழுகையும் ஓர் நிறையாய்ச் சட்டியிலிட்டு உருகும்போது தேங்காய் நெய்வார்த்து உருக்கித் தண்ணீரில் வடிகட்டி எடுத்து வைத்துக்கொண்டு துணியிற்பூசி அனலில் வாட்டிப்போட ரணங்கள் சிரங்குப்புண் தீரும்.

வெள்ளைக்குங்கிலியம் பலம்-5, ரசகற்பூரம் விராகனிடை-5, தேங்காய் நெய்விட்டு அரைத்து அப்பால் தண்ணீர்விட்டு தவளம்போலாகும் வரை குழவியால் மத்தித்துப் புண்ணிற்போட ஆறும்.

ரசம் விராகனிடை-1, கெந்தகம் விராகனிடை-1, மிருதார்சிங்கி, நற்சீரகம் வகைக்கு விராகனிடை-2, கருஞ்சீரகம் விராகனிடை-6, துத்தம் விராகனிடை-½, இவைகளை வெண்ணெயில் மெழுகுபோல் ஆட்டிச் சிரங்கிற்பூச ஆறும்.

நல்லெண்ணெயும் மெழுகும் உருக்கியதில் வங்கச்செந்தூரம் விராகனிடை-3, காவிக்கல், மிருதாரசிங்கி, மிளகு வகைக்கு விராகனிடை-1, துத்தம் விராகனிடை-½, இவைகளைப் பொடித்துத் தனித்தனியே போட்டுக் கிண்டி எடுத்துக்கொண்டு சகல ரணமும் நெருப்புப்பட்ட புண்ணும் ஆறும்.

தேங்காயெண்ணெயும் வெள்ளைமெழுகும் சேர்த்துருக்கி அதில் ரசகற்பூரம், துருசு, மிருதாரசிங்கி சமமாய்ப் பொடித்துத் தூவிக் கிண்டி எடுத்துப்போடத் தீராச்சிரங்கு தீரும்.

நல்லெண்ணெயில் 2-விராகனிடை தேன்மெழுகைப் போட்டு உருக்கி அதில் வெள்ளைக்குங்கிலியம் விராகனிடை-1, மிருதாரசிங்கி விராகனிடை-1¼, துருசு விராகனிடை-½, இவைகளை வெவ்வேறே பொடித்துத் தூவிக்கிண்டி கல்வத்திலிட்டு தண்ணீர்விட்டரைத்து நாலாறுதரம் கழுவிச் சிமிளில் வைத்துக்கொண்டு துணியிற்றடவிப் போட சகலவித புண்களும் ஆறும்.

எருக்கம்வேர்ப்பட்டை, அவுரிவேர்ப்பட்டை, வெந்தோன்றிக் கிழங்கு, குன்றிமணிப்பருப்பு, காஞ்சிரைவிரை, கலைச்சுருளிவேர், கஞ்சாயிலை, வசம்பு, பெருங்காயம் இவைகளை ஓர்நிறையாய் வெள்ளுள்ளித் தயிலத்தாற் களிம்புபோலாட்டி சிமிளில் வைத்துக்கொண்டு பூசக் கண்டமாலை பவுத்திரம் விப்புருதி வீக்கம் படைப்பு தொடைவாழை அரையாப்பு முதலியவை வற்றும் உடையும்.

வேப்பெண்ணெயில் பூண்டு, வேம்பாடம்பட்டை, துத்தம், கெந்தகம், சூதகம், காசுக்கட்டி, துருசு, நாவிக்கிழங்கு, குங்கிலியம், குக்கில், மிருதாரசிங்கி, தகரம் இவைகளைப் பொடித்துப்போட்டுக் காய்ச்சிச் செடி ரணங்களிற்றடவ ஆறும்.

அக்கிக்கு

ஊமத்திலையை அரைத்து எருமைவெண்ணெயிற குழைத்து அக்கிமேற பூசிவர மாறும.

காது வார

நிலப்பனைக்கிழங்கு, அமுக்கரா கிழங்கு, ஆனைத்திப்பிலி, செங்கழுநீர்க் கிழங்கு இவைகளை ஓர் நிறையாய் எருமை வெண்ணெயில கருமபுபோ லரைத்து காதிறபட்டுவர காது நன்றாய் வளரும.

மயிர்க்[illegible]றுக்கு

மயி[illegible]ரிக்கி எருமை வெண்ணெயிற் குழைத்துப போட்டாலும பசலியிலையை யரைத்து எருமை வெண்ணெயிற குழைத்துப போட்டாலும மஞ்சளைச்சுட்டு [illegible]லெண்ணெயி லுரைத்துப போட்டாலும நீங்கும.

தீச்சுட்ட புண்ணுக்கு

சுண்ணும்பும் எருக்கம்பூவும ஓர் நிறையா யரைத்துப்பூச தீச்சுட்ட காந்தலடங்கும திருவாத்தியிலையை வறுத்துப்பொடித்து புண்ணிறபோட ஆறும ஒரு சட்டியுற புளித்த தண்ணீரிறபோட்டு வேடு கட்டி திருவாத்தியிலையை யிடித்து அதனமேல வைத்துப பிட்டவித்துப புண்ணில வைத்துககட்டத் தீரும.

வேப்பங்கொழுந்தைச் சிதைத்து ஆமணக்கிலையிற பொதிந்து உமிககாந்தலிற புதைத்து வெந்த பததிலெடுத்துக கட்டிவரத் தீச்சுட்டப்புண ணீங்கும.

நரம்புச சிலந்திக்கு

மிளகு, அவுரிவேர்ப்பட்டை, [illegible]னிலை வகைக்கு பலம்-1½, பெருங்காயம விராகனிடை-1, இவைகளை யரைத்துப புளியங்கொட்டைப பிரமாணம ஆ[illegible]ராந்திசந்தி உள்ளுக்குக கொடுத்து ஒரு உண்டையை உரை[illegible] நரம்பு சிலந்தியின்மேறி போட்டுக காலையில வெந்நீர்விட்டுக கழுவிவர நீங்கும கடும்பத்தியம்.

பித்த வெடிப்புக்கு

உப்பு செம்பரிச்சாணி அரசம்பட்டை வகைக்கு பலம்-1, எருக்கம்பூ பலம்-3, இவைகளை யிடித்து வடித்துத துணியில முடிந்து ஒத்தடஞ்செய்து சீரகம விராகனிடை-1, சுண்ணும்பு விராகனிடை 3-துருசு விராகனிடை-5, இவைகளை எருமைமெண்ணெயிற களிப்பு, போலரைத்து வெடிப்பிற போட்டுவர நீங்கும்.

மருதிலையில் ஆவின்பால விட்டிடித்துப பிழிந்தசாறு கால் படி வீதம மூன்றுநாள் தலைக்குத தண்ணீர வார்க்கத்தீரும.

கன்ன வீக்கத்திற்கு

சிற்றகத்தியிலையும வசம்பு அரிசியும ஓர்நிறையாயரைத்துப் பூசினுலும ஆற்றுக்குருவேரும அரிசியும ஓர் நிறையாயரைத்து பூசினுலும் வற்றும்.

நாவிக்கிழங்கு, இலிங்கம், அரிதாரம், குக்கில், கரியபவளம், அபின், பெருங்காயம் இவைகளை வெடிபாலவிட்டரைத்து பூச தீரும்.

இரணங்களுக்குப் போடும் தயிலம்

அஞ்சனக்கல், சிமிளை, காசுக்கட்டி, சூதம், அரிதாரம், மிருதார்சிங்கி, குக்கில், பச்சை, வசம்பு, ... வகைக்கு கழஞ்சு-1, இவைகளை பொடித்து புங்கம்பால், உதி... பால், எள்ளெண்ணெய் வகைக்கு படி-1, ஒன்றாய் கலந்து அதில் ... பதமாய்க் காய்ச்சி வடித்து பிளவை புத்துபவுந்திரம், வெடிகுஷ்டம், கணைப்புண், மூளை ஆறுரணங்களிற் போடத் தீரும்.

தேங்காய், நெய், புங்கம்பால், உதியம்பால் இவைகளை ஒன்றாய்க் கலந்து ... மிரிதாரசிங்கி, கெந்தகம், நீலம், சூதம், சீனம், பரங்கிப்பட்டை, கடுக்காய், துத்தம், ...ளரி, வசம்பு வகைக்கு கழஞ்சு-1, பொடித்துப்போட்டு காய்ச்சி வடித்து ஆறுதபுண் அரைப்பிளவை படுகிறது... ருகிற ... ஙகிப்புண் குஷ்டப்புண் எலிகடிப்புண் பவுத்திர பிளவை எலிகடியி... லுண்டான குஷ்டப் புடைப்புடைப்பு கட்டுக்கும் போடத் தீரும்.

எள் ளெண்ணெய், ..., வகையப்பால், புங்கம்பால், உதியம்பால், வகைக்கு படி-1, ஒன்றாய்க் கலந்து அதில் சூதம், கெந்தி, துருசு, துத்தம், குக்கில், அவுரி, காசுக்கட்டி, சீனம், பச்சை, வெள்ளுள்ளி, வசம்பு, மஞ்சள், வகைக்கு கழஞ்சு-1, பொடித்துப்போட்டுக் காய்ச்சி வடித்துப்போட புண் புரை பவுத்திரப்புண் தீரும்.

பிளாஸ்திரிப் படலம் முற்றிற்று.

# முப்புப்படலம்

அதாவது சகல அவுஷதங்களுக்கும் குரு பற்பமென்றுஞ் சொல்லப்படும்.

தை மாசி பங்குனியாக மூன்றில் விளைகின்ற தாரணமாக பூநீரை 10-வீசை சுத்தசலத்தில் கரைத்துத் தெளிவிறுத்து ரவியிற் காயவைக்கச் சுத்தியாகும் அதுபோற் கரியுப்பும் சுத்தியாகும் அமுரியில் பூநீரைக் கரைத்து அதில் பாறையுப்பை பாக்களவா யுடைத்துப் போட்டுக் காய்ச்சி வற்றவைத்து சுத்த சலத்திற் கழுவி யுலாத்திக் கல்வத்திட்டு அண்டவெள்ளைக் கருவால் மெழுகுபோ லாட்டித் துட்டிடை வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி 7-சீலை செய்து உலையில் வைத்தூதச் சுண்ணமாகும் அதை பீங்கானிலிட்டு சுத்த சலம்விட்டு மண்டலம் வைத்தெடுக்க உப்பு விளைந்திருக்கும் இந்த 3-வகைப்பூ, பச்சைக்கற்பூரம் வகைக்கு பலம்-1, இவைகளை வெண்கருவால் 2-சாமமாட்டி வில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு மூடி 7-சீலைசெய்து 50-எருவிற் புடம்போட்டு வீரம், பூரம், புனுகு,

குருவண்டு, நாவி வகைக்கு கழஞ்சு-1, இச்சரக்கை எலுமிச்சம்பழச்சாற்றில் 3-நாளாட்டி வில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு மூடி 7-சீலை செய்து கோழிப்புடம் போட்டெடுத்துக்கொண்டு அதில் கழஞ்சு வெள்வங்கத்திறப்பூசி [illegible] அந்தரத் தாமரையை யரைத்து அங்கி பூட்டி புடம்போட சுண்ணமாம் [illegible] சகல ரோகங்களுந்தீரும்.

### சிங் [illegible] ணன்ம்

4-படி அமுரியில் 1-படி [illegible] கரைத்து நாலாம்நாள் ஒரு படி தெளியவிறுத்துப் பீங்கானில் விட்டு அதில் வீரம், சாரம், சீனம் வகைக்கு பலம்-1, மிருதார் சிங்கி பலம்-2, முப்புச்சுண்ணம் கழஞ்சு-1, இவைகளை மயனமாய் பொடித்துப் போட்டு அயக்காம்பாற் கிண்டி ரவியில் வைக்க நீரெல்லாம் வற்றும் அதின்மேல் ஒரு பட்சம் ரவியில் வைக்க முத்துப்போல் பீங்கானில் விளையும் அப்படி விளைவதை யெல்லாம் வழித்துப் பீங்கானிலிட்டு ரவியில் வைக்க சுத்த வெண்மையாய் நீறிச் சுண்ணமாகும் இதனால் சகல ரோகங்களும் சீனச்சருக்கு 94-ம் நீங்கும்.

### லோக மாரணம்

பாஷாணம், நவச்சாரம், சீனம், [illegible]ம், வெடியுப்பு, காரம், [illegible]தம், முப்பு, கெந்தி, குருச்சுண்ணம் இவைகளை ஓர்நிறையாய் எலுமிச்சம்பழச் சாற்றில் மெழுகுபோலரைத்து [illegible] இடைக்கிடை அருந்தப் பூசி அவைகட்குரிய மூலிகைகளை யரைத்து அங்கி பூட்டி ஓட்டிலிட்டு மூடிச் சீலைசெய்து கெஜபுடம்போட்டத் தீரும்.

### எரிப்புத் திட்டம்

2-விராகனெடைக்கு-1, தீபம் விராகு-[illegible], [illegible]மலை விராகு-2, அல்லது-5, காட்டக்கினியாம்.

### புடத் திட்டம்

1-பலம் கொண்ட காடை[illegible]-1, [illegible] 2-காடை எரு, 3-கவுதாரி எரு, 10-குக்குட எரு, [illegible]-வராகம் எரு, 100-கெஜம் எரு, 1000-கனபுடம்.

### ஊதுத் திட்டம்

சுண்ணத்திற்குத் துருத்தி-1, உருக்கினதற்குத் துருத்தி-2, சத்துக்குத் துருத்தி-4,

திரிகடி என்பது 3-விராகனிடைப் பிரமாணம்.

கழற்சி என்பது 1¼-விராகனிடை.

கழற்சிக்கா யென்பது கெச்சைக்காய்ப் பிரமாணம்.

துலாம் என்பது ரூபா எடை.

ஆதமரட்சாமிர்தமென்னும் வயித்திய சாரசங்கிரகம் முற்றுப்பெற்றது.

---

திருமகள் விலாசம் பிரஸ், சென்னை.—1934.

# ஹஸ்த ரேகை சாஸ்திரம்

(சகதிதா... ன் எழுதியது)

[நூற்றுக்கணக்கான படங்களுடன் கூடியது: விலை ரூபா 2.]

விளக்கமான அநேக படங்கள் அடங்கிய இச் செந்தமிழ் வசன நூலிலிருந்து ஆயுள், விவாக லாபம், குணம், பக்தி, அதிகாரம், சந்தானம், அறிவு, சிற்றின்பம், வியாஜ்ஜியம், ... ஐசுவரியம், கண்டம், ஜயம், வியாதி, அபாயம், ...சகம், பேரின்பம், காரிய சித்தி, செளக்கியம், தனம், அஜீரணம், இல்லற சுகம், மரணம் முதலிய விஷயங்... ...பமாகத் தெரிந்துகொள்ள லா... அன்றியும், இது விதியின் பலனையும், வாழ்க்கையின் இரகசியங்களையும், இன்னும் அநேக மர்மங்களையும் வெளிப்படுத்துகிற திறவுகோலாக இருக்கிறது ... மூக்காம ... வரலாறுகளையும் அறிய இவ்வனுபவ நூல துணையாகும். உங்கள் கையிலுள்ள ரேகைப் பலன்களைச் சுலபமாய் நீங்களே தெரிந்து கொள்ளலாம்.

# பூலோக இன்பதுன்பம்

[விலை அணா 6.]

இது மானதர்களை ... மனதைக் களிக்கச்செய்யும் அற்புதவியாசங்கள் உலகநடவடிக்கை... ல ஏற்படும் இன்ப துன்பங்களை தத்ரூபமாய் படிப்போர் இன்புறுமபடி எழுதப்பட்டிருக்கிறது. இதில் திருச்சந்த, அரிச்சந்திரன் முதலியோரின், சரித்திரத்தை உவமானங்களாகக் காட்டியும், லௌகீகமார்க்கத்தி னியல்பையும், பாபத்திற் கேதுவான அதர்மங்களைக் குறிக்கும் பல அரிய கதைகளையும் சோதது, வாஞ்சசிரம தாமங்களையும், துறவற இல்லற தாமங்களையும், பதிவிரதா லட்சணங்களையும், பெற்றோர் கடமை, தனநாசம, மதுபானம, மாமியார் துன்பம் முதலிய உலகானுபவங்களையும் விளக்கியிருக்கின்றது.

மேலலா புஸ்தகங்கள அடங்கிய கிரய ஜாபிதா தேவையுள்ளவாகள தங்கள விலாசததைத தெரிவிததால இனாமாக அனுப்பப்படும

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

நெ. 41, வெங்கடாமய்யர் தெரு, மினட்பிலடிங் போஸ்டு, சென்னை.